

# மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)

## தொலைநிலைக் கல்வி இயக்ககம்



www.mkudde.org

# எம்.காம்

## இரண்டாம் ஆண்டு




S 1094

# உயர் கணக்கியல் - தொகுதி I



# மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)

## தொலைநிலைக் கல்வி இயக்ககம்



www.mkudde.org

வணிகவியல்

# எம்.காம்.

இரண்டாம் ஆண்டு

பிரிவு – ஏ

## உயர் கணக்கியல்

தொகுதி – I

பாடம் 1–5

**S 1094**

# முகவுரை

ஒரு வியாபார நடவடிக்கை புரிவதற்கு ஓர் அமைப்பு தேவை. இந்த வியாபார அமைப்பு மூலமே நடவடிக்கைகள் இயக்கப்பட்டு, கட்டுப்படுத்தப்படுகின்றன. ஒரு நபர் அல்லது குழுவாக சேர்ந்த நபர்கள் இந்த அமைப்பை உருவாக்குகிறார்கள். பல நபர்கள் ஒன்று சேரும் பொழுது, அதிகமாக கூட்டுத் திறமை வெளிப்படுவதால் அவர்களால் அதிகமாக சாதிக்க முடிகின்றது. இந்த அதிக நன்மைகளைப் பெறுவதற்கு அவர்கள் தங்களுடைய தனிப்பட்ட விருப்பு மற்றும் வெறுப்புக்களை களைய வேண்டியுள்ளது. ஆனால், இந்த அமைப்பு, வரையறு பொறுப்பு மற்றும் வரையறா பொறுப்பு என்ற அடிப்படையில் தன்னுடைய நடவடிக்கை எல்லைகளை விரிவாகவோ அல்லது சிறு அளவிலோ வைத்துக் கொள்ள வேண்டியுள்ளது.

வியாபார நடவடிக்கைகளை பதிந்து கணக்குகள் தயாரிப்பது என்பது எந்த ஒரு வியாபார அமைப்பிற்கும் அவசியமான ஒன்றாகும். கணக்குகள் தயாரிக்கும் முறையானது, அந்தந்த அமைப்புகளை கட்டுப்படுத்தும் சட்ட ஷரத்துகளை பொருத்ததாகும். இன்றைய நவீன உலகில், அகில இந்திய அளவிலும், அகில உலக அளவிலும் ஒத்துக் கொள்ளக்கூடிய வகையில் சில பதங்கள் விளக்கப்பட்டு கணக்குகள் அதன் அடிப்படையில் தயாரிக்கப்படுவதால் ஒரு அமைப்பின் கணக்குகள் அகில உலக அளவில் ஒத்துக்கொள்ளப்படுகின்றன.

# பாடத்திட்டம்

## பிரிவு — ஏ

## உயர் கணக்கியல்

பகுதி 1 : கூட்டு வணிகக் கணக்குகள் — கூட்டாளியைச் சேர்த்தல், விலகுதல், மரணமடைதல் ஆகியவை தொடர்பான கணக்குகள் — நிறுவனக் கலைப்பு மற்றும் இணைப்பு – ஒரு கம்பெனிக்கு விற்கப்படுதல்.

பகுதி 2 : வாடகைக் கொள்முதல் மற்றும் தவணைக் கொள்முதல் முறைகள் தொடர்பான கணக்குகள் மற்றும் உரிமைத் தொகைகள்.

பகுதி 3 : நொடிப்புக் கணக்கு (நிறுவனங்கள் மற்றும் தனி நபர்கள்)

பகுதி 4 : கூட்டுப் பங்கு கம்பெனிகளது கணக்குகள் — பங்குகள், கடன் பத்திரங்கள் முடிவுக் கணக்குகள் — நன்மதிப்பு மற்றும் பங்குகள் மதிப்பீடு செய்தல் — பதிவுக்கு முந்திய மற்றும் பிந்திய இலாபம் —இணைப்பு, ஈர்ப்பு, மறு அமைப்பு (உள் மற்றும் வெளி ஆகிய இரண்டும்)

பகுதி 5 : கலைப்பு

பகுதி 6 : பிடிப்புப் கம்பெனிகள்

பகுதி 7 : வங்கிக் கம்பெனிகளது கணக்குகள்

பகுதி 8 : காப்பீட்டுக் கணக்குகள்

பகுதி 9 : இரட்டைக் கணக்கு முறை உள்ளிட்ட மின்சாரக் கம்பெனிகள் பற்றிய கணக்குகள்.

பகுதி 10 : விலை அளவு மாறுதல் பற்றிய கணக்கு – மனிதவள கணக்கு – குத்தகைக்கான கணக்கு – சமூகக் கணக்கு

# பொருளடக்கம்

# பாடம் — 1

# கூட்டு வணிகக் கணக்குகள்

கட்டமைப்பு

1.0 அறிமுகம்

1.1 கற்றல் நோக்கங்கள்

1.2 கூட்டு வணிக உடன்படிக்கை அல்லது வணிகப் பத்திரம்

1.2.1 கூட்டாளியின் முதல்

1.2.2. முடிவுக் கணக்குகள்

1.3. புதிய கூட்டாளிகளை சேர்த்தல்

1.3.1 நன்மதிப்பு

1.4. கூட்டாளி விலகுதல்

1.5. கூட்டாளி மரணமடைதல்

1.6. கூட்டு வணிக நிறுவனத்தின் கலைப்பு

1.6.1 கணக்குகளைத் தீர்த்தல்

1.6.2. கணக்கு எழுதும் முறை

1.7. கூட்டாளிகளின் நொடிப்பு நிலை

1.7.1. கார்னர். முர்ரே

1.8. படிப்படியாக வழங்குதல்

1.9. கூட்டு வணிக நிறுவனங்களை இணைத்தல்

1.10. கூட்டு நிறுவனத்தை கம்பெனியாக மாற்றுதல் அல்லது கம்பெனிக்கு விற்றல்

1.11 அருஞ்சொற்கள்

1.12 தொகுத்தறிவோம்

1.13. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

1.14. மாதிரி வினாக்கள்

குறிப்பு

## 1.0 அறிமுகம்:

இன்றைய நவீன உலகில் வணிக வளர்ச்சிக்கு, பேரளவு முதல், சிறப்பு மேலாண்மை, இடர்பாடுகளை பரவலாக்குதல் மற்றும் தனிச்சிறப்பு வாய்ந்த ஞானம் போன்ற தேவைகளை கண்டிப்பாக பூர்த்தி செய்ய வேண்டியுள்ளதால், தனியார் வணிகத்தை விட, கூட்டாண்மை வணிகம் பெரிதும் வளர்ச்சியடைந்துள்ளது. ஒரு கூட்டு இந்து குடும்பத்தில் உறவு பிறப்பால் நிர்ணயிக்கப்படுகிறது. கூட்டாளிகளுக்கிடையேயான உறவு ஒப்பந்தத்தால் மட்டுமேயின்றி, தகுதி நிலையினால் உருவாகுவதில்லை. ஒன்றுக்கு மேற்பட்ட உரிமையாளர்கள் இருக்கும்பட்சத்தில் திட்டவட்டமான நடைமுறைகள் மட்டும் கட்டுப்பாடுகள் இருக்க வேண்டும். அப்பொழுதுதான், பின்பு புதிய கூட்டாளிகளை சேர்க்கும் பொழுது, கூட்டாளி விலகும் பொழுது, மரணமடைதல் மற்றும் நமது கூட்டாண்மை வணிகத்தில் பிறர்க்கு விற்றல் அல்லது கலைத்தல் போன்ற சம்பங்கள் நடக்கும் பொழுது கட்டுக்கோப்பான முறையில் அவைகளை எதிர் கொள்ள முடியும்.

## 1.1 கற்றல் நோக்கங்கள்:

இந்தப் பிரிவைப் படித்த பின்பு நீங்கள்

— கூட்டாண்மையின் குணாதிசியங்கள், முதல் கணக்குகள் பராமரிப்பு மற்றும் சில முக்கியமான கணக்கியல்கள் பற்றி அறிய முடியும்.

— ஒரு புதிய கூட்டாளியை சேர்க்கும் பொழுது தொடர்புள்ள பல்வேறு படிகளை விவரிக்க இயலும்.

— கூட்டாளி விலகும் பொழுது அல்லது மரணமடையும் பொழுது அவருக்கு சேரவேண்டிய தொகையை கணக்கிடும் படிகளை கையாள முடியும்.

— கூட்டு நிறுவனங்களை இணைக்கும் பொழுது, இணையும் நிறுவனங்களின் கணக்குகளை முடிக்கவும், புதிய நிறுவனத்தின் ஏட்டில் கணக்குகளை தொடங்கவும் இயலும்.

— கூட்டாண்மைளை கலைக்கும் பொழுது கலைப்பு செயல்முறை படிகளையும், படிப்படியாக கூட்டாளிகளுக்கு பணம் வழங்குவது பற்றியும் விளக்க இயலும்.

தனியொருவருக்குத் திறமை மற்றும் மதிநுட்பம் இருப்பினும், போதுமான அளவு முதல் இல்லாவிட்டால் தொழிலை நல்ல முறையில் செய்ய முடியாது. அதுபொலவே செல்வம் படைத்த ஒருவர் வியாபாரத் திறமையற்றவராக இருப்பின் தொழிலை மேம்படச் செய்ய முடியாது. ஆகவே, இவ்விருவரும் ஒன்று சேர்ந்து நடத்தும் வியாபாரம் நல்லதொரு கூட்டு வணிகம் ஆகும். புத்தி நுட்பமுள்ள நபர்கள் தேவையான மூலதனத்தோடு தங்களது முழுத்திறமையுடனும் சமயோசிதப் புத்தியுடனும் கூட்டு வியாபாரத்தில் செயல்படுவது இன்னும் நல்லதொரு இணைப்பாகும். இந்நிலையில் அவர்களுடைய வேலைகளை அவரவர்களுக்கு ஏற்றவாறு அமைத்துக்கொண்டு அதிகமான அளவு இலாபம் பெறுகின்றனர். ஆனால், தனிப்பட்ட நபரின் உழைப்பில் இவ்வாறு இலாபம் ஈட்டுவது அரிது. இவ்வாறு இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் ஒன்று சேர்ந்து வியாபாரத்தில் கிடைக்கும் இலாபம் அல்லது நட்டத்தினைப் பகிர்ந்து கொள்வதாக ஒப்புக்கொண்ட நடத்தும் வணிக உறவு கூட்டு வணிகம் (Partnership) எனப்படும்.

**கூட்டாளி**

கூட்டு வணிகத்தில் ஈடுபட்டுள்ள ஒவ்வொருவரும் தனித்தனியாகக் கூட்டாளி (Partner) எனப்படுவர். வங்கித்தொழில் நடத்தும் நிறுவனமாக இருப்பின் பத்துக் கூட்டாளிகளுக்கு மேல் இருக்கக்கூடாது. மற்றைய தொழில்கள் நடத்தும் நிறுவனமாக இருந்தால் 20 கூட்டாளிக்ளுக்கு அதிகமாக இருக்கக் கூடாது.

**நிறுவனம்**

சில நபர்களின் உடன்பாட்டின் பேரிலே வியாபாரத்தை நடத்துவது கூட்டு வணிகம் எனப்படும். கூட்டு வணிகத்தில் பங்கேற்ற ஒவ்வொருவரும் கூட்டாளி என்றும், அவர்கள் நடத்தும் வணிகத்தையும் அவர்கள்

அனைவரையும் ஒன்று சேர்த்து கூட்டு வணிக நிறுவனம் (Partnership Firm) என்றும் கூறுகிறோம்.

## 1.2 கூட்டு வணிக உடன்படிக்கை அல்லது வணிகப் பத்திரம்

கூட்டு வணிகத்தின் அடிப்படை கூட்டாளிகளுக்குள்ளான ஒப்பந்தம் ஆகும். இவ்வொப்பந்தம் எழுத்தால் அல்லது வாய்மொழியால் இருக்கலாம். ஆனால், பிற்காலத்தில் கருத்து வேறபாடுகள் ஏதும் ஏற்படாமலிருக்க கூட்டாளிகள், வணிக நிபந்தனைகளை ஒரு பத்திரத்தில், எழுதி அதில் எல்லோரும் கையொப்பம் இடவேண்டும். பொதுவாக, கூட்டு வணிக ஒப்பந்தத்தில் கீழ்க்காணும் விவரங்கள் அடங்கியிருக்கும்:—

1). நிறுவனத்தின் பெயர், மேற்கொள்ளவிருக்கும் தொழிலின் விபரம், கூட்டு வணிகத்தின் காலவரையறை

2). கூட்டாளிகளின் உரிமைகளும் — கடமைகளும்

3). ஆரம்பத்தில் ஒவ்வொரு கூட்டாளியும் நிறுவனத்திற்கு வழங்கும் முதலும், அதனை வழங்கும் வகையும்.

4). இலாப நட்டங்களை பிரித்துக்கொள்ளும் வகைகள்.

5). இலாபத்தை எதிர்நோக்கி ஒவ்வொரு கூட்டாளியும் தமது சொந்தச் செலவுக்காக எடுத்துக் கொள்ளும் தொகையின் அளவு.

6). சம்பளம் (ஏதும்) கொடுக்க வேண்டியது இருந்தால் கூட்டாளிகளுக்கு கொடுக்கப்பட வேண்டியது.

7). வட்டித் தொகை (ஏதும்) கூட்டாளிகளின் மூலதனத்திற்கு அனுமதித்தது.

8). வட்டித் தொகை (ஏதும்) கூட்டாளிகளின் எடுப்புத் தொகைக்கு வசூலிக்கப்பட வேண்டியது.

9). கார்னர் (எ) முர்ரே வழக்கின் முடிவுகளை பின்பற்றுதல் பற்றி குறிப்பு.

மேற்சொன்ன உடன்படிக்கையில் ஏதேனும் குறிப்பிடப்படாமல் இருக்குமேயானால், கூட்டு வணிகச் சட்டத்தின் விதிமுறைகள் வணிகத்தில் பின்பற்றப்படும்.

## கூட்டு வணிகத்தின் இலக்கணம்

1932—ம் ஆண்டு இந்தியச் கூட்டு வணிகச் சட்டத்தின் நான்காம் பிரிவு, கூட்டு வணிகம் என்பது எல்லோரும் சேர்ந்தோ, அல்லது எல்லோருக்குமாக ஒருவரோ, நடத்தும் தொழிலின் இலாபத்தைப் பகிர்ந்து கொள்ள ஒப்புக் கொண்டவர்களிடையே நிலவும் உறவு என்று கூறுகிறது.

## பதிவு செய்தல்

கூட்டு வணிகம் பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்யப்பட்டோ அல்லது பதிவு செய்யப்படாமலோ இருக்கலாம். கூட்டு வணிகச் சட்டப்படி நிறுவனத்தை பதிவாளரிடம் பதிவு செய்ய வேண்டிய கட்டாயம் ஏதும் இல்லை.

## பொறுப்புக்கள்

நிறுவனத்தின் அனைத்து நடவடிக்கைகளுக்கும் கூட்டாளிகள் தனிப்பட்ட முறையிலும் கூட்டாகவும் பொறுப்பாவர். அதாவது, கூட்டாளியாக இருக்கும் வரை நிகழும் நிறுவனத்தின் எச்செயலுக்கும் ஒரு கூட்டாளி பொறுப்பாவார் என்ற சட்டத்தின் 25 — ஆவது பிரிவு கூறுகிறது. ஆகவே, கூட்டு நிறுவனத்தின் பொறுப்புக்களைத் தீர்ப்பதற்கு, நிறுவனத்தின் சொத்துக்கள் போதுமான அளவு இல்லாத நிலையில், கூட்டாளியின் தனிப்பட்ட சொத்துக்களிலிருந்து கிடைக்கப் பெறும் கடைசி பைசா வரை நிறுவனத்தின் கடனைத் தீர்க்க எடுத்துக் கொள்ளப்படும்.

## கூட்டு வணிகக் கணக்குகள்

கூட்டு வணிகக் கணக்குகளைப் பொறுத்தவரையில் கூட்டாளியைப் புதிதாகச் சேர்த்தல், கூட்டாளியை விலக்குதல், கூட்டாளி மரணமடைதல் மற்றும் நிறுவனத்தைக் கலைத்தல் போன்ற நிலைமைகளைத் தவிர இக் கணக்குகளைப் பதிவு செய்வதில் சிரமம் ஏதும் இல்லை.

குறிப்பு

இரண்டு அல்லது இரண்டிற்கு மேற்பட்ட நபர்கள் ஒரு வியாபாரத்தை நடத்துவார்களேயானால்,ஒவ்வொருவரும் வியாபாரத்திற்காகச் செலுத்திய முதலை அறியும் பொருட்டு நிறுவனத்தின் ஏடுகளில் தனித்தனியாக முதல் கணக்கு அல்லது மூலதனக் கணக்கு எழுதப்பட வேண்டும். எடுப்பு, வட்டி, சம்பளம் மற்றும் இதுபோன்ற விபரங்களுக்கான பதிவுகளை இம்மூலதனக் கணக்கில் எழுதாமல் தெளிவாக இருக்கும் நோக்கத்தோடு எடுப்புக் கணக்கு அல்லது நடப்புக் கணக்கு ஒன்று எழுதப்படுவது வழக்கம்.

கூட்டு வாணிபத்தைத் தொடங்கியவுடன், தொழிலில் மூலதனம் ஈடுபடுத்தியதற்கான கணக்குப் பதிவுகள் ஏடுகளில் செய்யப்படும். கூட்டாளிகளின் எண்ணிக்கைக்கேற்ப பல மூலதனக் கணக்குகளும், பல நடப்புக் கணக்குகளும் துவங்கப்படும். பின்பு, வணிக நடவடிக்கைகள் சாதாரண முறையில் பதிவு செய்யப்படும்.

### 1.2.1 கூட்டாளியின் முதல்

கூட்டாளிகளின் முதல் பற்றி கீழே கொடுக்கப்பட்டுள்ள விவரங்களை கருத்தில் கொள்ள வேண்டும்.

1. ஒவ்வொரு கூட்டாளியும் நிறுவனத்திற்கு முதல் கொண்டு வரவேண்டும் என்பது அவசியமில்லை. ஒரு சில நிறுவனங்களின் மதிநுட்பத்திற்காகவும் தொழில் திறனுக்காகவும் அவர்களை முதல் ஒன்றும் இல்லாமல் கூட்டாளிகளாக சேர்த்துக் கொள்வதும் உண்டு.
2. ஒவ்வொரு கூட்டாளியும் சமமான பங்குத் தொகையினை முதலாகக் கொண்டு வர வேண்டும் என்ற கட்டாயம் ஏதும் இல்லை. கூட்டாளிகள் ஒவ்வொருவரும் எந்த விகிதத்தில் முதல் கொண்டு வர வேண்டும் என்பது வணிகப் பத்திரத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும்.
3. ஒவ்வொரு கூட்டாளியும் தனது மூலதனத்தை ரொக்கமாகக் கொண்டு வரவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. கூட்டாளிகளின் உடன்படிக்கையின் பேரில் மூலதனத்தை

எவ்வடிவத்திலும் கொண்டு வரலாம். (உதாரணம்: இயந்திரம், கட்டிடம் போன்ற நிலையான சொத்துக்கள்).

4. உடன்படிக்கையிருந்தால் ஒழிய, தொழிலில் முதல் ஈடுபடுத்திய விகிதத்திற்கும், இலாப நட்ட விகிதத்திற்கும் சம்பந்தம் இல்லை. அதாவது கூட்டாளிகளின் முதல் விகிதாசாரமும், லாப நட்ட பங்கீடு விகிதாச்சாரமும் சமமாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

கூட்டாளிகள் அனைவரின் ஒப்புதல் பேரில் முதல் விகிதத்தை மாற்றிக் கொள்ளலாம். அதைப் போலவே நிறுவனத்தின் மூலதனத்தை கூட்டாளிகள் மேலும் தொகை கொண்டு வருவதன் மூலம் அதிகப்படுத்தலாம் அல்லது நிறுவனத்தின் மூலதனத்தை குறைக்கும் பொருட்டு தொகையினை கூட்டாளிகள் எடுத்துக் கொள்ளலாம்.

குறிப்பேட்டுப் பதிவு

தொழிலின் முதல் ஈடுபடுத்தியதற்காக

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| ரொக்கக் க/கு | | |
| கூட்டாளியின் முதல் க/கு | | |
| (முதல்... யிடமிருந்து பெறப்பட்டதற்காக) | | |

## நிலைத்த முதலும் மாறக்கூடிய முதலும் (Fixed Capital and Fluctuating Capital)

கூட்டு வணிகப் பத்திரத்தில் உள்ளபடி கூட்டாளிகள் தங்களது மூலதனத்தை கொண்டு வரவேண்டும். கூட்டு வணிகத்தின் காலம் முடியும் வரை கொண்டுவந்த மூலதனத்தை அதே அளவில் வைத்திருந்தால் அதற்கு நிலைத்த முதல் என்று பெயர்.

எடுப்பு, லாபம், வட்டி சம்பளம் முதலியன நடப்புக் கணக்கில் பதிவு செய்யப்படும். ஆனால் இக்கணக்குகள் மூலதனக் கணக்கில் பதிவு

செய்யப்பட்டால் கூட்டாளிகளின் முதல் மாறிக் கொண்டிருக்கும் அவ்வித முதல் மாறக்கூடிய முதல் எனப்படும்.

**மூலதனத்தின் மீது வட்டி**

உடன்படிக்கையிருந்தாலொழிய, கூட்டாளிகள் சட்டப்படி தங்களது மூலதனத்தின் மீது வட்டி பெற உரிமையற்றவர்கள் ஆவர். கூட்டு வணிக உடன்படிக்கையில் இது குறித்து ஏதும் குறிப்பிட்டிராதபோது மூலதனத்தின் மீது வட்டி பெற முடியாது.

தாம் கொண்டு வரவேண்டிய தொகைக்கும் அதிகமான மூலதனத்தை கூட்டாளி ஒருவர் கொண்டு வந்தால் பொதுவாக அவருக்கு வட்டி கொடுக்கப்படும். ஆனால், மூலதனத்தின் விகிதப்படி இலாப நட்டத்தினை பகிர்ந்து கொள்ளும் நிறுவனங்கள் மூலதனத்தின் மீதான வட்டியை அளிப்பதில்லை. கூட்டாளிகளுக்கு மூலதனத்தின் மீது வட்டி ஏன் கொடுக்கப்பட வேண்டுமென்றால் அவர்கள் ஈடுபடுத்திய முதல் தொகையினை ஏதாவது முதலீட்டில் ஈடுபடுத்தியிருப்பார் களேயானால் அவர்களுக்கு வட்டி கிடைத்துக் கொண்டுதான் இருக்கும்.
ஆகவே மூலதனத்தின் மீது வட்டி கொடுப்பது விரும்பத்தக்கது ஆகும். கூட்டாளிகளிடையே இலாப விகிதம் சமமாக இருந்து மூலதனம் மாறுபட்டு இருக்கும் பொழுது மூலதனத்தின் மீதான வட்டி கொடுப்பது பொதுவாக விரும்பத்தக்கதாகும்.

ஆரம்ப முதல் இருப்பு அல்லது ஆரம்பத்தில் ஈடுபடுத்திய முதல் மீது வட்டி கணக்கிட வேண்டும். அவ்வாறு கண்டுபிடிக்கும் பொழுது குறிப்பிட்ட காலத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ள சதவீதத்தில் மட்டுமே வட்டி கண்டுபிடிக்க வேண்டும் என்பதை மாணவர்கள் மனதில் கொள்ள வேண்டும்.

முதல் மீதான வட்டியானது நிறுவனத்தைப் பொறுத்தவரையில் நட்டம் அல்லது செலவு ஆகும். ஆகவே முதல் மீதான வட்டிக் கணக்கைப் பற்று எழுதி, இலாப நட்டக் கணக்கிற்கு மாற்ற வேண்டும். ஆனால், கூட்டாளிகளைப் பொறுத்தவரையில் முதல் மீதான வட்டி வருமானம்

ஆகும். ஆகவே கூட்டாளிகளின் நடப்புக் கணக்கில் (அல்லது முதல் கணக்கு) அவரவர் வட்டித் தொகையினை வரவு எழுத வேண்டும்.

குறிப்பேட்டுப் பதிவு

1. மாறக்கூடிய முதலாக இருப்பின்

முதல் மீதான வட்டி க/கு

கூட்டாளியின் முதல் க/கு

(முதல் மீது வட்டி கொடுக்கப்பட்டதற்காக)

2. மாறத அல்லது நிலைத்த முதலாக இருப்பின்

முதல் மீதான வட்டி க/கு

கூட்டாளியின் நடப்பு க/கு

(முதல் மீது வட்டி கொடுக்கப்பட்டதற்காக)

*குறிப்பு:*

முதல் மீதான வட்டி நிறுவனத்தைப் பொறுத்தவரையில் செலவு அல்லது நட்டம் ஆகும். ஆகவே, அவற்றை இலாப நட்டக் கணக்கிற்கு மாற்ற வேண்டும்.

**கூட்டாளிகளின் எடுப்புத் தொகை**

கூட்டாளிகளின் பணம் அல்லது சரக்கினை தமது சொந்த உபயோகத்திற்காக நிறுவனத்தில் இருந்து எடுத்துக் கொள்ள கூட்டு வாணிப பத்திரம் அனுமதிக்கலாம். பொதுவாக, கூட்டாளிகள் ஒரு குறிப்பிட்ட இடைவெளி காலத்திற்குப் பின்பு ஒரு குறிப்பிட்ட தொகையை எடுத்துக் கொள்ள அனுமதிக்கப்படுவார்கள். ஒரு வருடத்தில் ஒருவரால் எடுக்கப் பெறும் அதிகப்படியான தொகை எவ்வளவு என்று வணிகப் பத்திரத்தில் நிர்ணயிக்கப்பட்டு இருக்கும்.

ஆனால், மாறாத முதலாக இருப்பின், எடுப்புக் கணக்கானது நடப்புக் கணக்கு என்று அழைக்கப்படும். நடப்புக் கணக்கினை மாறாத முதல் கணக்கிற்கு மாற்றக்கூடாது.

எடுப்புத் தொகையின் மீதான வட்டி

எடுப்புத் தொகையின் மீதான வட்டி, கூட்டு வணிகப் பத்திரத்தின் சரத்தைப் பொறுத்தே உள்ளது. பெரும்பாலும் முதல் கணக்கிற்கு வட்டி, வழங்கப்பட்டிருப்பினும் அதே அளவிற்கு எடுப்புக் கணக்கிற்கு வட்டி கணக்கிடப்படுவதில்லை. கணக்கில் எடுப்பின் மீது வட்டி கண்டுபிடிக்கச் சொல்லியிருந்தால் தான் மாணவர்கள் வட்டி கண்டுபிடிக்க வேண்டும். அப்படி குறிப்பிட்டுச் சொல்லாவிட்டால் மாணவர்கள் எடுப்பின் மீது வட்டி கண்டுபிடிக்க வேண்டிய அவசியம் இல்லை.

தொகை எடுத்த நேரத்தில் இருந்து கணக்கு முடியக்கூடிய காலம் வரைக்கும் எடுப்பின் மீதான வட்டியைக் கணக்கிட வேண்டும். சில சமயங்களில் எடுப்பின் மீதான வட்டியைச் சராசரி முறையை கணக்கிடலாம். (உதாரணமாக 6 மாத சராசரி)

கூட்டாளிகளின் சம்பளம்

கூட்டாளிகளில் ஒருவர் தனது முழு நேரத்தையும் நிறுவனத்திற்காகவே பயன்படுத்தலாம். ஆகவே, அவர் செய்யக்கூடிய வேலைகளுக்காக சம்பளமாக ஒரு குறிப்பிட்ட தொகையினை அக்கூட்டாளிக்கு நிறுவனம் கொடுக்கலாம். இருப்பினும் மற்ற கூட்டாளிகளின் விருப்பத்தின் பேரிலேயே இச்சம்பளம் கொடுக்கப்படும். இவற்றை ஏடுகளில் பதிவு செய்யும் பொருட்டு சம்பளக் கணக்கினைப் பற்று எழுதி, அக்கூட்டாளியின் முதல் கணக்கு அல்லது நடப்பு கணக்கில் (ஏதேனும் ஒன்றினை) வரவு வைக்க வேண்டும்.

கூட்டாளிகளின் கமிஷன்

சில சமயங்களில் கூட்டாளியொருவர் செய்த சிறப்புப் பணிக்காக நிறுவன இலாபத்தின் ஒரு குறிப்பிட்ட சதவீதம் அவருக்கு கமிஷனாக அளிக்கப்படும். இக்கமிஷனை கழித்த பின் உள்ள இலாபத்தில் கணக்கிடப்படும். உதாரணமாக, பாலன் என்ற கூட்டாளியின் 10%

கமிஷனைக் கணக்கிட நிறுவன இலாபமாகிய ரூ.11,000த்திலிருந்து கீழ்வருமாறு கணக்கிட வேண்டும்.

(அ) 10% கமிஷனை கழிக்கும் முன் உள்ள இலாபத்தில் கணக்கிட்டால்

ாலனின் கமிஷன் $= 11{,}000 \times \frac{10}{100} = 1{,}100$

(ஆ) 10% கமிஷன் கமிஷனைக் கழித்த பின் உள்ள இலாபத்தில் கணக்கிட்டால்

பாலனின் கமிஷன் $= 11{,}000 \times \frac{10}{110} = 1{,}000$

இக் கமிஷனை ஏட்டில் பதியும் போதும் கமிஷன் கணக்கை பற்று வைத்த பாலனின் மூலதனக் கணக்கு அல்லது நடப்பு கணக்கினை வரவு வைக்க வேண்டும்.

**கூட்டாளி அளித்த கடன்**

தனது மூலதனத்திற்கு மேலும் கூட்டாளி ஒருவர் நிறுவனத்திற்கு கடன் அளிக்கலாம். கூட்டு வணிகப் பத்திரத்தில் குறிப்பிடப்பட்டிருந்தால் ஒழிய சட்டப்படி அளித்த கடனுக்கு 6% சதவீதத்திற்கு கூடவோ அல்லது குறைவாகவோ கடனுக்கான வட்டி கொடுக்கப்படலாம். கணக்கில் கடனுக்கான வட்டி வீதம் கொடுக்கப்படாமல் இருந்தால் நாம் 6% வட்டி கணக்கிட வேண்டும். கூட்டாளி ஒருவர் நிறுவனத்திற்கு முதல் கணக்கில் இருந்து வேறுபட்டது. அளித்த கடனுக்கான வட்டியை கடன் கணக்கில் வரவு வைக்க வேண்டும். கணக்கு தயாரிக்கப்படும் காலத்தின் இறுதியில் அளிக்கப்பட்ட கடனையும் அதற்கான வட்டியையும் கூட்டி வரும் தொகையை இருப்புநிலைக் குறிப்பின்
பொறுப்புப் பகுதியில் அத்தொகை முழுவதும் செலுத்தப்படும் வரை காட்ட வேண்டும்.

**இலாபம் மற்றும் நட்டத்தினை பங்கிடுதல்**

கூட்டாளிகள் தமது உடன்படிக்கையின் மூலம் இலாபம் மற்றும் நட்டத்தின் எந்த விகிதத்தில் பகிர்ந்து கொள்வது என்று முடிவு

செய்வார்கள் அனைத்துக் கூட்டாளிகளின் விருப்பத்தின் பேரில் எந்த விகிதத்திலும் அவர்கள் பகிர்ந்துகொள்ளலாம் உடன்படிக்கை ஏதும் இல்லாத சமயத்தில் கூட்டாளிகள் இலாபம் மற்றும் நட்டத்தினை சமமாகப் பங்கிடுதல் வேண்டும்.

உடன்படிக்கையில் நட்டத்தின் பகிர்வு விகிதம் குறிப்பிடப்படாமல் இலாபத்தின் பகிர்வு விகிதம் மட்டும் குறிப்பிடப்பட்டிருந்தால் நட்டமும் அவ்விகிதத்திலேயே பகிர்ந்து கொள்ள வேண்டும் என்பதை நாம் மனதில் கொள்ள வேண்டும். ஆனால் கூட்டாளிகள் இலாபத்தினை ஒரு விகிதத்திலும் நட்டத்தினை மற்றொரு விகிதத்திலும் பகிர்ந்து கொள்ள உரிமை உண்டு மற்ற கூட்டாளிகளின் விருப்பத்தின் பேரில் ஒரு கூட்டாளி நட்டத்தின் பங்கில் விடுபலாம்.

**நிலைத்த மற்றும் மாறக்கூடிய முதல்**

நிறுவனத்தின் கூட்டாளி ஒருவர் முதலீடு செய்யும் பொழுது அத்தொகை அவரின் முதல் கணக்கில் வரவு வைக்கப்படுகின்றது. அவ்வருடத்தில் சம்பளம் மற்றும் முதல் மீதான வட்டி முதலிய சரிகட்டும் பதிவுகள் முதல் கணக்கில் வரவு வைக்கப்படும். எடுப்பு, எடுப்பு மீதான வட்டி போன்ற சரிகட்டும் பதிவுகள் முதல் கணக்கில் பற்று வைக்கப்படும். அவ்வருடக்கடைசியில் கூட்டாளியின் இலாபத்தின் பங்கும் முதல் கணக்கில் வரவு வைக்கப்படும். ஆகவே, வருடக் கடைசியில் உள்ள இருப்பானது வருட ஆரம்பத்தில் இருக்கும் முதல் இருப்பிலிருந்து மாறுபட்டு இருக்கும் முதல் இருப்பிலிருந்து மாறுபட்டு இருக்கும் இவ்வகையான முதல் மாறக்கூடிய அல்லது வேறுபடக் கூடிய முதல் எனப்படும்.

சில சமயங்களில் கூட்டாளிகள் தமது மூலதனத்தைச் சரிகட்டும் பதிவுகளால் மாறுபடாமல் நிலைத்த முதலாகவும் வைத்துக் கொள்ளலாம். அதற்காகத் தனியே நடப்புக் கணக்கு என்ற கணக்கினைத் தொடங்கலாம். (சில சமயங்களில் எடுப்புக் கணக்கு என்றும் பொருள்படும்) அக்கணக்கில் மாற்றம் ஏதும் இருப்பதில்லை வருட ஆரம்பத்தில் இருந்த முதல் தொகையும் வருடக் கடைசியில் இருக்கும் முதல் தொகையும்

ஒன்றாகவே இருக்கும். நடப்புக் கணக்கின் இருப்புத் தொகை இருப்புநிலைக் குறிப்பில் தனியாகக் காண்பிக்கப்பட வேண்டும். (முதல் கணக்குடன் இல்லாமல்) முதல் கணக்கைப் போலவே நடப்புக்கணக்கும் ஆள்சார் கணக்கினைச் சேர்ந்ததாகும்.

1.2.2. முடிவுக் கணக்குகள்

முடிவுக் கணக்குகள் (Final A/c) தயாரிப்பதன் நோக்கம் என்னவென்று நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். அதாவது 1) வியாபார இலாப, நட்டக் கணக்குகளைத் தயாரிப்பதன் மூலம் வியாபாரத்தின் அந்தந்த ஆண்டுக்கான இலாபம் அல்லது நட்டத்தினை அறிந்து கொள்ளலாம். 2) இருப்புநிலை குறித்து தயாரிப்பதன் மூலம் நிறுவனத்தின் நிதிநிலைமையை அறிந்து கொள்ளலாம்.

தனிநபர் வணிகத்தில் முடிவுக் கணக்கைகளைத் தயாரிப்பது போலவே கூட்டுநிறுவனத்தின் முடிவுக்கணக்குகளையும் தயாரிக்க வேண்டும்.

கூட்டு நிறுவனத்தின் முடிவுக் கணக்குகளைத் தயார் செய்ய கீழ்காணும் மூன்று வழி முறைகளை நினைவு கொள்ள வேண்டும்.

1. கணக்கு ஆண்டு காலத்தில், நிறுவனம் ஈட்டிய இலாபம் அல்லது அடைந்த நட்டத்தினை கூட்டாளிகள் அனைவரும் தங்களது இலாபப் பகிர்வு விகிதத்தில் பிரித்துக் கொள்ள வேண்டும். அப்பகிர்வு இலாப நட்டக் கணக்கில் காட்டப்பட்டிருக்க வேண்டும்.
2. இருப்புநிலைக் குறிப்பு தயார் செய்யும் பொழுது கூட்டாளிகளின் முதல் கணக்கில், ஒவ்வொரு கூட்டாளியின் முதல் தொகையின் வருட ஆரம்ப இருப்புடன் கூடுதல் முதல் ஏதேனும் புதிதாக நிறுவனத்திற்கு கூட்டாளி வழங்கியிருந்தால் அவை மற்றும் வட்டி இலாபம் சம்பளம் போன்ற அனைத்தையும் கூட்டி அவ்வருடத்தில் சொந்த உபோயகத்திற்காக எடுத்துக் கொண்ட தொகையினைக் கழித்து மீதமுள்ள முதல் இருப்பினைக் காட்ட வேண்டும். நிலைத்த முதலாக இருப்பின் வட்டி இலாபம், சம்பளம் போன்றவை நடப்புக் கணக்கில் காட்டப்பட வேண்டும்.

3. தான் செலுத்திய மூலதனத்தை தவிர கூட்டாளி ஒருவர் நிறுவனத்திற்கு கடன் வழங்கியிருந்தால், அக்கடன் தொகைக்கு கணக்கில் ஏதுவும் வட்டி குறிப்பிடாவிட்டாலும் 6 சதவீதம் வட்டி கொடுக்கப்பட வேண்டும்.

இருப்புநிலைக்குறிப்பில் சொத்துக்களையும் பொறுப்புகளையும் ஒரு குறிப்பிட்ட முறையில் காண்பிக்க விதிமுறைகள் எதுவும் இல்லை. இருப்பினும் கீழ்கண்ட இரு வழிமுறைகளில் நிறுவனத்தின் சொத்துக்களையும் பொறுப்புகளையும் எழுதலாம்.

1. **ரொக்கமாக மாற்றும் தன்மையில்** (Order of Liquidity)

இம்முறையில் சொத்துக்களை எளிதில் விற்று ரொக்கமாக மாற்றும் தன்மைக்கு ஏற்ப வரிசையாக எழுத வேண்டும். பொறுப்புகளைத் தீர்க்க வேண்டிய வரிசை முறையில் எழுத வேண்டும்.

2. **நிலைத்த தன்மையில்** (Order of Permanence)

இம்முறையில் நிலைத்த சொத்துக்கள் மற்றும் பொறுப்புகளை முதலில் காட்ட வேண்டும். பின்பு நடப்புச் சொத்துக்களையும் பொறுப்புகளையும் கடைசியாக எழுதிக் காட்ட வேண்டும்.

ஒரு குறிப்பிட்ட நடவடிக்கை இருப்புச் சோதனையில் இடம் பெறாவிடில் இரட்டைப் பதிவு மூலம், அந்நடவடிக்கையினைச் சரிகட்டுதல் வேண்டும். சரிகட்டுதலுக்கான குறிப்பேட்டுப் பதிவினைக் கணக்கில் குறிப்பாகக் கேட்டிருந்தால் மட்டுமே எழுத முடியும்.

எடுத்துக்காட்டு : 1

2003ஆம் வருடம் ஜீன் 30ம் தேதி முடிய சந்திரன் மற்றும் மோகன் ஆகிய இருவரின் பேரேட்டுக் கணக்குகளின் இருப்புக்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

வியாபார இலாப நட்டக் கணக்கினை 2003ம் வருடம் ஜீன் 30ம் தேதி முடிய தயார் செய்து அதே தேதியில் இருப்புநிலைக் குறிப்பினையும் தயார் செய்க.

கீழ்கண்ட சரிகட்டுதல்களைச் செய்க:

1. வாடிக்கையாளருக்கு ரூ.500 மதிப்புள்ள சரக்குகள் விற்பனை அல்லது திருப்ப முறையில் அனுப்பப்பட்டது.
2. கடையை மாற்றி அமைப்பதற்கான செலவில் ஐந்தில் ஒரு பங்கினை நீக்க வேண்டும்.
3. பற்பல கடனாளிகள் மீது வராக்கடன் ஒதுக்கு 2 சதவீதமாகக் குறைக்க வேண்டும்.
4. கீழ்கண்டவற்றிற்கு தேய்மானம் எழுதுக.

| | |
|---|---|
| பொறி மற்றும் இயந்திரம் | 10% |
| கண்ணாடிப் புட்டிகள் | 33⅓ % |
| பெட்டிகளும் மற்றவைகளும் | 2% |
| மோட்டார் லாரி | 20% |

| பற்று இருப்புகள் | | வரவு இருப்புகள் | |
|---|---|---|---|
| வில்லங்கமில்லாச்சொத்து | 18,000 | சந்திரன் முதல் | 36,000 |
| பொறி மற்றும் இயந்திரம் | 3,000 | மோகன் முதல் | 23,000 |
| கண்ணாடி பாட்டில்கள் | 1,350 | விற்பனை – பீர் | 54,960 |
| முதலீடுகள் | 12,500 | விற்பனை – ஒயின் | 5,600 |
| கொள்முதல் | 28,000 | விற்பனை மற்றவை | 1,630 |
| வரி – பீர் | 8,000 | கடனீந்தோர்கள் | 5,255 |

குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| பெட்டியும் மற்றவையும் | 650 | வைப்பாளர்கள் இருப்பு 1.7.02 தேதி அன்று ஆண்டிற்கு 12மு வட்டி வீதம் | 23,000 |
| வரி ஒயின் ஸ்பிரிட் | 1,100 | காப்பு நிதி | 5,705 |
| கூலி | 2,500 | வராக்கடன் காப்பு | 675 |
| சம்பளம் | 1,010 | லாப ஈவு பெற்றது | 1,251 |
| பற்பல கடனாளிகள் | 21,000 | | |
| பற்பல செலவுகள் | 1,380 | | |
| கட்டணங்களும் வரிகளும் | 700 | | |
| கட்டடங்கள் | 38,000 | | |
| கடையை மாற்றியமைப்பதற்கான செலவுகள் | 780 | | |
| மோட்டார் லாரி | 2,900 | | |
| வட்டி செலுத்தியது | 330 | | |
| குடிவகை அளவு டம்ளர்கள் | 2,000 | | |
| சரக்கு | 5,690 | | |
| ரொக்கம் | 5,981 | | |
| பழுது பார்த்த செலவு | 2,205 | | |
| | 1,57,076 | | 1,57,076 |

சந்திரன் மற்றும் மோகன் ஆகியோரின் 2003ஆம் வருடம் ஜீன்—31ந் தேதியோடு முடிவடையும் ஆண்டிற்கான வியாபார இலாப நட்டக் கணக்கு

ப. வ.

| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|---|
| ஆரம்பச் சரக்கிருப்பு | | 5,690 | விற்பனை<br>பீர் | 54,960 | |
| கொள்முதல் | | 28,000 | ஒயின் | 5,600 | |
| வரி<br>பீர் | 8,000 | | மற்றவை | 1,630 | 62,190 |

குறிப்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கூலி | | 2,500 | சரக்கு விற்பனை அல்லது திருட்பத்தின் பேரில் அனுப்பப்பட்டது | 500 | 3,500 |
| மொத்த லாபம் (லாப நட்டக்கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | 20,400 | | | |
| | | 65,690 | | | 65,690 |
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| சம்பளம் | | 1,010 | மொத்த லாபம் (வியாபார கணக்கில் இருந்து மாற்றப்பட்டது) | | 20,400 |
| பற்பல செலவுகள் | | 1,380 | லாப ஈவு பெற்றது | | 1,251 |
| கட்டணங்களும் வரிகளும் | | 700 | அதிகமாக உள்ள வராக்கடன் காப்பு | | 255 |
| வட்டி செலுத்தியது | 330 | | | | |
| கூட்டு: கொடுபடா வட்டி | 2,430 | 2,760 | | | |
| பழுது பார்த்த செலவு | | 2,205 | | | |
| கடையினை மாற்றியமைக்க செய்த செலவில் பங்கினை எழுதி (நீக்கியது) (1/5 x 780) | | | | | |
| தேய்மானம்: | | | | | |
| பொறி மற்றும் இயந்திரம் 10% | 300 | | | | |
| கண்ணாடி பாட்டில்கள் 33⅓% | 450 | | | | |
| பெட்டிகள் 2% | 13 | | | | |
| மோட்டார் லாரி 20% | 580 | 1,343 | | | |
| நிகர லாபம் (முதல் கணக்கிற்கு மாற்றப்பட்டது)<br>சந்திரன்<br>மோகன் | <br><br>6,176<br>6,176 | <br><br><br>12,352 | | | |
| | | 21,906 | | | 21,906 |

## சந்திரன் மற்றும் மோகன் ஆகியோரின்
## 2003ம் வருட ஜீன் 30ந் தேதியிலுள்ள இருப்புநிலைக்குறிப்பு

| பொறுப்புகள் | | | சொத்துக்கள் | | |
|---|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| கொடுபடா வட்டி | | 2,430 | ரொக்கம் | | 5,981 |
| பற்பல கடனீந்தோர்கள் | | 5,255 | முதலீடுகள் | | 12,500 |
| வைப்பாளர்கள் 12% | | 23,000 | பற்பல கடனாளிகள் | 21,000 | |
| காப்பு நிதி | | 5,705 | கழி: | 420 | 20,580 |
| முதல் : சந்திரன் | 36,000 | | வராக்கடன் கழிப்பு 2% | | 3,000 |

குறிப்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கூட்டு : இலாபம் (1/2) | 6,176 | 42,176 | இறுதிச்சரக்கிருப்பு சரக்கு விற்பனை அல்லது திருப்பத்திற்கு அனுப்பியது | | 500 |
| மோகன் | 23,000 | | கண்ணாடி பாட்டில்கள் | 1,350 | |
| கூட்டு : இலாபம் (1/2) | 6,176 | 29,176 | கழி : தேய்மானம் 33 1/3% | 450 | 900 |
| | | | பெட்டியும் மற்றவையும் | 650 | |
| | | | கழி: தேய்மானம் 2% | 13 | 637 |
| | | | வில்லங்கமில்லாச் சொத்து பொறி மற்றும் இயந்திரம் | 3,000 | |
| | | | கழி: தேய்மானம் 10% | 300 | 2,700 |
| | | | கட்டடம் | | 38,000 |
| | | | கடையை மாற்றியமைப்பதற்கான செலவு | 780 | |
| | | | கழி : 1/5 நீக்கியது | 156 | 624 |
| | | | மோட்டார் லாரி | 2,900 | |
| | | | கழி : தேய்மானம் 20% | 580 | 2,320 |
| | | | குடிவகை அளவு டம்ளர்கள் | | 2,000 |
| | | 1,07,742 | | | 1,07,742 |

**எடுத்துக்காட்டு 2**

2003ஆம் வருடம் மார்ச் 31ம் தேதி அன்று உள்ள மணி மற்றும் நாதன் ஆகியோரின் இருப்புச்சோதனை கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| பற்று இருப்பு | | வரவு இருப்பு | | |
|---|---|---|---|---|
| | ரூ. | | ரூ. | ரூ. |
| பொறி மற்றும் இயந்திரம் | 60,000 | முதல் கணக்குகள் | | |
| இணைப்பு மற்றும் பொருத்தியவைகள் (அலுவலகத்திற்கு) | 2,400 | மணி 2/3 | 40,000 | |
| சரக்கு (1.4.2002) மூலப்பொருட்கள் | 16,300 | நாதன் 1/3 | 20,000 | 60,000 |
| முழுமை பெற்ற சரக்குகள் | 25,400 | நடப்புக் கணக்குகள் | | |
| கொள்முதல் | 93,100 | மணி | 1,500 | |
| கூலி | 51,300 | நாதன் | 1,000 | 2,500 |
| உற்பத்திச் செலவுகள் | 16,200 | பற்பல கடனீந்தோர் | | 12,300 |
| அலுவலகச் செலவுகள் | 18,700 | கடன் இந்தியன் வங்கியில் 9% வட்டிக்கு வாங்கியது | | 20,000 |
| விற்பனைச் செலவுகள் | 15,000 | விற்பனை | | 2,50,600 |
| வங்கியில் ரொக்கம் | 6,600 | உபயோகமற்ற பொருட்களின் விற்பனை | | 3,600 |
| பற்பல கடனாளிகள் | 26,600 | | | |
| உரிமைக் காப்பு | 18,000 | | | |
| | 3,49,000 | | | 3,49,000 |

1. 2003ஆம் வருடம் மார்ச் 31ம் தேதியில் மூலப் .பொருட்கள் இருப்பு ரூ.13,300
2. பொறி இயந்திரத்தின் மீது 15% இணைப்பு மற்றும் பொருந்தியவற்றின் 10% என தேய்மானத்திற்கு வகை செய்ய வேண்டும்.
3. உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களின் மதிப்பில் ரூ.2,00,000 விற்பனைப் பிரிவிற்கு மாற்றப்பட்டது.
4. 31.3.2003ல் முழுமை பெற்ற சரக்குகள் (மாற்றப்பட்ட விலையில்) ரூ.30,000. 2002 ஏப்ரல் 1ம் தேதியில் முழுமை பெற்ற சரக்குகளின் மதிப்பு நிறுவனத்தின் அடக்கவிலையில் உள்ளது.

2002—2003 ஆம் வருடத்திற்கான மணி மற்றும் நாதன் ஆகியோரின் உற்பத்தி வியாபார லாப நட்டக் கணக்கினையும் அவ்வாண்டு இறுதியிலான இருப்பநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

**2003ஆம் வருடம் மார்ச் 31ம் தேதி முடிவடையும் ஆண்டிற்கான மணி மற்றும் நாதன் ஆகியோரின் உற்பத்தி வியாபாரம் மற்றும் இலாப நட்டக் கணக்கு**

ப வ

| | ரூ. | ரூ. | | ரூ. |
|---|---|---|---|---|
| உபயோகப்படுத்தப்பட்ட பொருட்கள் ஆரம்பசரக்கிருப்பு | 16,300 | | உபயோகமற்ற பொருட்கள் விற்பனை | 3,600 |
| கூட்டு : கொள்முதல் | 93,100 | | விற்பனை பிரிவிற்கு மாற்றப்பட்டது வகையில் | 2,00,000 |
| | 1,09,400 | | | |
| கழி : இறுதிசரக்கிருப்பு | 13,300 | | | |
| | | 96,100 | | |
| கூலி | | 51,300 | | |
| உற்பத்தி செலவு | | 16,200 | | |
| தேய்மானம்: | | | | |
| பொறி 15% | 9,000 | | | |
| உரிமைக்காப்பு 1/3 | 6,000 | 15,000 | | |
| உற்பத்தி இலாபம் (லாப நட்டக்கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | 25,000 | | |
| | | 2,03,600 | | 2,03,600 |
| | ரூ. | ரூ. | | ரூ. |
| முழுமை பெற்ற பொருட்கள் | | 25,400 | விற்பனை | 2,50,600 |
| ஆரம்ப இருப்பு உற்பத்தி பிரிவில் இருந்து மாற்றப்பட்டது | | 2,00,000 | இறுதி சரக்கிருப்பு முழுமை பெற்ற சரக்குகள் | 30,000 |
| மொத்த இலாபம் (லாப நட்டக்கணக்கிற்கு மாற்றப்பட்டது) | | 55,200 | | |
| | | 2,80,600 | | 2,80,600 |

| | | | | |
|---|---|---|---|---|
| அலுவலகச் செலவுகள் | | 18,700 | மொத்த இலாபம் வியாபாரக் கணக்கிலிருந்து மாற்றப்பட்டது | 55,200 |
| விற்பனைச் செலவுகள் | | 15,000 | உற்பத்தி இலாபம் (உற்பத்தி கணக்கிலிருந்து மாற்றப்பட்டது) | 25,000 |
| கடன் ரூ.2,00,000 9% வட்டி கொடுக்க வேண்டியது | | 1,800 | | |
| தேய்மானம்: | | | | |
| பொருந்தியவை 10% | | 240 | | |
| சரக்கு இருப்பு காப்பு | | 3,750 | | |
| நிகர இலாபம் (நடப்பு கணக்கிற்கு மாற்றப்பட்டது) மணி | 27,140 | | | |
| நாதன் | 13,570 | 40,710 | | |
| | | 80,200 | | 80,200 |

உற்பத்தி பிரிவின் லாபம் $= \frac{25,000}{2,00,000} x 100 = 12\frac{1}{2}\%$

ஆகவே முற்றுப்பெற்ற சரக்கின் இறுதிச் சரக்கு மதிப்பில் 12½ % க்குச் சமமாக சரக்கிருப்பு காப்பு ஏற்படுத்துவதன் மூலம் அதனை அடக்கவிலைக்கு கொண்டு வரலாம்.

### மணி மற்றும் நாதன் ஆகியோரின்
### 2003—ஆம் வருடம் மார்ச் 31—ந் தேதியிலுள்ள இருப்பு நிலைக்குறிப்பு

| பொறுப்புகள் | | | சொத்துக்கள் | | |
|---|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| கொடுபடா வட்டி | | 1,800 | வங்கியில் ரொக்கம் | | 6,600 |
| பற்பல கடனீந்தோர்கள் | | 12,300 | பற்பல கடனாளிகள் | | 26,000 |
| கடன் 9% வட்டியில் | | 20,000 | இறுதிச்சரக்கிருப்பு | | |
| முதல் கணக்குகள் | | | மூலப்பொருட்கள் | | 13,300 |
| மணி | 40,000 | | முழுமைபெற்ற பொருட்கள் | 30,000 | |
| நாதன் | 20,000 | 60,000 | கழி: சரக்கிருப்பு காப்பு | 3,750 | 26,250 |
| நடப்புக்கணக்குகள் | | | இணைப்புகள் மற்றும் பொருந்தியவைகள் | 2,400 | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மணி | 1,500 | | கழி: தேய்மானம் 10% | 240 | 2,160 |
| கூட்டு: 2/3 பங்கு நிகர லாபம் | 27,140 | 28,640 | பொறி மற்றும் இயந்திரம் | 60,000 | |
| நாதன் | 1,000 | | கழி: தேய்மானம் 15% | 9,000 | 51,000 |
| கூட்டு : 1/3 பங்கு நிகர லாபம் | 13,570 | 14,570 | உரிமைக்காப்பு | 18,000 | |
| | | | கழி:1/3 பங்கு நீக்கியது | 6,000 | 12,000 |
| | | 1,37,310 | | | 1,37,310 |

**எடுத்துக்காட்டு 3**

மாதம் ரூ.500 சம்பளம் ஒவ்வொருவரும் எடுத்துக் கொண்ட பிறகு கிடைக்கிற லாபம் அல்லது நட்டத்தை சமமாக பங்கு போட்டுக் கொள்கிற கூட்டாளிகள் ராமு மற்றும் சோமு 31.12.2006 வகையிலான மூன்று ஆண்டுகளுக்கான லாபப் பகிர்வைக் காட்டுக.

விபரங்கள் வருமாறு:

| | ரூ. |
|---|---|
| 3ம் ஆண்டின் இறுதியில் சொத்துக்கள் | 1,00,000 |
| 3ம் ஆண்டின் இறுதியில் பொறுப்புகள் | 30,000 |
| சம்பளம் போக மூன்று ஆண்டுகளுக்கான எடுப்பு: ராமு | 10,000 |
| சோமு | 15,000 |
| துவக்கத்தில் முதல் ராமு | 30,000 |
| சோமு | 25,000 |
| மூன்று ஆண்டுகளில் போட்ட கூடுதல் முதல் ராமு | 4,000 |

**விடை:**

இலாப நட்ட அறிக்கை

| | | |
|---|---|---|
| | 3ம் ஆண்டின் இறுதியில் சொத்துக்கள் | 1,00,000 |
| கழிக்க: | 3ம் ஆண்டின் இறுதியில் பொறுப்புகள் | 30,000 |
| | | 70,000 |
| கூட்டுக: | சம்பளம் உள்ளிட்ட எடுப்பு | |
| | ராமு 18,000 + 10,000 = 28,000<br>சோமு 18,000 + 15,000 = 33,000 | 61,000 |
| | | 1,31,000 |
| கழிக்க : | ஆரம்ப முதல் | |
| | ராமு 30,000<br>சோமு 25,000 | 55,000 |
| | | 76,000 |
| கூட்டுக: | ராமுவின் கூடுதல் முதல் | 4,000 |

லாப நட்டப் பகிர்வு (Appropriation) க/கு

ப வ

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| கூட்டாளிகளுக்கு சம்பளம் க/கு ராமு 6,000 x 3 | 18,000 | மூன்று ஆண்டுகளுக்கான நிகர லாபம் | 80,000 |
| சோமு 6,000 x 3 | 18,000 | | |
| லாபப் பங்கு மாற்றபட்டது ‰ ராமு 22,000 ‰ சோமு 22,000 | 44,000 | | |
| | 80,000 | | 80,000 |

**உங்களது முன்னேற்றத்தை சரிபார்க்கும் பயிற்சி வினாக்கள்**

**சரியா / தவறா**

1) கூட்டாண்மை ஒப்பந்தத்தில் சொல்லப்படவில்லை எனில் கூட்டாளிகள் அளித்துள்ள கடனுக்கு வட்டி பெற முடியாது.
2) ஒரு கூட்டாளி அதிகப்படியான வேலை செய்யும் போது, நிறுமத்திலுருந்து சம்பளம் பெற முடியும்.
3) கூட்டாண்மை ஒப்பந்தத்தில் கூறப்படவில்லை எனில் கூட்டாளிகளின் எடுப்பிற்கு வட்டி வசூலிப்பது இல்லை.
4) கூட்டாண்மையில் லாபத்தை முதலீடு செய்த அடிப்படையில் இல்லாமல் சரி சமமாகப் பகிர்தல் வேண்டும்.

## 1.3. புதிய கூட்டாளிகளை சேர்த்தல்

ஏற்கனவே நடந்துகொண்டிருக்கும் கூட்டு வாணிபத்தில் அனைத்துக் கூட்டாளிகளின் விருப்பத்தின் பேரிலும் ஒரு புதிய கூட்டாளி சேர்க்கப்படலாம். அவ்வாறு நிறுவனத்தில் புதிதாக சேர்க்கப்படும் கூட்டாளிக்கு நிறுவனத்தின் எதிர்காலத்தில் கிடைக்கும் இலாபத்தை பகிர்ந்து கொள்ள உரிமை உண்டு. ஏற்கனவே இருக்கக்கூடிய கூட்டாளிகள் தரம் இதுவரை பெற்று வந்த இலாபத்தின் ஒரு பகுதியை புதிய கூட்டாளிக்கு கொடுக்க வேண்டும். ஆகவே, பழைய கூட்டாளிகளின் புதிதாக வரும் கூட்டாளியிடம் இருந்து தமது இலாபத்தொகை இழப்புக்கு நட்ட ஈடு

வேண்டுவார்கள். இது நிறுவனத்தின் நன்மதிப்பிற்காகவும் செலுத்த வேண்டும்.

நிறுவனத்தில் புதிதாக சேர்க்கப்படும் கூட்டாளிக்கு சட்டப்படி கீழ்காணும் இரு உரிமைகள் உண்டு என்பதை முக்கியமாக மனதில் கொள்ள வேண்டும்.

1. நிறுவனத்தின் சொத்துக்களை பகிர்ந்து கொள்ள உரிமை உண்டு.
2. நிறுவனத்தின் வருங்கால இலாபத்தை பகிர்ந்து கொள்ள உரிமை உண்டு.

மேற்சொன்ன அடிப்படை இரு உரிமைகளைப் பெறும் பொருட்டு புதிய கூட்டாளி இரு தொகைகளை செலுத்த வேண்டும்.

1. முதல்
2. தொழிலின் நன்மதிப்பு

நிறுவனத்தின் சொத்துக்களை பகிர்ந்து கொள்ளும் பொருட்டுப் புதிய கூட்டாளி செலுத்துகின்ற தொகையினை முதல் என்று அழைக்கலாம். முதல் தொகையைப் பெறும் பொழுது எழுதப்படும் குறிப்பேட்டுப்பதிவு.

ரொக்க க/கு ப

புதிய கூட்டாளி முதல் க/கு

(புதிய கூட்டாளியிடம் இருந்து மூலதனம் பெற்றதற்காக)

புதிய கூட்டாளி நிறுவனத்தின் வருங்கால இலாபத்தை பகிர்ந்து கொள்ளும் பொருட்டு அவற்றின் பகிர்வு உரிமையைப் பெறுவதற்காக செலுத்தும் மற்றொரு தொகை தொழில் நன்மதிப்பைத் தொகையாகும். இதற்காக கீழ்காணும் குறிப்பேட்டுப் பதிவு செய்யப்படும்.

ரொக்க க/கு ப

நன்மதிப்பு க/கு

(புதிய கூட்டாளியிடம் இருந்து நன்மதிப்புத் தொகை மூலதனம் பெற்றதற்காக)

### 1.3.1 நன்மதிப்பு (Goodwill)

ஒரு வியாபாரத்தின் கீர்த்தியினையே நன்மதிப்பு என்கிறோம். வியாபாரம் தொடர்ந்து சில ஆண்டுகள் நடந்து வருமாயின் நன்மதிப்பு ஏற்பட்டு வாடிக்கையாளர்களும் பெருகியிருப்பார்கள். பெருகியிருக்கும் இவ்வாடிக்கையாளர்களின் ஆதரவு வியாபாரத்தை பொறுத்தவரையில் நல்லதொரு சொத்தாகும். அச்சொத்தினை பார்த்துக் தொட்டுணர முடியாது. எனினும் அது மதிப்புமிக்க ஒரு வியாபார சொத்தாகும். சாதாரணமாக இச்சொத்தின் உண்மையான மதிப்பு குறித்து யாரும் கவனம் செலுத்த மாட்டார்கள். இருப்பினும் அவற்றின் மதிப்புச் சில சமயங்களில் மதிப்பிட வேண்டிவரும்.

கூட்டு வணிகத்தில் கீழ்காணும் நன்மதிப்பு பற்றிய கேள்வி எழலாம்.

1. புதிய கூட்டாளியை நிறுவனத்தில் சேர்க்கும் பொழுது
2. கூட்டாளி ஒருவர் விலகினால் அல்லது இறந்து விட்டபோது
3. நிறுவனத்தை கலைக்கும் பொழுது மற்றும்
4. கூட்டாளிகளிடையே இலாபத்தை பகிர்ந்து கொள்ளும் விகிதத்தில் மாறுபாடு ஏற்படும் போது.

பழைய கூட்டாளிகளின் உழைப்பிற்கும் அவர்கள் எதிர்காலத்தில் கிடைக்கும் இலாபத்தின் ஒரு பகுதியை புதிய கூட்டாளிகளுக்குக் கொடுப்பதற்காகவும் நிறுவனத்தின் புதிய கூட்டாளியாகச் சேர்க்கப்பட்ட நபர் பழைய கூட்டாளிகளுக்கு அவர்களுடைய உழைப்பிற்கு ஈடாக கொடுக்கும் தொகையை 'நன்மதிப்புத் தொகை' என்கிறோம். எனவே பழைய கூட்டாளிகளின் உழைப்பிற்கு ஈடு செய்யும் நிறுவனத்தின் தற்போதைய இலாபம் சம்பாதிக்கும் திறனை ஏற்படுத்தியதற்காகவும் பழைய கூட்டாளிகள் இத்தொகையினை எந்த விகிதத்தில் பகிர்ந்து கொள்வது என்ற கேள்வி எழலாம்.

உதாரணமாக ராமன் மற்றும் பாலு ஆகிய இருவரும் கூட்டாளிகள் அவர்கள் தம் இலாபத்தை 3:1 என்ற விகிதத்தில் பிரித்துக் கொள்கின்றனர். அவர்கள் வேலு என்பவருக்கு ... பங்கு கொடுத்து கூட்டாளியாகச் சேர்த்துக் கொள்கின்றனர். வேலு என்பவர் நன்மதிப்புக்

தொயையாக ரூ.8,000 கொண்டு வந்தார். வேலு கொண்டு வரும் ரூ.8,000ஐ ராமன் மற்றும் பாலு ஆகியோர் எந்த விகிதத்தில் பிரித்துக் கொள்வார்கள்?

இது வேலு என்பவர் தமது ¼ பங்கினை பெறுகின்றார் என்பதை பொறுத்ததாகும். அவர் கீழ்க்காணும் ஏதாவது ஒரு வழியில் தமது பங்கினை வாங்கலாம்.

1. ராமனிடம் இருந்து மட்டும் வாங்கலாம்.
2. பாலுவிடம் இருந்து மட்டும் வாங்கலாம்.
3. ராமன் மற்றும் பாலு ஆகிய இருவரிடமிருந்து சமமாக வாங்கலாம்.
4. ¼ பங்கு ராமனிடம் இருந்து ¾ பங்கு பாலுவிடமிருந்து வாங்கலாம்.
5. ¼ பங்கு ராமனிடம் இருந்தும் மற்றும் ¾ பங்கு பாலுவிடமிருந்தும் வாங்கலாம். (அதாவது அவர்கள் ஆரம்பத்தில் இலாபத்தை பகிர்ந்து கொள்ளம் விகிதத்தில் பெற்றுக் கொள்ளலாம்)

மேற்கூறிய ஒவ்வொரு நிலையிலும் வேலுவால் கொண்டு வரப்பட்ட நன்மதிப்புத் தொகையான ரூ.8,000 ராமன் மற்றும் பாலு ஆகிய இருவரும் கீழ்கண்ட முறையில் எடுத்துக் கொள்வார்கள்.

1. ராமன் ரூ.8,000
2. பாலு ரூ.8,000
3. ராமன் ரூ.4,000 மற்றும் பாலு ரூ.4,000
4. பாலு ரூ.2,000 மற்றும் பாலு ரூ.6,000
5. ராமன் ரூ.6,000 மற்றும் ரூ.2,000.

சுருங்கக்கூறின் கூட்டாளியைச் சேர்த்துக் கொள்வதால் ஏற்படும் நன்மதிப்பு தொகை பற்றிய கேள்வி கீழ்காணும் வழிமுறைகளில் சரிக்கட்டப்படும்.

1. புதிய கூட்டாளியைச் சேர்ப்பதனால் பழைய கூட்டாளிகளின் இலாப விகிதம் மாறாமல் இருக்குமேயானால் நன்மதிப்புத் தொகை பழைய விகிதத்திலேயே பகிர்ந்தளிக்கப்படும்.

2. புதிய கூட்டாளியைச் சேர்ப்பதனால் கூட்டாளிகளின் இலாப பங்கு விகிதம் மாறுபாடு அடையுமானால் நன்மதிப்புத் தொகை புதிய கூட்டாளிகளுக்காக பழைய கூட்டாளிகள் இலாப இழப்புச் செய்த விகிதத்தில் பகிர்ந்தளிக்கப்படும்.

**நன்மதிப்பும் புதிதாக வரும் கூட்டாளியும்**

புதிதாக வரும் கூட்டாளி தான் செலுத்த சம்மதித்துள்ள நன்மதிப்பு தொகையைப் பழைய கூட்டாளிகளுக்குக் கீழ்காணும் ஏதாவது முறையில் கொடுக்கலாம்.

1. புதிய கூட்டாளி ரொக்கமாக கொண்டுவரும் நன்மதிப்பு தொகையை வியாபாரத்தில் இருக்கச் செய்தல்
2. புதிய கூட்டாளி நன்மதிப்புத் தொகையை ரொக்கமாகக் கொண்டு வருதல். பழைய கூட்டாளிகள் அத்தொகையை ரொக்கமாக வியாபாரத்தில் இருந்து எடுத்துக் கொள்ளுதல்.
3. புதிய கூட்டாளி நன்மதிப்புத் தொகையை ரொக்கமாகக் கொண்டு வராமல், ஏடுகளில் நன்மதிப்புக் கணக்கு துவங்கி அக்கணக்கினை ஏடுகளில் நன்மதிப்புக் கணக்கு துவங்கி அக்கணக்கினை ஏடுகளில் இருக்கச் செய்வதும்.
4. நன்மதிப்புக்கணக்கினை ஏடுகளில் எழுதி மறுபடியும் மாற்றுப்பதிவு மூலம் நீக்கி விடுதல்.
5. கடைசியாக நன்மதிப்புத் தொகையினைப் புதிய கூட்டாளி பழைய கூட்டாளிகளுக்குத் தனிப்பட்ட முறையில் கொடுத்து விடுதல்.

**ஏடுகளில் நன்மதிப்பினைப் பதிவு செய்யும் முறை**

| முறை | குறிப்பேட்டுப்பதிவு | குறிப்பு |
|---|---|---|
| 1. புதிய கூட்டாளி நன்மதிப்பினைக் கொண்டு வந்து அதை கணக்கு ஏடுகளில் இருக்கச் செய்வது | ரொக்க க/கு ப<br>நன்மதிப்பு க/கு<br>(புதிய கூட்டாளியிடம் இருந்து நன்மதிப்பு பெறப்பட்டதற்காக) | |
| | நன்மதிப்பு க/கு ப<br>பழைய கூட்டாளியின் முதல் க/கு<br>(பழைய கூட்டாளிகளிடையே நன்மதிப்புத்தொகையினை விகிதப்படி பகிர்ந்து கொண்டதற்காக) | இழப்பு விகிதத்தில் |

குறிப்பு

| | | |
|---|---|---|
| 2. நன்மதிப்பு புதிய கூட்டாளியால் கொண்டு வரப்பட்டு அதனைப் பழைய கூட்டாளிகள் எடுத்துக் கொள்ளும் பொழுது | ரொக்க க/கு ப<br>நன்மதிப்பு க/கு<br>(புதிய கூட்டாளியிடம் நன்மதிப்பு பெறப்பட்டதற்காக) | |
| | நன்மதிப்பு க/கு ப<br>பழைய கூட்டாளிகளின் முதல் க/குகள்<br>(பழைய கூட்டாளிகளின் நன்மதிப்பு தொகையினை விகிதத்தில் பகிர்ந்து கொண்டதற்காக) | இழப்பு விகிதத்தில் |
| | பழைய கூட்டாளிகளின் முதல் க/குகள் ப<br>ரொக்க க/கு<br>(பழைய கூட்டாளிகளின் நன்மதிப்பினை எடுத்துக் கொண்டதற்காக) | |
| 3. நன்மதிப்புக் கணக்கு ஏற்படுத்தியிருப்பின் அதனை மாற்றுப்பதிவு நீங்காத போது | நன்மதிப்பு க/கு ப<br>பழைய கூட்டாளிகளின் முதல் க/கு<br>(நன்மதிப்பு கணக்கு துவங்கி அதனை விகிதத்தில் பழைய கூட்டாளிகளுக்குப் பகிர்ந்தளித்தற்காக)<br>குறிப்பு : இம்முறையில் நன்மதிப்பு க/கு இருப்புநிலைக்குறிப்பில் இடம் பெறும் | பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில் |
| 4. நன்மதிப்பு க/கு ப துவங்கி மாற்றுப்பதிவு மூலம் நீக்கிய பொழுது | நன்மதிப்பு க/கு ப<br>பழைய கூட்டாளிகளின் முதல் க/குகள்<br>(நன்மதிப்பு க/கு துவங்கி அவற்றை பழைய கூட்டாளிகளுக்கு விகிதப்படி பகிர்ந்தளிப்பதற்காக) | பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில் |
| | அனைத்து (புதிய கூட்டாளி உட்பட)<br>கூட்டாளிகளின் முதல் க/குகள்ப<br>நன்மதிப்பு க/கு<br>(நன்மதிப்பு க/கு பதிவு மூலம் நீக்கப்பட்டதற்காக) | புதிய இலாபப் பகிர்வு விகிதத்தில் |

* பழைய கூட்டாளிகளின் இலாப பகிர்வு விகிதத்தில் மாறுபாடு இல்லாவிட்டால் இழப்பு விகிதமும் பழைய விகிதமுும் சமமாக இருக்கும்.

எடுத்துக்காட்டு 4

பரமன், சிவன் ஆகிய இருவரும் தமது இலாபத்தினை 3:2 என்ற விகிதத்தில் பகிர்ந்து கொள்கின்றனர். அவர்களின் மூலதனம் முறையே ரூ.20,000 மற்றும் 15,000 ஆகும். அவர்கள் ராமன் என்பவரை புதிய கூட்டாளியாக சேர்த்துக் கொண்டனர். ராமன் ரூ.18,000 மூலதனமாகக் கொண்டு வந்தார். ராமன் நன்மதிப்புத் தொகையினைக் கொண்டு வர முடியாமல் போனதால் நிறுவனத்தின் நன்மதிப்பு ரூ.9,000 என உடன்படிக்கையில் மதிப்பிடப்பட்டது.

புதிய நிறுவனத்தின் குறிப்பேட்டுப் பதிவு செய்து பேரேட்டுக் கணக்குகள் மற்றும் இருப்புநிலைக்குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்து ராமனின் லாபப் பங்கு விகிதம் 1/3 என மனதில் கொண்டு கூட்டாளிகள் புதிய லாபப் பகிர்வு விகிதத்தை குறிப்பிடுக.

குறிப்பேடு

| | | | ப. | வ. |
|---|---|---|---|---|
| 1. | ரொக்க க/கு ப | | 18,000 | |
| | ராமன் முதல் க/கு | | | 18,000 |
| | (ராமனிடம் இருந்து மூலதனம் பெற்றதற்காக) | | | |
| | நன்மதிப்பு க/கு ப | | 9,000 | |
| | பரமன் முதல் க/கு | | | 5,400 |
| | சிவன் முதல் க/கு | | | 3,600 |
| | (நன்மதிப்பு க/கு ஏற்படுத்தி அதனை பரமனுக்கும், சிவனுக்கும் 3:2 என்ற விகிதத்தில் பகிர்ந்து கொடுத்ததற்காக) | | | |

ப பரமன் முதல் க/கு வ

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/இ | 25,400 | இருப்பு கீ/கொ | 20,000 |
| | | நன்மதிப்பு | 5,400 |
| | 25,400 | | 25,400 |
| | | இருப்பு கீ/கொ | 25,400 |

ப சிவன் முதல் க/கு வ

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/இ | 18,600 | ரொக்க க/கு | 15,000 |
| | | நன்மதிப்பு | 3,600 |
| | 18,600 | | 18,600 |
| | | இருப்பு கீ/கொ | 18,600 |

ப ராமன் முதல் க/கு வ

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/இ | 18,000 | ரொக்க க/கு | 18,000 |
| | 18,000 | | 18,000 |
| | | இருப்பு கீ/கொ | 18,000 |

ப நன்மதிப்பு க/கு வ

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பரமன் முதல் க/கு | 5,400 | இருப்பு கீ/இ | 9,000 |
| சிவன் முதல் க/கு | 3,600 | | |
| | 9,000 | | 9,000 |
| | | இருப்பு கீ/கொ | 9,000 |

## புதிய நிறுவனத்தின் இருப்புநிலைக்குறிப்பு

.............. தேதியில்

| பொறுப்புகள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| முதல் கணக்குகள் | | ரொக்கம் | 18,000 |
| பரமன் | 25,400 | மொத்தச் சொத்துக்கள் | 35,000 |
| சிவன் | 18,600 | நன்மதிப்பு | 9,000 |
| ராமன் | 18,000 | | |
| | 62,000 | | 62,000 |

குறிப்பு

சிறுகுறிப்பு

1. நன்மதிப்புக் கணக்கினை ஏடுகளில் இருந்து நீக்கிவிடுவது குறித்து கணக்கில் ஏதும் கூறப்படாததால் நன்மதிப்பு க/கு இருப்புநிலைக் குறிப்பின் சொத்துக்கள் பகுதியில் காட்டப்பட்டுள்ளது.
2. ராமன் முதலாகக் கொண்டு வந்த ரூ.18,000 தவிர வேறு ரொக்கம் ஏதும் இல்லை.
3. நிறுவனத்தின் ராமன் சேரும் முன்பு உள்ள மொத்த சொத்துக்களின் மதிப்பு பரமன், சிவன் ஆகிய இருவரின் முதல் தொகைக்குச் சமமாக இருக்க வேண்டும்.

புதிய லாப பகிர்வு விகிதம் = ராமனுக்க 1/3

ஃ மீதம் $= 1 - \frac{1}{3} = \frac{2}{3}$

பரமனுக்கு $= \frac{2}{3} \times \frac{3}{5} = \frac{6}{15}$

| பரமன் | சிவன் | ராமன் |
|---|---|---|
| 6 | 4 | 5 |

சிவனுக்கு $\frac{2}{3} \times \frac{2}{5} = \frac{4}{15}$.

எடுத்துக்காட்டு 5

எடுத்துக்காட்டு 3ல் உள்ள அதே குறிப்புகளை வைத்து கொள்க. கூட்டாளிகள், நன்மதிப்புக் கணக்கினை ஏடுகளில் இருந்து நீக்கிவிட தீர்மானித்துள்ளார் என நினைவில் கொண்டு அதிகப்படியான குறிப்பேட்டுப்பதிவு ஏதும் இருந்தால் அதனையும், பேரேட்டுக் கணக்குகளையும் மற்றும் நிறுவனத்தின் இருப்புநிலைக்குறிப்பினையும் தயார் செய்யவும்.

விடை:

## குறிப்பேடு

| | | | ப. | வ. |
|---|---|---|---|---|
| 1. | எடுத்துக்காட்டு 3ல் உள்ள படி | | | |
| 2. | எடுத்துக்காட்டு 3ல் உள்ள படி | | | |
| 3. | பரமன் முதல் க/கு ப | | 3,600 | |
| | சிவன் முதல் க/கு ப | | 2,400 | |
| | ராமன் முதல் க/கு ப | | 3,000 | |
| | நன்மதிப்பு க/கு | | | 9,000 |
| | (புதிய இலாபப் பகிர்வு 6:4:5 என்ற விகிதப்படி நன்மதிப்புத் தொகை மாற்றுப்பதிவின் மூலம் எழுதி நீக்கிப்பட்டதற்காக) | | | |

ப பரமன் முதல் க/கு வ

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| நன்மதிப்பு க/கு | 3,600 | இருப்பு கீ/கொ | 20,000 |
| இருப்பு கீ/இ | 25,400 | நன்மதிப்பு | 5,400 |
| | 25,400 | | 25,400 |
| | | இருப்பு கீ/கொ | 21,800 |

ப சிவன் முதல் க/கு வ

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| நன்மதிப்பு க/கு | 3,000 | ரொக்க க/கு | 15,000 |
| இருப்பு கீ/இ | 15,000 | | |
| | 15,000 | | 15,000 |
| | | இருப்பு கீ/கொ | 15,000 |

ப நன்மதிப்பு க/கு வ

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பரமன் முதல் க/கு | 5,400 | பரமன் முதல் க/கு | 3,600 |
| சிவன் முதல் க/கு | 3,600 | சிவன் முதல் க/கு | 2,400 |
| | | ராமன் முதல் க/கு | 3,000 |
| | 9,000 | | 9,000 |

குறிப்பு

புதிய நிறுவனத்தின் இருப்புநிலைக்குறிப்பு

.............. தேதியில்

| பொறுப்புகள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| முதல் கணக்குகள் | | ரொக்கம் | 18,000 |
| பரமன் 21,800<br>சிவன் 16,200<br>ராமன் 15,000 | 53,000 | மொத்தச் சொத்துக்கள் | 35,000 |
| | 53,000 | | 53,000 |

நிறுவனத்தின் ஏடுகளில் ஏற்கனவே நன்மதிப்பு இருக்குமானால்

பழைய கூட்டாளிகள் தங்களது நிறுவனத்தின் ஏடுகளில் நன்மதிப்புக் கணக்கினை ஏற்கனவே வைத்திருந்தால், பழைய கூட்டாளியை சேர்க்கும் பொழுது நன்மதிப்பினை மறுமதிப்பீடு செய்வதுண்டு. அப்போது மறுமதிப்பீடு செய்தது குறித்து தேவையான சரிகட்டுப் பதிவுகளை பதிவு செய்ய வேண்டும்.

(அ) நன்மதிப்புக் கணக்கு அதன் முழுமதிப்பிற்கு ஏடுகளில் இருக்குமேயானால் புதிய கூட்டாளி முனைமம் ஏதும் கொடுக்கமாட்டார். ஆகவே நன்மதிப்பு கணக்கு பற்றி சரிகட்டும் பதிவுகள் இருக்காது.

(ஆ) நன்மதிப்புக் கணக்கு அதன் உண்மையான மதிப்பிற்கு குறைவாக மதிக்கப்பட்டிருந்தால் அப்பொழுது நன்மதிப்புக்கு கணக்கு அதன் முழுமதிப்பிற்கு உயர்த்தி மதிப்பிடப்படும். அப்படி கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் அவர்களின் பழைய லாபப் பகிர்வு விகிதத்தில் வரவு வைத்து நன்மதிப்பு கணக்கினைப் பற்று வைக்க வேண்டும்.

(இ) நன்மதிப்புக் கணக்கு அதன் உண்மையான மதிப்பை விட அதிகமாக இருப்பதால் அதிகப்படியான அத்தொகையினை மாற்றுப்பதிவின் மூலம் நீக்க வேண்டும். அதற்கு பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் அவர்களின் லாபப் பகிர்வு விகிதத்தில் பற்று எழுதி நன்மதிப்புக் கணக்கினை வரவு வைக்க வேண்டும்.

எடுத்துக்காட்டு 6

2003 ஆம் வருடம் டிசம்பர் 31ம் தேதியில் மதி, நீதி ஆகியோரின் இருப்புநிலைக்குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| முதல் கணக்குகள் | | ரொக்கம் | 3,000 |
| மதி 10,000 | | மொத்தச் சொத்துக்கள் | 9,000 |
| நீதி 8,000 | 18,000 | நன்மதிப்பு | 10,000 |
| பற்பல கடனீந்தோர் | 4,000 | | |
| | 22,000 | | 22,000 |

1.1.2004ம் தேதியில் சதி என்பவர் புதிய கூட்டாளியாகச் சேர்க்கப்பட்டார். அவர் நன்மதிப்புத் தொகையாக ரொக்கம் ஏதும் கொண்டு வரவில்லை. ஆனால் அவருடைய மூலதனமாக ரூ.10,000 கொண்டு வந்தார். தொழிலின் நன்மதிப்பானது 3 வருட சராசரி லாபத்தின் 2 மடங்கு என மதிப்பிடப்பட்டுள்ளது. மூன்று வருடங்களின் லாபம் ரூ.6,000, 6,500 மற்றும் 8,500 மதி, நீதி, சதி ஆகியோரின் புதிய இலாபப் பகிர்வு விகிதம் முறையே 3/7, 1/7 மற்றும் 3/7 ஆகும். குறிப்பேட்டுப் பதிவுகளை பதிவு செய்து நிறுவனத்தின் இருப்புநிலைக்குறிப்பினைத் தயார் செய்க.

விடை

நன்மதிப்பு 3 வருட சராசரி லாபத்தின் 2 மடங்கு $= \frac{6,000 + 6,500 + 8,500}{3}$

$= \frac{21,000}{3} = 7,000 \times 2 =$ ரூ.14,000

இங்கு நன்மதிப்பு கணக்கு ஏடுகளின் ரூ.10,000 ஆக உள்ளது. ஆனால் அவற்றின் மதிப்பு ரூ.14,000 ஆகும். ஆகவே நன்மதிப்புக் கணக்கில் (14,000—10,000) ரூ.4,000 பற்று எழுதி பழைய கூட்டாளிகள் முதல் (அதாவது மதி, நீதி ஆகியோரின் கணக்கில் வரவு வைக்க வேண்டும். ஆரம்ப பகிர்வு விகிதம் கணக்கில் கொடுக்கப்படாத அக்கூட்டாளிகள் சமபங்கு உடையவர்களாகக் கருதப்படுவர்.

குறிப்பு

| | | | ப. | வ. |
|---|---|---|---|---|
| 2004 ஜன.1 | ரொக்க க/கு ப<br>சதியின் முதல் க/கு | | 10,000 | 10,000 |
| | (சதியிடம் இருந்து முதல் பெற்றதற்காக) | | | |
| | நன்மதிப்பு க/கு ப | | 4,000 | |
| | மதியின் முதல் க/கு | | | 2,000 |
| | நீதியின் முதல் க/கு | | | 2,000 |
| | (சதி என்பவர் நிறுவனத்தில் சேர்க்கப்பட்டதால் ஏற்படுத்தப்பட்ட அதிகப்படியான நன்மதிப்பு ரூ.4,000 (14,000—10,000) பிரிக்கப்பட்டதற்காக) | | | |

| பொறுப்புகள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| பற்பல கடனீந்தோர்கள் | 4,000 | ரொக்கம் | 13,000 |
| முதல் கணக்குகள் | | மொத்தச் சொத்துக்கள் | 9,000 |
| மதி 12,000<br>நீதி 10,000<br>சதி 10,000 | 32,000 | நன்மதிப்பு | 14,000 |
| | 36,000 | | 36,000 |

**இலாபப் பகிர்வு விகிதத்தை கணக்கிடுதல்**

**மாதிரி — 1**

வீரன் மற்றும் சமர்த்து ஆகிய இரு கூட்டாளிகளும் முறையே 2/3 : 1/3 என்ற விகிதத்தில் இலாபத்தை பகிர்ந்து வந்தனர். தைரியம் என்பவரை புதிய கூட்டாளியாகச் சேர்த்துக் கொண்டு அவருக்கு நிறுவனத்தின் இலாபத்தில் ... பங்கு கொடுத்தனர். வீரன், சமர்த்து மற்றும் தைரியம் ஆகியோரின் புதிய இலாபப் பகிர்வை கணக்கிடுக.

விடை:

தைரியத்துக்கு கொடுக்க வேண்டியது ... (1 பங்கில் இருந்து இதை கழிக்கவும்)

∴ மீதம் = (அதாவது 1 − ...)

வீரனின் பங்கு $= \frac{3}{4} x \frac{2}{3} = \frac{2}{4}$ 2

சமர்த்தின் பங்கு $= \frac{3}{4} x \frac{1}{3} = \frac{1}{4}$ 1

தைரியத்தின் பங்கு $= \frac{1}{4}$ 1

வீரன் : சமர்த்து : தைரியம்

2 1 1

மாதிரி 2

பாபு மற்றும் பாலு ஆகிய இருவரும் முறையே : ... என்ற விகிதத்தில் லாபம் மற்றும் நட்டத்தினை பகிர்ந்து கொண்டனர். அவர்கள் வேலு என்பவரை புதிய கூட்டாளியாகச் சேர்த்து அவருக்கு நிறுவனத்தின் லாபத்தில் ... பங்கு கொடுத்தனர். வேலு தனது பங்கினை இருவரிடமிருந்தும் சமமாக பெற்றுக் கொண்டார். பாபு, வேலு ஆகியோரின் இலாபப் பகிர்வு விகிதத்தைக் கண்டுபிடிக்கவும்.

விடை

வேலுவின் பங்கு ...

வேலு இதில் பாதிப்பங்கினை ( ... வகுக்க 2) பாபுவிடமிருந்து மற்றொரு பாதியை பாலுவிடமிருந்தும் பெற்றுக் கொண்டனர். ஒவ்வொருவரிடமிருந்து 1/8 ஐக் கழிக்கவும்.

பாபுவின் பங்கு = 3/4 − 1/8 = 5/8 5

பாலுவின் பங்கு = 1/4 − 1/8 = 1/8 1

வேலுவின் பங்கு = 1/4 2

பாபு : பாலு : வேலு
5 : 1 : 2

பின்குறிப்பு : உதாரணமாக வேலு தனது 1/4 பங்கு முழுவதையும் பாபுவிடம் பெற்றால் அப்பொழுது பாபுவின் இலாப விகிதம் 3/4 – 1/4 = 1/2 மற்றும் பாலு 1/4 வேலு 1/4.

**மாதிரி 3**

பாபு மற்றும் கோபு ஆகிய இருவரும் இலாபம் மற்றும் நட்டத்தினை 5:3 என்ற விகிதத்தில் பிரித்துக் கொண்டனர். அவர்கள் ராம் என்பவரை புதிய கூட்டாளியாகச் சேர்க்க உடன்பாடு செய்து அவருக்கு நிறுவனத்தின் லாபத்தில் 5/16 பங்கு கொடுக்கச் சம்மதித்தனர். ராம் தனது பங்கில் 4/16 பங்கை பாபுவிடமிருந்தும் மற்றும் கோபுவிடமிருந்தும் 1/16 பங்கை பெற்றுக் கொண்டார் என்றால் புதிய இலாபப் பகிர்வு விகதம் என்ன? ராமின் பங்கு 5/16 அதில் 4/6 பங்கு பாபுவிடமிருந்து மற்றும் 1/6 பங்கு கோபுவிடமிருந்தும் பெற்றுக் கொண்டார்.

**விடை:**

பாபு $= \frac{5}{8} - \frac{4}{16} = \frac{10-4}{16} = \frac{6}{16}$ 6

கோபு $= \frac{3}{8} - \frac{1}{16} = \frac{6-1}{16} = \frac{5}{16}$ 5

ராம் $= \frac{5}{16}$ 5

பாபு : கோபு : ராம்
6 : 5 : 5

**மாதிரி 4**

மது என்பவர் புதிய கூட்டாளியாக நிறுவனம் ஒன்றில் சேர்க்கப்பட்டு அவருக்கு நிறுவனத்தில் லாபத்தில் ... பங்கு கொடுக்கப்பட்டது. அவர் தனது முதல் தொகையாக ரூ.9,000 கொண்டு வந்தார். இந்த தொகை போக மற்ற இரு கூட்டாளிகளான காதர், மைதீன் ஆகிய இருவருடைய

முதல்களை சரிசெய்தல் வேண்டும். அவர்கள் 2:1 என்ற விகிதத்தில் இலாபப் பகிர்வு செய்து கொண்டிருந்தனர். காதர் மற்றும் மைதீன் ஆகிய இருவருக்கும் இருக்க வேண்டிய முல் தொகையினை கண்டுபிடிக்கவும்.

விடை:

மதுவின் பங்கு 1/4

1 பங்கில் இருந்து இதைக் கழித்தால் மீதமுள்ளது = 1 – 1/4 = 3/4

ஆகவே காதரின் பங்கு = 2/3 x 3/4 = 1/2

மைதீன் பங்கு = 1/3 x 3/4 = 1/3

மதுவின் பங்கு = 1/4

மதுவின் முதல் ரூ.9,000 ஆக இருக்குமேயானால் நிறுவனத்தின் மொத்த முதல் தொகை ரூ.9,000 = 4/1 ரூ.36,000

காதருடைய பங்கு = ரூ.36,000 x 1/2 = ரூ.18,000

மைதீனுடைய பங்கு = ரூ.36,000 x 1/4 = ரூ.9,000

மதுவினுடைய பங்கு = ரூ.9,000

மாதிரி 5

அன்பு மற்றும் பண்பு ஆகிய இருவரும் தமது இலாபத்தினை 3/4 பங்கு மற்றும் 1/4 என்ற விகிதத்தில் பிரித்துக் கொண்டனர். அவர்களின் கனிவு என்பவரை புதிய கூட்டாளியாகச் சேர்த்துக் கொண்டு அவருக்கு லாபத்தில் 1/5 பங்கு கொடுத்தனர். கனிவு தனது பங்கிற்கு போதுமான மூலதனத்தைக் கொண்டு வரவேண்டும். மற்ற அனைத்துச் சரிகட்டுதலுக்குப் பின்பு அன்பு, பண்பு ஆகியோரின் முதல் தொகை முறையே ரூ.30,000 மற்றும் ரூ.10,000 ஆகும். கனிவு தனது மூலதனமாக கொண்டுவரும் தொகை எவ்வளவு?

குறிப்பு

விடை:

கனிவினுடைய மூலதனம் கீழ்வருமாறு நிர்ணயிக்கப்படும்

கனிவின் பங்கு $= \frac{1}{5}$

ஆகவே அன்பு மற்றும் பண்பு ஆகியோரின் மொத்தப் பங்கு $1 - \frac{1}{5} = \frac{4}{5}$

| | |
|---|---|
| அன்புவின் முதல் அனைத்துச் சரிகட்டுதலுக்குப் பின் | ரூ.30,000 |
| பண்புவின் முதல் அனைத்துச் சரிகட்டுதலுக்குப் பின் | ரூ.10,000 |
| | ரூ.40,000 |

4/5 என்பது ரூ.40,000ஐக் குறிக்கும்.

எனவே 1/5 பங்கு முதலில் 1/5 x 40,000 5/4 ரூ.10,000

ஆகவே கனிவு ரூ.10,000 முதல் தொகையாக கொண்டு வர வேண்டும்.

மாதிரி—6

அன்பின் முதல் ரூ.25,000 மற்றும் பண்பின் முதல் ரூ.15,000 தவிர மற்ற விபரங்கள் 5ல் கொடுக்கப்பட்டுள்ளதை நினைவில் கொள்க. அன்பு மற்றும் பண்பு ஆகியோரின் முதல் தொகைகளை அவர்களின் புதிய இலாபப் பகிர்வு விகிதத்தில் சரிகட்டத் தேவையான ரொக்கம் செலுத்தப்பட வேண்டும்.

கனிவு = 1/5 பங்கு ரூ.10,000

$1 - \frac{1}{5} = \frac{4}{5} x \frac{3}{4}$ அன்பு $\frac{3}{5}$ பங்கு = ரூ.30,000

$1 - \frac{1}{5} = \frac{4}{5} x \frac{1}{4}$ பண்பு $\frac{1}{5}$ பங்கு = ரூ.10,000

ஆகவே அன்பு என்பவர் மேலும் ரூ.5,000 கொண்டு வரவேண்டும் (ரூ.30,000 − 25,000)

பண்பு என்பவர் அதிகமாக உள்ள ரூ.5,000 எடுத்துக் கொள்ளலாம். (ரூ.10,000 − 15,000)

இதை இன்னொரு முறையிலும் எழுதலாம். அதாவது அன்பின் நடப்புக் கணக்கில் ரூ.5,000 பற்று எழுதியும் 'பண்பின்' நடப்புக் கணக்கில் ரூ5,000 வரவு எழுதியும் காண்பிக்கலாம்.

## சொத்துக்களையும் பொறுப்புகளையும் மறுமதிப்பீடு செய்தல்

சாதாரணமாக புதிய கூட்டாளி ஒருவர் நிறுவனத்தில் பொறுப்புகளையும் சொத்துக்களையும் சரியான மறுமதிப்பீடு செய்யும்படி கூறுவது வழக்கம். புதிய கூட்டாளியும் தான் சேர்ந்துள்ள நிறுவனத்தின் பழைய இருப்புநிலைக்குறிப்பும் சொத்துக்கள் மற்றும் பொறுப்புகளின் உண்மையான மதிப்பு குறித்து அறிய விரும்புவார். நிறுவனத்தின் சொத்துக்கள் மற்றும் பொறுப்புகளின் உண்மையான மதிப்பு குறித்து அறிய விரும்புவார். நிறுவனத்தின் சொத்துக்கள் மற்றும் பொறுப்புகள் ஆகியவற்றின் மதிப்பு அதிகமாகவோ அல்லது குறைவாகவோ இருப்பின் மறுமதிப்பீடு (Revaluation of Assets and Liablities) செய்வதன் மூலம் அவற்றின் உண்மையான மதிப்பிற்குக் கொண்டு வர வேண்டும்.

புதிய மற்றும் பழைய கூட்டாளிகள் அனைவரின் ஒப்புதலின் பேரில் எல்லாவிதமான சரிகட்டும் பதிவுகளையும் பதிவு செய்வார்கள். அப்பதிவுகளைச் சரிட்ட "லாப நட்டச் சரிகட்டுக் கணக்கு" (Profit and Loss Adjustment Account) அல்லது "மறுமதிப்பீட்டுக் கணக்கு" (Revaluation Account) ஒன்று தொடங்க வேண்டும். சில சொத்துக்களின் மதிப்பு உயருமானால் அச்சொத்துக்களின் கணக்குகளைப் பற்று எழுதி லாப நட்டச் சரிகட்டுக் கணக்கில் வரவு எழுதியும் மதிப்பு குறையும் பொழுது லாப நட்டச் சரிகட்டுக் கணக்கில் பற்றும் எழுத வேண்டும்.

இலாப நட்டக் கணக்கில் உள்ள வேறுபாடு இலாபம் அல்லது நட்டத்தினைக் காட்டும். அதனை பழைய கூட்டாளிகளின் பழைய இலாபவிகிதத்தில் அவர்களின் முதல் கணக்கிற்கு மாற்ற வேண்டும். ஏடுகளில் மாற்றம் செய்ய வேண்டாத பொழுது குறிப்பு மறுமதிப்பதிப்பீட்டுக் கணக்கு (Memorandum Revaluation A/c) உபயோகப்படுத்தப்படும்.

குறிப்பு

(இலாப நட்டச் சரிகட்டும் கணக்கு அல்லது மறுமதிப்பீட்டுக் கணக்கு)

பழைய நிறுவனத்தின் சொத்துக்களின் மதிப்பு குறைக்கப்பட்ட தொகைக்கும் அல்லது பொறுப்புகளின் மதிப்பு அதிகமாக்கப்பட்ட தொகைக்கும் இக்கணக்கினைப் பற்று எழுத வேண்டும்.

இலாப நட்ட சரிகட்டும் க/கு ப

சொத்து க/கு

பொறுப்பு க/கு

(சொத்து மற்றும் பொறுப்புகளின் கணக்கிற்கு அதற்கேற்ப நேர்எதிரான வரவு இருக்க வேண்டும்)

பழைய நிறுவனத்தின் சொத்துக்களின் மதிப்புயர்வுத் தொகைக்கும் அல்லது பொறுப்புக்கள் குறைந்த அளவிற்கான தொகைக்கும் இலாபநட்டச் சரிகட்டுக் கணக்கினை வரவு வைக்க வேண்டும்.

பொறுப்பு க/கு ப

சொத்து க/கு ப

இலாப நட்ட சரிக்கட்டு க/கு

(சொத்து மற்றும் பொறுப்புக் கணக்குகளுக்கு, அதற்கேற்ப நேர் பற்று வைக்க வேண்டும்)

கடைசியில் இலாப நட்ட சரிக்கட்டுக்கணக்கினை முடித்து, அல்லது நட்டத்தினை பழைய இலாபப் பகிர்வு பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு மாற்ற வேண்டும்.

இலாபமாக இருப்பின்

இலாப நட்டச் சரிக்கட்டும் க/கு ப

பழைய கூட்டாளிகளின் முதல் க/குகள்

குறிப்பு :

நட்டமாக இருப்பின்

பழைய கூட்டாளிகளின் முதல் க/குகள் ப

இலாப நட்டச் சரிகட்டும் க/கு

எடுத்துக்காட்டு 7

தேவன் மற்றும் ஈசன் ஆகியோரின் 2004 ஆம் வருடம் ஜீன் 30ம் தேதியிலுள்ள இருப்புநிலைக்குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது. அவ்விருவரும் சம பங்கு கூட்டாளிகள்:

| பொறுப்புகள் | | | சொத்துக்கள் | |
|---|---|---|---|---|
| | | ரூ. | | ரூ. |
| பற்பல கடனீந்தோர்கள் | | 3,250 | ரொக்கம் | 2,250 |
| முதல் கணக்குகள் | | | வரவுக்குரிய உண்டியல் | 5,000 |
| தேவன் | 25,000 | | சரக்கு | 10,000 |
| ஈசன் | 25,000 | 50,000 | இயந்திரம் | 16,000 |
| | | | கட்டடம் | 20,000 |
| | | 53,250 | | 53,250 |

அவர்கள் பரமன் என்பவரை கீழ்கண்ட நிபந்தனைகளின் பேரில் கூட்டாளியாக சேர்த்து நிறுவனத்தின் இலாபத்தில் 1/2 பங்கு கொடுக்க இசைந்தனர்.

1. பரமன் ரூ.15,000 அவருடைய ரூ.5,000 நன்மதிப்பிற்காகவும் கொண்டுவர வேண்டும்.
2. நன்மதிப்புத் தொகையில் பாதியை பழைய கூட்டாளிகள் எடுத்துக் கொள்வார்கள்.
3. வரவுக்குரிய உண்டியல் மீது 5 சதவீரம் ஒதுக்கு செய்ய வேண்டும்.
4. கட்டடம் ரூ.22,500 என மதிப்பிடப்பட்டது.
5. சரக்கு மற்றும் இயந்திரத்தின் மதிப்பில் முறையே 6% மற்றும் 10% குறைக்கப்பட வேண்டும்.
6. பற்பல கடனீந்தோரின் தொகையில் சேர்க்கப்பட்டுள்ள ரூ.250ஐ கணக்கிட வேண்டியதில்லை. ஆகவே அத்தொகையினை மாற்றுப்பதிவு மூலம் நீக்க வேண்டும்.

குறிப்பு

மேற்கண்ட நடவடிக்கைகளுக்குத் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தயார் செய்க. இலாப நட்டச் சரிகட்டும் கணக்கு கூட்டாளிகளின் முதல் கணக்கு மற்றும் நன்மதிப்புக் கணக்கு ஆகியவற்றை புதிதாக நிறுவப்பட்ட நிறுவனத்தின் இருப்புநிலைக்குறிப்பினைத் தயார் செய்க.

விடை:

குறிப்பேடு

| | | | ப. | வ. |
|---|---|---|---|---|
| 2003 ஜூலை, 1 | ரொக்க க/கு ப<br>பரமன் முதல் க/கு<br>நன்மதிப்பு க/கு | | 20,000 | 15,000<br>5,000 |
| | (பரமனிடமிருந்து மற்றும் நன்மதிப்புத் தொகை பெற்றதற்காக) | | 4,000 | |
| | நன்மதிப்பு க/கு ப | | 5,000 | |
| | தேவன் முதல் க/கு | | | 2,500 |
| | ஈசன் முதல் க/கு | | | 2,500 |
| | (தேவன் மற்றும் ஈசன் ஆகிய இருவரும் நன்மதிப்பினைப் பிரித்துக் கொண்டதற்காக) | | | |
| | தேவன் முதல் க/கு ப | | 1,250 | |
| | ஈசன் முதல் க/கு ப | | 1,250 | |
| | ரொக்க க/கு | | | 2,500 |
| | (தேவன், ஈசன் ஆகியோர் பாதி நன்மதிப்புத் தொகையினை எடுத்துக்கொண்டதற்காக) | | | |
| | இலாப நட்ட சரிக்கட்டும் க/கு ப | | 250 | |
| | வரவுக்குரிய உண்டியல் க/கு | | | 250 |
| | (வரவுக்குரிய உண்டியல் மீது ஒதுக்கு செய்ததற்காக) | | | |
| | கட்டடக் க/கு ப | | 2,500 | |
| | இலாப நட்ட சரிக்கட்டும் க/கு | | | 2,500 |
| | (கட்டடத்தின் மதிப்பு அதிகப்படுத்தியதற்காக) | | | |
| | இலாப நட்டச் சரிகட்டும் க/கு ப | | 2,100 | |
| | சரக்கு க/கு | | | 500 |
| | இயந்திரம் க/கு | | | 1,600 |
| | (சொத்துக்களின் மதிப்பு குறைக்கப்பட்டதற்காக) | | | |
| | பற்பல கடனீந்தோர்கள் க/கு ப | | 250 | |
| | இலாப நட்டச் சரிகட்டும் க/கு | | | 250 |
| | (செலுத்த வேண்டாத தொகையினைச் சரிகட்டியதற்காக) | | | |
| | இலாப நட்டச் சரிக்கட்டும் க/கு ப | | 400 | |

| | | | | |
|---|---|---|---|---|
| | தேவன் முதல் க/கு | | | 200 |
| | ஈசன் முதல் க/கு | | | 200 |
| | (இலாபம் சம அளவில் பழைய கூட்டாளிகளின் முதல் கணக்கிற்கு மாற்றப்பட்டதற்காக) | | | |

ப இலாப நட்டச் சரிக்கட்டும் கணக்கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 ஜூலை 1 | வரவுக்குரிய உண்டியல் க/கு | 250 | 2003 ஜூலை 1 | கட்டடக் க/கு | 2,500 |
| | சரக்குக் க/கு | 500 | | பற்பல கடனீந்தோர்கள் | 250 |
| | இயந்திர க/கு | 1,600 | | | |
| | இலாபம் மாற்றப்பட்டது | | | | |
| | தேவன் முதல் க/கு ‰ 200<br>ஈசன் முதல் க/கு ‰ 200 | 400 | | | |
| | | 2,750 | | | 2,750 |

ப தேவன் முதல் க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 ஜூலை 1 | ரொக்க க/கு | 1,250 | 2003 ஜூலை 1 | இருப்பு கீ/கொ | 25,000 |
| | இருப்பு கீ/இ | 26,450 | | நன்மதிப்பு க/கு | 2,500 |
| | | | | லாபநட்டச் சரிகட்டும் க/கு | 200 |
| | | 27,700 | | | 27,700 |
| | | | | இருப்பு கீ/கொ | |

குறிப்பு

ப ஈசன் முதல் க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 ஜுலை 1 | ரொக்க க/கு | 1,250 | 2003 ஜுலை 1 | இருப்பு கீ/கொ | 25,000 |
| | இருப்பு கீ/இ | 26,450 | | நன்மதிப்பு க/கு | 2,500 |
| | | | | லாபநட்டச் சரிகட்டும் க/கு | 200 |
| | | 27,700 | | | 27,700 |
| | | | | இருப்பு கீ/கொ | |

ப பரமன் முதல் க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 ஜுலை 1 | இருப்பு கீ/கொ | 15,000 | 2003 ஜுலை 1 | ரொக்க க/கு | 15,000 |
| | | 15,000 | | | |

ப நன்மதிப்பு க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 ஜுலை 1 | தேவன் முதல் க/கு | 2,500 | 2003 ஜுலை 1 | ரொக்க க/கு | 5,000 |
| | ஈசன் முதல் க/கு | 2,500 | | | |
| | | 5,000 | | | 5,000 |

2003 ஜுலை 1ம் தேதியில் தேவன், ஈசன் மற்றும் பரமன் ஆகியோரின் இருப்புநிலைக் குறிப்பு*

| பொறுப்புகள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| பற்பல கடனீந்தோர்கள் | 3,000 | ரொக்கம் | 19,750 |
| முதல் கணக்குகள்: தேவன் 26,450 | | வரக்குரிய உண்டியல் 5,000 கழிக்க : ஒதுக்கீடு 250 | 4,750 |
| ஈசன் 26,450 | | சரக்கு | 9,500 |

| | | | |
|---|---|---|---|
| பரமன் 15,000 | 67,900 | இயந்திரம் | 14,400 |
| | | கட்டடம் | 22,500 |
| | 70,900 | | 70,900 |

* இருப்புநிலைக்குறிப்பு தயாரிக்கும் முன்பு ரொக்க இருப்பினைக் கண்டுபிடிக்க தனியாக ஒரு தாளில் ரொக்க க/கு ஒன்றை தயாரிக்க வேண்டும்.

சரக்கு இயந்திரம் ஆகியவற்றின் ஆரம்ப மதிப்பிலிருந்து முறையே ரூ.500 மற்றும் ரூ.1,600 மதிப்பினைக் குறைத்து எழுதவும். அதுபோலவே பற்பல கடனீந்தோர் மதிப்பிலும் ரூ.250 அதன் ஆரம்ப மதிப்பிலிருந்து குறைத்து எழுதவும். கட்டிடத்தின் மதிப்பு ரூ.20,000க்குப் பதிலாக ரூ.22,500 என்று எழுதவும்.

எடுத்துகாட்டு : 8

கனி, மணி ஆகிய இருவரும் கூட்டாளிகள் அவர்கள் தங்களது இலாபம் மற்றும் நட்டத்தினை முறையே 3/5 மற்றும் 2/5 என்ற விகிதத்தில் பிரித்துக் கொண்டனர்.

அவர்களின் இருப்புநிலைக்குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| பொறுப்புகள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| செலுத்த வேண்டிய உண்டியல் | 8,000 | வங்கியில் ரொக்கம் | 13,000 |
| முதல் கணக்குகள்: கனி 36,000 | | பற்பல கடனாளிகள் 20,000 கழிவு : காப்பு 800 800 | 19,200 |
| மணி 24,000 | | சரக்கு | 22,800 |
| | | பொறி | 13,000 |
| | 68,000 | | 68,000 |

கீழ்கண்ட நிபந்தனைகளின் பேரில் அவர்கள் மாறன் என்பவரை புதிய கூட்டாளியாக சேர்த்து அவருக்கு நிறுவனத்தின் பங்கு கொடுக்க முடிவு செய்தனர்.

குறிப்பு

1. வராக்கடன் மீது காப்பு ரூ.200ஆகக் குறைக்கப்பட்டது.
2. பொறியின் மதிப்பில் ரூ.3000 குறைக்கப்பட்டது.
3. சரக்கு ரூ.25,400 என மறுமதிப்பீடு செய்யப்பட்டது.
4. கொடுபடாச் செலவு ரூ.200 கணக்கிற்குக் கொண்டுவரப்பட்டது.
5. சேதங்கள் சம்பந்தப்பட்ட உரிம கோரிக்கையின் பேரில் ரூ.1,000 வரையிலான பொறுப்பு ஒன்றினை நிறுவனம் ஏற்றுக் கொண்டது.
6. கனி என்பவர் உழையாக் கூட்டாளியாக இருக்க விரும்பியதால் மறுமதிப்பீட்டின் மூலம் நட்டம் ஏதேனும் ஏற்பட்டால் அவற்றை அவரே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று உடன்படிக்கை செய்யப்பட்டது.
7. மாறன் அவருடைய நன்மதிப்பு பங்கிற்காக ரூ.5,000 கொண்டு வந்தார். மேலும் புதிய நிறுவனத்தின் மொத்த மூலதனத்தின் அவருடைய பங்கு 1/3 ஏற்ப முதல் கொண்டு வர வேண்டும்.

குறிப்பேட்டுப் பதிவுகளைப் பதிவு செய்து இலாப நட்டச் சரிகட்டும் பதிவு கணக்கினையும் மாறனைச் சேர்த்த பின்பு உள்ள இருப்புநிலைக்குறிப்பினையும் தயார் செய்க.

குறிப்பேடு

| | | | ப. | வ. |
|---|---|---|---|---|
| | வராக்கடன் காப்பு க/கு ப | | 600 | |
| | இலாபநட்டச்சரிகட்டும் க/கு | | | 600 |
| | (வராக்கடன் காப்பினைக் குறைத்தற்கான சரிக்கட்டுதலுக்காக) | | | |
| | இலாப நட்டச் சரிகட்டும் க/கு ப | | 3,000 | |
| | பொறி க/கு | | | 3,000 |
| | (பொறியின் மதிப்பு குறைக்கப்பட்டதற்காக) | | | |
| | சரக்கு க/கு ப | | 2,600 | |
| | இலாபநட்டச்சரிகட்டும் க/கு | | | 2,600 |
| | (சரக்கின் மதிப்பு கூடுதலாக்கப்பட்டதற்காக) | | | |
| | இலாப நட்ட சரிக்கட்டும் க/கு ப | | 1,200 | |
| | கொடுபடாச் செலவு க/கு | | | 200 |
| | ஐயப் பொறுப்பிற்கான ஒதுக்குக் க/கு | | | 1,000 |
| | (கொடுபடாச் செலவு மற்றும் ஐயப் பொறுப்பிற்கான ஒதுக்குத் தொகையினைக் கணக்கிற்கு கொண்டு வந்ததற்காக) | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | கனியின் முதல் க/கு ப | | | 1,000 | |
| | இலாப நட்ட சரிக்கட்டும் க/கு | | | | 1,000 |
| | (உடன்படிக்கையின் படி நட்டம் கனியின் முதல் கணக்கிற்கு மாற்றப்பட்டதற்காக) | | | | |
| | ரொக்க க/கு ப | | | 5,000 | |
| | நன்மதிப்பு க/கு | | | | 5,000 |
| | (மாறனிடமிருந்து பெற்ற நன்மதிப்பிற்காக) | | | | |
| | நன்மதிப்பு க/கு ப | | | 5,000 | |
| | கனி முதல் க/கு | | | | 3,000 |
| | மணி முதல் க/கு | | | | 2,000 |
| | (கனி மற்றும் மணி ஆகியோரின் பங்கு விகிதப்படி நன்மதிப்பு பிரிக்கப்பட்டதற்காக—3:2) | | | | |
| ** | ரொக்க க/கு ப | | | 32,000 | |
| | மாறன் முதல் க/கு | | | | 32,000 |
| | (மாறனிடமிருந்து அவரின் பங்கிற்குத் தகுந்தாற்போல முதல் பெற்றமைக்காக) | | | | |

**ப இலாப நட்டச் சரிகட்டும் கணக்கு வ**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பொறி க/கு | 3,000 | வராக்கடன் காப்பு க/கு | 600 |
| கொடுபடாச் செலவு க/கு | 200 | சரக்கு க/கு | 2,600 |
| ஐயப் பொறுப்பிற்கான ஒதுக்கு க/கு | 1,000 | கனி முதல் க/கு | 1,000 |
| | 4,200 | | 4,200 |

**கனி, மணி, மாறன் ஆகியோரின் இருப்புநிலைக்குறிப்பு ......... தேதியில் உள்ளபடி**

| பொறுப்புகள் | | | சொத்துக்கள் | | |
|---|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| செலுத்தவேண்டிய உண்டியல் | | 8,000 | ரொக்கம்<br>வங்கியில் ரொக்கம் | | 37,000<br>13,000 |
| கொடுபடாச் செலவுகள் | | 200 | பற்பல கடனாளிகள் | 20,000 | |
| ஐயப்பொறுப்பிற்கான ஒதுக்கு | | 1,000 | கழிக்க : வராக்கடன் காப்பு | 200 | 19,800 |
| முதல் கணக்குகள்: | | | சரக்கு | | 25,400 |
| கனி | 38,000 | | பொறி | | 10,000 |
| மணி | 26,000 | | | | |
| மாறன் | 32,000 | 96,000 | | | |
| | | 1,05,200 | | | 1,05,200 |

மறுமதிப்பீடு செய்யப்பட்ட (உடன்படிக்கையின் படி) சொத்துக்கள் இந்த இருப்புநிலைக் குறிப்பில் காட்டப்பட்டுள்ளன).

குறிப்பு

* தனிப்பட்ட தாளில் ரொக்கக்கணக்கினை தயார் செய்து இத்தொகை கண்டுபிடிக்கப்பட்டது.

குறிப்பு : மாறனுடைய முதல் கீழ்கண்டவாறு நிர்ணயிக்கப்பட்டது.

* இப்பதிவு இலாப நட்டச் சரிகட்டும் க/கு தயார் செய்த பின்பு பதிவு செய்யப்படும்.

** இப்பதிவு கனி, மணி ஆகியோரின் முதல் கணக்கினைத் தயார் செய்த பின்பு மாறன் தனது பங்கிற்கேற்ப முதல் கொண்டு வந்த பின்பு பதிவு செய்யப்படும்.

| | | | |
|---|---|---|---|
| கனி முதல் | | | |
| நட்டம் | 1,000 | 36,000 | ஆரம்பத்தில் |
| | | 2,000 | நன்மதிப்பு |
| | | 38,000 | நிகர முதல் |
| மணி முதல் | | | |
| | | 24,000 | ஆரம்பத்தில் |
| | | 2,000 | நன்மதிப்பு |
| | | 26,000 | |

கனியின் முதல் சரிக்கட்டுதலுக்கு பின்பு = 38,000

மணியின் முதல் சரிக்கட்டுதலுக்குப் பின்பு = 26,000

64,000

மாறனுக்கு 1/3 பங்கு கொடுக்கப்பட்டது. ஆகவே கனி, மணி ஆகயி இருவருக்கும் உள்ள பங்கு 2/3 (அதாவது 1—1/3)

ஃ 2/3 பங்கிற்கான மொத்த முதல் ரூ.64,000. ஆகவோ 1/3 பங்கிற்கு முதல் 1/3 x 64,000 x 3/2 x 32,000. எனவே, மாறன் ரூ.32,000 அவருடைய முதலாகக் கொண்டு வர வேண்டும்.

### காப்பு முதலியன

நிறுவனத்தின் இருப்புநிலைக்குறிப்பில் உள்ள காப்பு ஏற்கனவே இருக்கும் கூட்டாளிகளின் சேர்க்கப்பட்ட இலாபத் தொகையாகும்.

எனவே அவ்வாறு சேர்க்கப்பட்ட இலாபத்தினை பழைய கூட்டாளிகளின் முதல் கணக்கிற்கு அவர்களின் பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில் மாற்ற வேண்டும். அதுபோலவே நிறுவனத்தின்

இருப்புநிலைக்குறிப்பில் இலாப நட்டக் கணக்கில், இலாபம் அல்லது நட்டம் ஏதேனும் இருப்பின் அவற்றையும் பழைய கூட்டாளிகள் அவர்களின் பழைய இலாப பகிர்வு விகிதத்தில் பிரித்துக் கொள்ள வேண்டும்.

அவ்வாறு மாற்றப்படும் இலாபத்திற்கான குறிப்பேட்டுப்பதிவு:

| | |
|---|---|
| பொதுக் காப்பிருப்பு க/கு | பற்று |
| காப்பு நிதிக் க/கு | பற்று |
| இலாப நட்டக் க/கு | பற்று |
| ** பிற கூடியிருக்கும் காப்பு க/கு | பற்று |
| * பிற கூட்டாளிகளின் முதல் கணக்கு வரவு | |

(சேர்க்கப்பட்ட இலாபத்தினை பழைய கூட்டாளிகளுக்கு பழைய இலாபப் பகிர்வு விகிதத்தில் பகிர்ந்ததற்காக)

தேர்வுகளில் இது குறித்து கேட்கப்படாவிட்டாலும் மாணவர்கள் இவற்றை விடைத்தாளில் செய்யவேண்டுமென நினைவு கொள்ள வேண்டும்.

குறிப்பு:

*** முதலீடு நெகிழ்ச்சி நிதி (Investment Fluctuation Fund), ஊழியர்களின் இழப்பீடு நிதி (Worker's Compensation Fund)

* அல்லது நடப்புக் கணக்கு (கணக்கில் கூறியுள்ளபடி)

எடுத்துக்காட்டு : 9

அன்பு மற்றும் பண்பு ஆகிய இருவரும் 3:2 என்ற விகிதத்தில் இலாபத்தினை பகிர்ந்து கொண்டனர். 2003 வருடம் மார்ச் மாதம் 31ம் தேதியிலுள்ள அன்பு, பண்பு ஆகியோரின் இருப்புநிலைக் குறிப்பு கொடுக்கப்பட்டுள்ளது. கனிவு என்பவரை புதிய கூட்டாளியாக அதே தேதியில் சேர்த்துக் கொண்டனர். அப்பொழுது அன்பு, பண்பு ஆகியோரின் நிலை பின்வருமாறு:

| பொறுப்புகள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| அன்பின் முதல் | 12,000 | கடனாளிகள் | 11,000 |
| பண்பின் முதல் | 5,000 | நிலம் மற்றும் கட்டடங்கள் | 8,000 |
| கடனீந்தோர்கள் | 12,400 | பொறி மற்றும் இயந்திரம் | 10,000 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | 600 | சரக்கு | 12,000 |
| பொதுக் காப்பிருப்பு | 10,000 | ரொக்க இருப்பு | 9,000 |
| ஊழியர்களின் நஷ்ட ஈட்டுநிதி | 4,000 | | |
| இயந்திரத்தை மாற்றுவதற்கான நிதி | 6,000 | | |
| | 50,000 | | 50,000 |

கீழ்கண்ட நிபந்தனைகளின் பேரில் புதிய கூட்டாளி சேர்க்கப்பட்டார்.

1. நிலம் மற்றும் கட்டடத்தின் மதிப்பு ரூ.18,000 உயர்த்தப்பட்டது.
2. வராக்கடன் ரூ.4,000 எழுதி நீக்கப்பட வேண்டும்.
3. ராம் என்ற பழைய கடனாளியின் கணக்கு வராக்கடனாகக் கருதப்பட்டு நீக்கப்பட்டிருந்தது. இப்பொழுது அவர் ரூ.300 கொடுத்து தனது கணக்கினைத் தீர்ப்பதாக உறுதி அளித்துள்ளார்.
4. அன்பு, பண்பு ஆகிய இருவரும் ரூ.3,000 மதிப்புள்ள இயந்திரத்தை வாடகைக்கு கொள்முதல் முறையில் வாங்கியிருந்தனர். அதில் ரூ.300 மட்டும் செலுத்த வேண்டும். இயந்திரம், கொடுக்க வேண்டிய பொறுப்பு இவை இரண்டும் இருப்புநிலைக்குறிப்பில் இடம் பெறவில்லை.
5. அன்பு, பண்பு ஆகிய இருவரும் கூட்டு ஆயுள் காப்பீட்டு பாலிசியை வைத்திருந்தனர். அத்தேதியில் அப்பாலிசியின் விடுமதிப்பு ரூ.3,000. இதனை நிறுவனத்தின் சொத்துக்களுடன் சேர்க்க முடிவு செய்யப்பட்டது.
6. ஊழியர்களின் நட்ட ஈட்டு நிதியில் ரூ.1,000 அளவிற்குப் பொறுப்பு இருப்பதாக நிர்ணயிக்கப்பட்டது.

அவர்கள் கனிவு என்பவரை ரூ.7,500 மூலதனம் மற்றும் ரூ.3,000 நன்மதிப்புத் தொகை ஆகியவற்றுடன் கூட்டாளியாகச் சேர்த்துக் கொண்டனர். மேற்கண்ட நடவடிக்கைகளுக்குப் பின்பு, பழைய கூட்டாளிகளின் முதல் கணக்குகள் கனியின் முதல் கணக்குகள், கனியன் தொகைக்கு ஏற்ப இருக்க வேண்டும். அதாவது பழைய கூட்டாளிகளின்

அதிகமாகவோ அல்லது குறைவாகவோ உள்ள முதல் தொகையினை ரொக்கமாக எடுத்தோ அல்லது கொணர்ந்தோ சரிசெய்தல் வேண்டும்.

புதிய நிறுவனத்தின் இலாபப் பகிர்வு விகிதம் அன்பு $\frac{2}{5}$ பங்கு பண்பு $\frac{2}{5}$ பங்கு மற்றும் கனிவு $\frac{1}{5}$ பங்கு

குறிப்பேட்டுப் பதிவு செய்து இலாபநட்டச் சரிகட்டும் கணக்கு கூட்டாளிகளின் முதல் கணக்குகள் மற்றும் இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றைத் தயார் செய்க.

விடை:

குறிப்பேடு

| | | | ப. | வ. |
|---|---|---|---|---|
| 2003 மார்ச் 31 | நிலம் மற்றும் கட்டிடங்கள் க/கு ப<br>இலாபநட்டச் சரிக்கட்டும் க/கு | | 10,000 | 10,000 |
| | (கட்டிடத்தின் மதிப்பு அதிகரிக்கப்பட்டதை கணக்கில் கொண்டு வந்ததற்காக) | | | |
| | வராக்கடன் க/கு ப | | 4,000 | |
| | கடனாளிகள் க/கு | | | 4,000 |
| | (நட்டத்தினை இலாப நட்டச் சரிக்கட்டும் கணக்கிற்கு கொண்டு மாற்றியதற்காக) | | | |
| | ராம் பழைய வாடிக்கையாளர் க/கு ப | | 300 | |
| | இலாப நட்டச் சரிகட்டும் க/கு | | | 300 |
| | (ராம் கொடுக்க சம்மதித்த தொகையினைக் கணக்கிற்கு கொண்டுவந்ததற்காக) | | | |
| | இயந்திர க/கு ப | | 3,000 | |
| | இலாப நட்டச் சரிகட்டும் க/கு | | | 3,000 |
| | (சொத்தினை கணக்கிற்கு கொண்டு வந்ததற்காக) | | | |
| | இலாப நட்ட சரிகட்டும் க/கு ப | | 300 | |
| | விற்பனையாளர்களின் க/கு | | | 300 |
| | (வாடகை கொள்முதல் இயந்திரத்திற்கான பொறுப்பு கணக்கிற்கு கொண்டு வரப்பட்டதற்காக) | | | |
| | கூட்டு ஆயுள் பாலிசி க/கு ப | | 3,000 | |
| | இலாப நட்டச் சரிகட்டும் க/கு | | | 3,000 |
| | (பாலிசியின் விடுமதிப்பு கணக்கிற்கு கொண்டு வரப்பட்டதற்காக) | | | |
| | ஊழியர்களின் நஷ்ட ஈடு நிதிக் க/கு ப | | 3,000 | |
| | பொதுக் காப்பிருப்பு க/கு ப | | 10,000 | |
| | அன்பு முதல் க/கு | | | 7,800 |
| | பண்பு முதல் க/கு | | | 5,200 |
| | (பொதுக்காப்பிருப்பு மற்றும் ஊழியர்களினை நஷ்ட ஈடு நிதியில் பொறுப்பு கழித்து ரூ. 4,000—ரூ. 1,000=ரூ. 3,000 மீதமுள்ள தொகையினை அன்பு, பண்பு ஆகியோரின் முதல் கணக்கில் 3:2 என்ற | | | |

குறிப்பு

| | | | | |
|---|---|---|---|---|
| | ரொக்க க/கு ப | | 10,500 | |
| | கனியின் முதல் க/கு | | | 7,500 |
| | நன்மதிப்பு க/கு | | | 3,000 |
| | (கனியிடம் இருந்து முதல் மற்றும் நன்மதிப்பு பெற்றதற்காக) | | | |

பாலிசி மீதான விடுமதிப்பு பட்டுக் கணக்கிற்கு கொண்டுவரப்பட்டது. பொறுப்புத் தொகையான ரூ.1,000 மொத்தத் தொகை ரூ 4,000 இருந்து கழிக்கப்பட்டது.

| | | | ப. | வ. |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | நன்மதிப்பு க/கு ப. | | 3,000 | |
| | அன்பு முதல் க/கு | | | 3,000 |
| | (அன்பின் கணக்கில் நன்மதிப்பின் முழுத் தொகையும் வரவு வைக்கப்பட்டது) | | | |
| | அன்பு, பண்பு பழைய விகிதம் 3:2. அன்பு பண்பு, கனிவு புதிய விகிதம் 2:2:1. பண்பு தனது பழைய பங்கினையே தொடர்ந்து வைத்திருக்கின்றார். | | | |
| | (அதாவது அன்பின் பங்கானது 3/5 லிருந்து 2/5 பங்கிற்கு குறைந்துவிட்டதால் 1/5 இழந்துவிட்டார்) | | | |
| | இலாப நட்டச் சரிகட்டும் க/கு ப | | 12,000 | |
| | அன்பின் முதல் க/கு | | | 7,2000 |
| | பண்பின் முதல் க/கு | | | 4,800 |
| | (அன்பு, பண்பு ஆகிய இருவரும் 3:2 என்ற விகிதத்தில் இலாபம் மாற்றப்பட்டதற்காக) | | | |
| | அன்பின் முதல் க/கு ப. | | 15,000 | |
| | ரொக்க க/கு | | | 15,000 |
| | (அன்பின் முதல் கணக்கிற்கு அதிகமாக உள்ள ரூ 15,000 அவரால் எடுத்துக் கொள்ளப்பட்டது. | | | |

கனியின் வருகையால் பண்பிற்கு தனது இலாபப் பகிர்வு விகிதத்தில் இழப்பு இல்லாததர் பண்பின் முதல் கணக்கில் வரவு வைக்கப்படவில்லை.

*இலாப நட்டச் சரிகட்டும் கணக்கைத் தயார் செய்த பின்பு இந்த நடவடிக்கை பதிவு செய்யப்படும்.

அன்பின் முதல் கணக்கினைத் தயார் செய்த பின்பு இந்த நடவடிக்கை பதிவு செய்யப்படும்.

| ப | | அன்பின் முதல் கணக்கு | | | வ |
|---|---|---|---|---|---|
| 2003 | | ரூ. | 2003 | | ரூ. |
| மார்.31 | ரொக்க க/கு (3) | 15,000 | மார்.31 | இருப்பு கீ/கொ | 12,000 |
| | இருப்பு கீ/இ (4) | 15,000 | | ஊழியர்களின் நஷ்ட ஈட்டு நதி க/கு 3/5 1,800 | |
| | | | | பொதுக்காப்பிருப்பு க/கு 3/5 6000 | 7,800 |
| | | | | நன்மதிப்பு க/கு | 3,000 |
| | | | | இலாபநட்டச் சரிகட்டும் க/கு | 7,200 |
| | (2) | 30,000 | | (1) | 30,000 |
| | | | ஏப்ரல் 1 | இருப்பு கீ/கொ (5) | 15,000 |

பண்பிடம் போதுமான மூலதனம் உள்ளதால் அவருடைய முதல் கணக்கில் நடவடிக்கை ஏதும், பதிவு செய்யப்பட வில்லை. ஆகவே அவர் ரொக்கத்தை கொண்டுவரவோ அல்லத எடுத்தக் கொள்ளவோ வேண்டியதில்லை.

| ப | | இலாபநட்ட சரிகட்டும் கணக்கு | | | வ |
|---|---|---|---|---|---|
| 2003 | | ரூ. | 2003 | | ரூ. |
| மார்.31 | வராக்கடன் க/கு | 4,000 | மார்.31 | நிலம் மற்றும் கட்டிடம் க/கு | 10,000 |
| | (இயந்திரம், வாடகை கொள்முதல்) | | | | |
| | விற்பனையாளர் க/கு | 300 | | ராம் க/கு | 300 |
| | இலாபம் மாற்றப்பட்டது | | | இயந்திர க/கு | 3,000 |
| | அன்பின் | | | கூட்டு ஆயுள் பாலிசி க/கு | 3,000 |
| | முதல் க/கு 3/5 | | | | |
| | 7,200 | | | | |
| | பண்பின் | | | | |
| | முதல் க/கு 2/5 4,800 | | | | |
| | | 12,000 | | | |
| | | 16,300 | | | 16,300 |

| ப | | கனியின் முதல் க/கு | | | வ |
|---|---|---|---|---|---|
| 2003 மார்ச் 31 | இருப்பு கீ/இ (3) (2) | ரூ. 7,500 | 2003 மார்ச் 31 | ரொக்க் க/கு (1) | ரூ. 7,500 |
| | | 7,500 | | | 7,500 |
| | | | ஏப்ரல் 1 | இருப்பு கீ/கொ | 7,500 |

குறிப்பு

| ப | | பண்பின் முதல் கணக்கு | | | வ |
|---|---|---|---|---|---|
| 2003 | | | 2003 | | |
| மார்.31 | இருப்பு கீ/இ (3) | 15,000 | மார்.31 | இருப்பு கீ/கொ | 5,000 |
| | | | | ஊழியர்களின் நஷ்ட ஈட்டு நிதி க/கு 2/5 1,200 | |
| | | | | பொதுக்காப்பிருப்பு க/கு 3/5 4000 | 5,200 |
| | | | | இலாபநட்டச் சரிகட்டும் க/கு | 4,800 |
| | | 15,000 | | (1) | 15,000 |
| | | | 2003 ஏப்ரல் 1 | இருப்பு கீ/கொ (4) | 15,000 |

| ப | | நன்மதிப்பு க/கு | | | வ |
|---|---|---|---|---|---|
| 2003 மார்ச் 31 | அன்பின் முதல் க/கு(1) | ரூ. 3,000 | 2003 மார்ச் 31 | ரொக்க க/கு | ரூ. 3,000 |
| | | 3,000 | | | 3,000 |

| ப | | ரொக்க க/கு | | | வ |
|---|---|---|---|---|---|
| 2003 மார்ச் 31 | இருப்பு கீ/கொ | ரூ. 9,000 | 2003 மார்ச் 31 | அன்பின் முதல் க/கு | ரூ. 15,000 |
| | கனி முதல் க/கு | 7,500 | | இருப்பு கீ/இ | 4,500 |
| | நன்மதிப்பு க/கு | 3,000 | | | |
| | | 19,500 | | | 19,500 |
| ஏப்ரல் 1 | இருப்பு கீ/கொ | 4,500 | | | |

**2003 ஆம் வருடம் ஏப்ரல் 1ம் தேதியில் அன்பு, பண்பு கனிவு**

**ஆகியோரின் இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| கடனீந்தோர்கள் | 12,400 | ரொக்க இருப்பு | 4,500 |
| (இயந்திரம் வாடகை கொள்முதல் ) | | கூட்டு ஆயுள் பாலிசி | 3,000 |
| விற்பனையாளர் | 300 | கடனாளிகள் (ராம் கடன் ரூ. 300 உட்பட) | 7,300 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | 600 | சரக்கு | 12,000 |
| ஊழியர்களின் நஷ்ட ஈட்டு நிதி | 1,000 | பொறி மற்றும் இயந்திரம் | 13,000 |
| புதிய இயந்திரத்தை மாற்றுவதற்கான நிதி | 6,000 | நிலம் மற்றும் கட்டிடம் | 18,000 |

| | | | |
|---|---|---|---|
| முதல் கணக்குகள் | | | |
| அன்பு 15,000 | | | |
| பண்பு 15,000 | | | |
| கனிவு 7,500 | 37,500 | | |
| | 57,800 | | 57,800 |

பின்குறிப்பு: ஏடுகளில் எழுதப்படாத சொத்துக் கணக்குகளான ராமிடமிருந்து வரக்கூடிய தொகை இயந்திரம், கூட்டு ஆயுள் பாலிசி பொறுப்புகளில் ரூ 300 (வாடகை கொள்முதல் முறை) விற்பனையாளருக்கு கொடுக்க வேண்டியன ஆகியவை கணக்கிற்குக் கொண்டு வரப்பட்டன.

நட்ட ஈட்டிற்கான பொறுப்பு ரூ 1,000 தவிர மற்றவை சேர்த்திருக்கக் கூடிய லாபம் ஆகும்.

எடுத்துக்காட்டு: 10

சங்கர், சுந்தர், ஆகியோரின் இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது. அவர்கள் தங்களது இலாபத்தை முறையே மற்றும் ... என்ற விகிதத்தில் பிரித்துக் கொண்டனர்.

| பொறுப்புகள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| கடனீந்தோர்கள் | 37,500 | வங்கியில் ரொக்க | 22,500 |
| பொதுக்காப்பிருப்பு | 4,000 | முதலீடுகள் | 3,000 |
| சங்கர் முதல் | 34,500 | கடனாளிகள் 20,000 | |
| சுந்தர் முதல் | 11,500 | கழிக்க: காப்பு 4,000 | 16,000 |
| | | சலக்கு | 20,000 |
| | | கட்டிடம் | 26,000 |
| | 87,500 | | 87,500 |

அவர்கள் கண்ணன் என்பவரைக் கீழ்கண்ட நிபந்தனைகளின் பேரில் புதிய கூட்டாளியாகச் சேர்த்துக் கொண்டனர்.

1. கண்ணன் ரூ. 14,500ஐ தனது முதலுக்காக கொண்டு வர வேண்டும் அவருக்கு இலாபத்தில் 1/3 பங்கு கொடுக்கப்படும்.

குறிப்பு

2. கண்ணன் நிறுவனத்தின் கூட்டாளியாகச் சேருவதற்கு முன்பு நிறுவனத்தின் நன்மதிப்புக் கணக்கு ரூ 12,000க்கு ஏற்படுத்த வேண்டும்.

3. முதலீடுகளின் சந்தை மதிப்பு, இருப்புநிலைக் குறிப்பு தயார் செய்த நாளில் ரூ 2,600 ஆக இருந்தது. இத்தொகைக்கு சங்கர் முதலீடுகளை எடுத்துக் கொண்டார்.

4. ஐயக்கடன் காப்புத் தொகையில் ரூ 1,000 குறைக்கப்பட வேண்டும். புதிய கூட்டு நிறுவனத்தில் நடப்புக் கணக்குகளில் தேவையான சரிகட்டுதல்கள் எழுதப்பட வேண்டும்.

தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளை பதிவு செய்து நிறுவனத்தின் ஏடுகளில் முக்கியமான பேரேட்டுக் கணக்குகளைத் தயார் செய்க. மேலும் புதிய கூட்டு நிறுவனத்தின் இருப்பு நிலைக்குறிப்பினையும் தயார் செய்க.

குறிப்பேடு

| | | | ப. | வ. |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| | நன்மதிப்பு ப. | | 12,000 | |
| | சங்கரின் நடப்பு க/கு | | | 9,000 |
| | சுந்தரின் நடப்பு க/கு | | | 3,000 |
| | (கண்ணன் நிறுவனத்தில் சேருமுன்பு ஏற்படுத்தப் பட்டத் தொகையினை சங்கர் மற்றும் சுந்தர் இருவரும் முறையே 3/4 பங்கு 1/4 பங்கு என்ற விகிதத்தில் பிரித்ததற்காக) | | | |
| | இலாபநட்டச் சரிகட்டும் க/கு ப. | | 400 | |
| | முதலீடுகள் க/கு | | | 400 |
| | (முதலீடுகளின் மதிப்பு குறைக்கப்பட்டதை கணக்கிற்கு கொண்டு வந்ததற்காக) | | | |
| | சங்கரின் நடப்பு க/கு ப. | | 2,600 | |
| | முதலீடுகள் க/கு | | | 2,600 |
| | (முதலீடுகளை சங்கர் எடுத்துக் கொண்டதற்காக) | | | |
| | ஐயக்கடன் காப்புக் க/கு | | 1,000 | |
| | இலாபநட்டச் சரிகட்டும் க/கு | | | 1,000 |

| | | | | |
|---|---|---|---|---|
| | (காப்புத் தொகை குறைக்கப்பட்டததை கணக்கிற்கு கொண்டுவந்ததற்காக) | | | |
| | பொதுக்காப்பிருப்பு ப. | | 4,000 | |
| | சங்கரின் நடப்பு க/கு | | | 3,000 |
| | சுந்தரின் நடப்பு க/கு | | | 1,000 |
| | (பொதுக்காப்பிருப்புத் தொகையை சங்கர் சுந்தர் முறையே 8:1 என்ற விகிதத்தில் பிரித்துக் கொண்டதற்காக) | | | |
| | வங்கி க/கு ப. | | 14,500 | |
| | கண்ணன் முதல் க/கு | | | 14,500 |
| | (முதல் தொகைக்காக கண்ணனிடமிருந்து காசோலை பெற்றதற்காக) | | | |
| | இலாபநட்டச் சரிகட்டும் க/கு ப. | | 600 | |
| | சங்கரின் நடப்பு க/கு | | | 450 |
| | சுந்தரின் நடப்பு க/கு | | | 150 |
| | (சங்கர், சுந்தர் முறையே 3:1 என்ற விகிதத்தில் இலாபத்தை பிரித்துக் கொண்டதற்காக) | | | |

| ப. | இலாப நட்டச் சரிகட்டும் கணக்கு | | வ |
|---|---|---|---|
| | ரூ. | | |
| முதலீடுகள் க/கு | 400 | ஐயக்கடன் காப்புக் க/கு | 1,000 |
| இலாபம் மாற்றப்பட்டது | | | |
| சங்கரின் நடப்புக் கணக்கிற்கு ரூ 450. | | | |
| சுந்தரின் நடப்புக் கணக்கிற்கு ரூ. 150 | 600 | | |
| | 1,000 | | 1,000 |

| ப. | நன்மதிப்பு க/கு | | வ. |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| சங்கரின் நடப்பு க/கு | 9,000 | இருப்பு கீ/இ | 12,000 |
| சுந்தரின் நடப்பு க/கு | 3,000 | | |
| | 12,000 | | 12,000 |
| | | இருப்பு கீ/கொ | 12,000 |

| ப | சங்கரின் முதல் க/கு | | வ. |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| இருப்பு கீ/இ | 34,500 | இருப்பு கீ/கொ | 34,500 |
| | 34,500 | | 34,500 |
| | | இருப்பு கீ/கொ | 34,500 |

| ப | சுந்தரின் முதல் க/கு | | வ. |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| இருப்பு கீ/இ | 11,500 | இருப்பு கீ/கொ | 11,500 |
| | 11,500 | | 11,500 |
| | | இருப்பு கீ/கொ | 11,500 |

குறிப்பு

| ப. | சங்கரின் நடப்பு கணக்கு | | வ |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| முதலீடு க/கு | 2,600 | நன்மதிப்பு க/கு | 9,000 |
| இருப்பு கீ/இ | 3,850 | பொதுக்காப்பிருப்பு | 3,000 |
| | | இலாபநட்டச்சரிகட்டும் க/கு | 450 |
| | 12,450 | | 12,450 |
| | | இருப்பு கீ/கொ | 9,850 |
| ப | சுந்தரின் நடப்பு க/கு | | வ |
| | ரூ | | ரூ |
| இருப்பு கீ/இ | 4,150 | நன்மதிப்பு க/கு | 3,000 |
| | | பொதுக்காப்பிருப்பு க/கு | 1,000 |
| | | இலாபநட்டச் சரிகட்டும் க/கு | 150 |
| | 4,150 | | 4,150 |
| | | இருப்பு கீ/கொ | 4,150 |
| ப. வங்கி க/கு வ. | | | |
| | ரூ. | | ரூ. |
| இருப்பு கீ/கொ | 22,500 | இருப்பு கீ/இ | 37,000 |
| கண்ணன் முதல் க/கு | 14,500 | | |
| | 37,000 | | 37,000 |
| இருப்பு கீ/கொ | 37,000 | | |
| ப. கண்ணன் க/கு வ | | | |
| | ரூ. | | ரூ. |
| இருப்பு கீ/இ | 14,500 | வங்கி க/கு | 14,500 |
| | 14,500 | | 14,500 |
| | | இருப்பு கீ/கொ | 14,500 |

சங்கர், சுந்தர் மற்றும் கண்ணன் ஆகியோரின் இருப்புநிலைக் குறிப்பு .... தேதியில் உள்ளபடி

| பொறுப்புகள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ | | ரூ. |
| கடனீந்தோர்கள் | 37,500 | வங்கியில் ரொக்கம் | 37,000 |
| முதல் கணக்குகள் | | கடனாளிகள் 20,000 | |
| சங்கர் 34,500 | | கழிக்க:ஐயக்கடன்காப்பு 3,000 | 17,000 |
| சுந்தர் 11,500 | | சரக்கு | 20,000 |
| கண்ணன் 14,500 | 60,500 | கட்டிடங்கள் | 26,000 |
| நடப்புக் கணக்குகள் | | நன்மதிப்பு | 12,000 |
| நடப்புக் கணக்குகள் | | | |
| சங்கர் 9,850 | | | |
| சுந்தர் 4,150 | 14,000 | | |
| | 1,12,000 | | 1,12,000 |

பின்குறிப்பு: புதிய நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பில் நன்மதிப்புத் தொகை இருக்கின்றது. ஆனால் கேள்வியில், அதனைக் கணக்கில் இருந்து நீக்கச் சொல்லியிருந்தால் மாற்றுப் பதிவின் மூலம் எல்லாக் கூட்டாளியின் (புதிய கூட்டாளி உள்பட) கணக்கிலும் எழுதி நீக்க வேண்டும்.

**எடுத்துக்காட்டு: 11**

A,B,C ஆகிய மூவரும் சமபங்கு கூட்டாளிகள், அவர்களின் 2003 ஆம் வருடம் ஜனவரி 1ம் தேதியிலுள்ள இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| பொறுப்புகள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| செலுத்த வேண்டிய உண்டியல் | 3,300 | ரொக்கம் | 600 |
| கடனீந்தோர்கள் | 6,000 | கடனாளிகள் | 10,800 |
| முதல் கணக்குகள் A 16,800 | | சரக்கு | 11,400 |
| B 12,600 | | மனைத்துணைப்பொருட்கள் | 2,400 |
| C 6,000 | 35,400 | கட்டிடம் | 19,500 |
| | 44,700 | | 44,700 |

கீழ்கண்ட நிபந்தனைகளின் படி D என்பவரை கூட்டு வணிகத்தில் சேர்க்க உடன்பாடு செய்து, அவருக்கு ... பங்கு இலாபம் கொடுக்கப்பட்டது.

1. 'டி' தொழில் நன்மதிப்புக்காக ரூ. 9,000 மற்றும் மூலதனத்திற்காக ரூ. 15,000 கொண்டு வரவேண்டும்.
2. தொழல் நன்மதிப்புத்தொகையில் பாதியை பழைய கூட்டாளிகள் வியாபாரத்தினின்று எடுத்துக் கொண்டனர்.
3. சரக்கு மற்றும் மனைத்துணைப் பொருள் மீது 10% தேய்மானத்திற்கு வகை செய்யப்பட வேண்டும்
4. ஐயக்கடன் காப்பிற்காக கடனாளிகள் மீது 5% ஒதுக்கு செய்யப்பட வேண்டும்.
5. தள்ளுபடி செய்யப்பட்ட உண்டியல்களினால் ரூ. 1,080 பொறுப்பு ஏற்பட்டது.
6. கட்டடிடத்தின் மதிப்பு உயர்ந்துள்ளதால் ரூ. 27,000 என மதிப்பிடப்பட்டுள்ளது.
7. ரொக்கத்தை தவிர மற்ற சொத்துக்களையும் பொறுப்புகளையும் மாற்றக்கூடாது.

இலாப நட்டச் சரிகட்டும் கணக்கினையும், புதிய கூட்டு நிறுவனத்தின் ஆரம்ப இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

விடை:

ரொக்கத்தை தவிர பிற சொத்துக்களையும் பொறுப்புகளையும் மாற்றக்கூடாது. என்று கணக்கில் கொடுக்கப்பட்டிருப்பதால், குறிப்பு மறுமதிப்பீட்டு க/கு (Memorandum Revaluation Account) தயாரிக்க வேண்டும்.

குறிப்பு மறுமதிப்பீட்டு க/கு
(OR)
ப குறிப்பு இலாப நட்டச் சரிகட்டும் க/கு வ

| தேதி | விவரம் | தொகை | தேதி | விவரம் | தொகை |
|---|---|---|---|---|---|
| 2003 | | ரூ. | 2003 | | ரூ. |
| ஜன 1 | சரக்கு க/கு | 1,140 | ஜன 1 | கட்டிட க/கு | 7,500 |
| | மனைத்துணைப் பொருட்கள் | 240 | | | |
| | வராக்கடன் காப்பு | 540 | | | |
| | கழிவு: செய்த உண்டியல் | | | | |
| | மீதான பொறுப்பு | 1,080 | | | |
| | இலாபம் முதல் கணக்குகளுக்கு மாற்றப்பட்டது | | | | |
| | யு 1,500 | | | | |
| | டீ 1,500 | | | | |
| | ஊ 1,500 | 4,500 | | | |
| | | 7,500 | | | 7,500 |
| | மேற்கண்ட கட்டட மதிப்புயர்வை நீக்குவதற்கான பதிவு | 7,500 | | மேற்கண்ட சொத்துக்கள் மற்றும் பொறுப்புகள் மதிப்பு மாற்றத்ததை நீக்குவதற்கான பதிவு முதல் கணக்குகளுக்கு மாற்றப்பட்டது) | 3,000 |
| | | | | A 1,125<br>B 1,125<br>C 1,125<br>D 1,125 | 4,500 |
| | | 7,500 | | | 7,500 |

குறிப்பு: முதற்குறிப்பேட்டுப் பதிவு கேட்டிருந்தால் கீழ்கண்ட பதிவுகள் செய்யப்பட வேண்டும்.

| | | | ப. | வ. |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1. | குறிப்பு மறுமதிப்பீட்டுக் க/கு ப | | 4,500 | |
| | A முதல் க/கு | | | 1,500 |
| | B முதல் க/கு | | | 1,500 |
| | C முதல் க/கு | | | 1,500 |
| | (மறுமதிப்பீட்டு இலாபம் பழைய கூட்டாளிகள் கணக்கில் வரவு வைக்கப்பட்டது) | | | |
| 2. | A முதல் க/கு | | 1,125 | |

| | | | | |
|---|---|---|---|---|
| | B முதல் க/கு | | 1,125 | |
| | C முதல்· க/கு | | 1,125 | |
| | குறிப்பு மறுமதிப்பீட்டு க/கு | | | 4,500 |
| | (மறுமதிப்பீட்டு இலாபம் கணக்கேடுகளிலிருந்து நீக்கப் பட்டதற்காக) | | | |

குறிப்பு: மறுமதிப்பீட்டிற்காக சொத்துக்கள் மற்றும் பொறுப்புகள் கணக்கில் எந்தவிதமான பதிவும் செய்யப்படவில்லை. என்பதை மாணவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும்.

| தேதி | விவரம் | A | B | C | D | தேதி | விவரம் | A | B | C | D |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2003 | | | | | | 2003 | | | | | |
| ஜன 1 | ரொக்க க/கு | 1,500 | 1,500 | 1,500 | — | ஜன 1 | இருப்பு— கீ/கொ | 16,800 | 12,600 | 6,000 | |
| | குறிப்பு மறுமதிப்பீட்டு க/கு | 1,125 | 1,125 | 1,125 | 1,125 | | தொழில் நன்மதிப்பு | 3,000 | 3,000 | 3,000 | — |
| | | | | | | | ரொக்க க/கு | | | | 15,000 |
| | | | | | | | குறிப்பு மறுமதிப்பீட்டு க/கு | 1,500 | 1,500 | 1,500 | |
| | | 21,300 | 17,100 | 10,500 | 15,00 | | | 21,300 | 17,100 | 10,500 | 15,000 |
| | | | | | | | இருப்பு கீகொ | 18.675 | 14,475 | 7,875 | 13,875 |

ABC மற்றும் D ஆகியோரின் இருப்புநிலைக் குறிப்பு 2003 ஜனவரி 1ல் உள்ளபடி

| பொறுப்புகள் | | சொத்துக்கள் | |
|---|---|---|---|
| | ரூ | | ரூ |
| செலுத்த வேண்டிய உண்டியல் | 3,300 | ரொக்கம் | 20,100 |
| கடனீந்தோர்கள் | 6,000 | கடனாளிகள் | 10,800 |
| முதல் கணக்குகள் A 18,675 | | சரக்கு | 11,400 |
| B 14,475 | | மனைத்துணைப் பொருட்கள் | 2,400 |
| C 7,875 | | கட்டிடம் | 19,500 |
| D 13,875 | 54,900 | | |
| | 64,200 | | 64,200 |

எடுத்துக்காட்டு: 12

A,B மற்றும் C தங்களது லாபத்தை முறையே 5:3:2 எனும் விகிதத்தில் பிரித்துக் கொள்ளும் கூட்டாளிகள், கூட்டு வணிகத்தில் மாறுதல் செய்வதற்கு நன்மதிப்பானது 4 ஆண்டுகளில் சராசரி லாபத்தில் 21/4 மடங்கு என நிச்சயிக்கப்பட்டிருந்தது. ஆனால் நன்மதிப்பு கணக்கு எழுதப்படமாட்டாது.

| | | ரூ. | | ரூ |
|---|---|---|---|---|
| லாபங்கள் | 2000 : | 1,00,000 | 2002 : | 90,000 |
| | 2001 : | 1,20,000 | 2003 : | 90,000 |

31.12.2003ல் B மற்றும் C ஒவ்வொருவரும் A யிடமிருந்து கூடுதலாக 1/10 பங்கினை வாங்கினார்கள்.

1.1.2004ல் A—யின் மகனாகிய D சேர்த்துக் கொண்டார். அவருடைய பங்கு 1/10. இதில் கடந்த கால லாபங்களின் அடிப்படையில் ஆண்டுக்கு ரூ. 5,000 தரக்கூடிய பங்கு அவருடைய தந்தையிடமிருந்து அவருக்க கிடைக்கும். மீதியை அவர் B மற்றும் Cயிடமிருந்து D வருவதற்கு முன்பிருந்த அவர்களின் முதல் விகிதத்தின் அடிப்படையில் பெறுவார்.

புதிய லாப விகிதத்தை தருக. உரிய குறிப்பேட்டுப் பதிவுகளையும் தருக.

விடை

புதிய விகிதத்தைக் கணக்கிடுதல்

| | A | B | C |
|---|---|---|---|
| ஆரம்பத்திலிருந்து விகிதம் | 5 | 3 | 2 |
| 31.12.2003—ல் A யிடமிருந்து B மற்றும் C வாங்கியது | —2 | +1 | +1 |
| 31.12.03ல் விகிதம் | 3 | 4 | 3 |

Dக்கு உரியது 1/10. இதை இவர் பெறும் விதம்

சராசரி லாபம் = ரூ. $\frac{1,00,000+1,20,000+90,000+90,000}{4}$

= ரூ. $\frac{4,00,000}{4} = 1,00,000$

ஆண்டுக்கு 5,000 உருவாக்ககூடிய பங்கு = $\frac{5,000}{1,00,000} = \frac{1}{20}$

இதை D பெறுகிறார் A யிடமிருந்து. எனவே A யின் புதிய பங்கு

$\frac{3}{10} - \frac{1}{20} = \frac{5}{20}$

D—யின் பங்கு 1/10. இதில் A—யிடமிருந்த பெற்ற $\frac{1}{20}$ போக மீதி =

$\frac{1}{20}$. இதை அவர் B மற்றும் C—யிடமிருந்து பெற வேண்டும்.

அதாவது B—யிடமிருந்து 4/7 மற்றும் C—யிடமிருந்து 3/7 என்ற விகிதத்தில் பெற வேண்டும். அப்படியெனில்

B—யிடமிருந்து $= \frac{1}{20} \text{X} \frac{4}{7} = \frac{4}{140}$

C—யிடமிருந்து $= \frac{1}{20} \text{X} \frac{3}{7} = \frac{3}{140}$ பெற்றார்.

எனவே B—யின் பங்கு $= \frac{4}{10} - \frac{4}{140} = \frac{52}{140}$

B—யின் பங்கு $= \frac{3}{10} - \frac{3}{140} = \frac{39}{140}$

ஆக புதிய விகிதம் A — $\frac{5}{20}$ அல்லது $\frac{35}{140}$

B — $\frac{52}{140}$

C — $\frac{39}{140}$

D — $\frac{1}{10}$ அல்லது $\frac{14}{140}$

புதிய விகிதம் 35:52:39: 14

2. நன்மதிப்பு

சராசரி லாபம் = ரூ. 1,00,000

= 1,00,000 X 21/4 = 2,25,000

B மற்றும் C—யிடமிருந்து A—க்கு கிடைப்பது தலா ரூ. 2,25,000 $x\frac{1}{10}$ =

ரூ. 22,500

D தர வேண்டியது B மற்றும் Cக்கு = ரூ 2,25,000 $x\frac{1}{20}$ ரூ. 11,250

இதில் B க்கு = 11,250 $x\frac{4}{7}$ = ரூ. 6,428

C க்கு = 11,250 $x\frac{4}{7}$ = ரூ.4,822

குறிப்பு: தந்தையிடமிருந்து னு பெற்ற பங்கிற்காக அவருக்கு ஏதும் தரமாட்டார். இது வெகுமதி என அனுமானிக்கப்பட்டுள்ளது.

குறிப்பேடு

| தேதி | விபரம் | பே.ப | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 31.12.2003 | B முதல் க/கு ப | | 22500 | |
| | C முதல் க/கு ப | | 22500 | |
| | A முதல் க/கு | | | 45000 |
| | (A—யிடமிருந்து B மற்றும் C கூடுதலாக 1/10 பங்கு பெற்றதாக) | | | |
| 1.1.2004 | D முதல் க/கு ப | | 11250 | |
| | B முதல் க/கு | | | 6428 |
| | C முதல் க/கு | | | 4822 |
| | (B மற்றும் C யிடமிருந்து D பெற்ற பங்கிற்காக) | | | |

எடுத்துக்காட்டு:13

C மற்றும் D 2:1 எனும் விகிதத்தில் லாப நட்டத்தைப் பிரித்து வந்தனர். 1.1.2004ல் E புதிய கூட்டாளியாகச் சேர்க்கப்பட்டார். ஒரு பகுதி நன்மதிப்புக்கு என்றும், மறு பகுதி முதல் என்றும் அவர் ரூ. 8000 ரொக்கமாகக் கொண்டு வந்தார். லாபத்தில் 1/5 பங்கினை அவர்

பெறுவார். பழைய கூட்டாளிகள் அவர்களின் பங்கு விகிதத்தை தொடர்கிறார்கள்.

2000 முதல் 2003 வரையிலான நான்காண்டு சராசரி லாபத்தின் இரு மடங்கு என நன்மதிப்புக்கான தொகை நிச்சயிக்கப்பட்டது. கூட்டாளிகள் பிரித்துக் கொண்டிருந்து சரிக்கட்டப்படாத லாபங்கள் வருமாறு:

2000 — ரூ. 4,500 2002 — ரூ. 5,100

2001 — ரூ. 6,900 2003 — ரூ. 4,800

2004 டிசம்பர் 31வுடன் முடியும் ஆண்டுக்கான சரிகட்டப்படாத லாபம் ரூ. 6,500. கூட்டாளிகளின் லாபப் பங்கு சேர்த்துக் கொள்ளப்பட்டு, அவர்களின் எடுப்பு கழித்துக் கொள்ளப்பட்டதற்குப் பிறகான 1.1.2005 தேதியிலான அவர்கள் முதல் கணக்குகள் வருமாறு C — ரூ. 9,600, D—ரூ. 5,900, E—ரூ. 6,400. இந்தத் தேதியில் கடந்த ஐந்தாண்டு காலக் கணக்குகளைத் தணிக்கை செய்வது என்றும். E—யை அனுமதிப்பதற்கான நன்மதிப்பு கணக்கீடு உள்ளிட்ட எதிலும் வேறுபாடு இருந்தால் அதைச் சரிகட்டுவது என்றும் முடிவு செய்யப்பட்டது.

தணிக்கையாளர்கள் கீழ்வரும் விஷயங்கைக் கண்டுபிடித்தார்கள்:

1. 2002ல் இயந்திரத்தின் மீதான தேய்மானம் ரூ. 1,000த்துக்குப் பதிலாக ரூ. 100 என அனுமதிக்கப்பட்டுள்ளது.
2. இறுதிச் சரக்கிருப்பு:

    31.12.2002ல் குறைத்து மதிப்பிடப்பட்டது ரூ. 300

    31.12.2003ல் அதிக மதிப்பிடப்பட்டது ரூ. 600

    31.12.2004ல் குறைத்து மதிப்பிடப்பட்டது ரூ. 150
3. ஒரு வாடிக்கையாளர் கோரியிருந்து இழப்பீடு ரூ. 1,200 நியாயமற்றதாக இருந்தது. அவரது கோரிக்கை தோற்றுப்போனதால் 2004ல் அந்தத் தொகை மீட்டெழுதப்பட்டிருந்தது.
4. 2003இறுதி ஒதுக்கீடுகளில் ரூ. 150க்கான மின்சாரக் கட்டணமானது விடுபட்டுப் போயுள்ளது.

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பயிற்சி வினாக்கள்**

**1) சரியா அல்லது தவறா எனக் கூறவும்:**

அ) புதிய கூட்டாளி ரொக்கமாக நன்மதிப்பை கொண்டு வரும் போது, நன்மதிப்பு பழைய கூட்டாளி களுக்கு, தியாக விகிதத்தில் பிரிக்கப்படுகிறது.

ஆ) மறுமதிப்பீட்டு கணக் கின் லாபம் அல்லது நட்டம் எல்லா கூட்டாளிகளின் கணக் கிற்கும் புதிய கூட்டாளி உட்பட, மாற்றப்படுகிறது.

இ) புதிய கூட்டாளியை சேர்க்கும் போது பிரிக்கப்படாத லாபம் பழைய கூட்டாளிகளின் கணக்கிற்கு பழைய லாப விகிதத்தில் மாற்றப்படுகிறது.

ஈ) கூட்டாண்மையில் பொறுப் புகள் வரையறுக்கப்படாதது.

உ) குறிப்பு மறுமதிப்பீடு கணக்கு தயாரிக்கும் போது ரொக்க கணக்கை தவிர எல்லா வகையான சொத்துக் களும் மற்றும் பொறுப்புகளும் பழைய மதிப்பிலேயே இருப்பு நிலைக் குறிப்பில் பதிவு செய்யப்படும்.

5. ரூ. 300 மதிப்பிலான இயந்திரத்திற்கு 10% தேய்மானம் தரப்பட்டிருக்க வேண்டும். மாறாக 2004ல் அது வருமானமாக நீக்கப்பட்டுள்ளது. பத்தி வடிவில் நீங்கள் காண்பிக்க வேண்டியது—

அ) E கொண்டு வந்த ரூ 8,000 எப்படி கையாளப்பட்டது?

ஆ) தணிக்கையாளர்கள் கண்டுபிடித்த தவறுகளைச் சரிகட்டடியதற்குப் பிறகான முதல் கணக்குகள்.

விடை:

அ) நன்மதிப்பு கணக்கீடு $= \frac{4,500+6,900+5,100+4,800}{4}$

$= \frac{21,300}{4} =$ ரூ. 5,325

நன்மதிப்பு = ரூ. 5,325 X 2 = ரூ. 10,650

நன்மதிப்பில் E—யின் பங்கு = 10,650 X 1/5 = ரூ. 2,130. C மற்றும் D இதைத் தங்களின் 2:1 விகிதத்தில் பிரித்துக் கொள்கிறார்கள். ஆகவே.

C = 2,130 x 2/3 = ரூ. 1,420

D = 2,130 X 1/3 = ரூ. 710

E—கொண்டுவந்த ரூ.8,000—த்தில் நன்மதிப்புக்கான ரூ. 2,130 போக மீதி ரூ. 5,870 அவரது முதலாகக் கருதப்படும். நன்மதிப்பு கணக்கு எழுதப்படாமல் நேரடியாக பழைய கூட்டாளிகள் கணக்கிற்கு அது மாற்றப்படும்.

குறிப்பேடு

| தேதி | விபரம் | பே.ப | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1.1.2004 | ரொக்க க/கு ப | | 8,000 | |
| | E முதல் க/கு | | | 8,000 |
| | (E கொண்டுவந்த தொகைக்காக) | | | |
| 1.1.2004 | E முதல் க/கு ப | | 2,130 | |
| | C முதல் க/கு | | | 1,420 |
| | D முதல் க/கு | | | 710 |
| | (நன்மதிப்புக்காக E முதல் கணக்கிலிருந்து பழைய கூட்டாளிகள் கணக்குகளுக்கு மாற்றப்பட்டதற்காக) | | | |

1.1.2004—க்கு முந்திய சரிக்கட்டல்

| | 2002 | | 2003 | |
|---|---|---|---|---|
| | கூடுதல் ரூ | குறைவு ரூ. | கூடுதல் ரூ | குறைவு ரூ. |
| 2002ல் தேய்மானம் குறைத்து | | | | |
| அனுமதிக்கப்பட்டது | — | 900 | — | — |
| 2002ல் இறுதிச் சரக்கிருப்பு | 300 | — | — | — |
| குறைத்து மதிப்பிடப்பட்டது | | | | |
| 2003ல் சரக்கிருப்பு குறைத்து | | | | |
| மதிக்கப்பட்டது | — | — | — | 300 |
| 2003ல் இறுதிச்சரக்கிருப்பு அதிகம் | | | | |
| மதிக்கப்பட்டது | — | — | — | 600 |
| 2003ல் தேவையற்ற இழப்பீடு | — | — | 1,200 | — |
| 2003ல் மின்கட்டணம் விடுபட்டது | — | — | — | 150 |
| | 300 | 900 | 1,200 | 1,050 |

லாபத்தில் நிகர விளைவு = உயர்வு (குறைவு)

(600) 150

லாபத்தில் நிகரக் குறைவு ரூ.450 (650—150) இது C மற்றும் D யின் முதல்களைக் கீழ்க்கண்டவாறு குறைக்கும்.

C = 450 x 2/3 = ரூ. 300

D = 450 x 1/3 = 150

இந்தச் சரிக்கட்டல் நன்மதிப்பு பற்றிய கணக்கீட்டையும் பாதிக்கும்.

லாபத்தில் மொத்தக் குறைவு = ரூ. 450

சராசரி குறைவு $= \frac{450}{4}$

இதன் 2 மடங்கு $= \frac{450}{4} x =$ ரூ. 225

E—யின் தொகையில் குறைவு = 225 $x \frac{1}{5} =$ ரூ. 45. லாபங்கள் கூடுதலாக மதிப்பிட்டிருப்பதால் நன்மதிப்பு கூடுதலாக மதிப்பிடப்பட்டுள்ளது. அது கீழ்வருமாறு சரிகட்டப்படும்—

C முதல் குறைப்பு — ரூ. 30

D முதல் குறைப்பு — ரூ. 15

E முதல் குறைப்பு — ரூ. 45

குறிப்பு

**2) கோடிட்ட இடத்தை நிரப்புக:**

அ) புதிய கூட்டாளியை சேர்க்கும்போது பழைய கூட்டாளிகளின் மொத்த லாப விகிதம் ...............

ஆ) தியாக விகிதம் = பழைய விகிதம் — ............

இ) மறுமதிப்பீட்டு கணக்கின் லாபம் ......... லாபமாகும்.

ஈ) குறிப்பு மறுமதிப்பீட்டு கணக்கிற்கு மேல் பகுதி லாபத்தை காண்பிக்கும் போது, அதன் கீழ் பகுதி ................... காட்டும்.

உ) புதிய கூட்டாளியை சேர்க்கும் போது அதிகப்படுத்தப்படும் நன்மதிப்பு பழைய கூட்டாளிகளுக்கு ............ விகிதத்தில் பிரித்து வழங்கப்படும்.

குறிப்பு

### 1.1.2004க்குப் பிறகான சரிக்கட்டல்

| | கூடுதல் | குறைவு |
|---|---|---|
| 2004ல் ஆரம்பச் சரக்கிருப்பு அதிகமாக மதிப்பிடப்பட்டது | 600 | — |
| 2004 இறுதிச் சரக்கிருப்பு குறைவாக மதிப்பிடப்பட்டது | 150 | — |
| 2004ல் இழப்பீட்டுத் தொகை மீட்டெழுதப்பட்டது | — | 1,200 |
| 2003 விடுபட்டுப் போன மின்கட்டணம் (அது பின்னர் 2003ல் ஏற்றப்பட்டிருக்கும்) | 150 | — |
| இயந்திரம் வருமானமாகக் காட்டப்பட்டது | 300 | — |
| இயந்திரத்திற்கான தேய்மானம் | — | 30 |
| | 1,200 | 1,230 |

நிகர விளைவு : குறைவு ரூ. 30

லாபத்தில் இந்த ரூ. 30 குறைவு முதல்களைக் கீழ்வருமாறு குறைக்கும்—

$C = 30x\frac{8}{15}$ = ரூ .16

$D = 30x\frac{4}{15}$ = ரூ .8

$E = 30x\frac{3}{15}$ = ரூ .6

### நிகர விளைவு

| | C | | D | | E | |
|---|---|---|---|---|---|---|
| | ப ரூ | வ ரூ | ப ரூ | வ ரூ | ப ரூ | வ ரூ |
| 1.1.04க்கு முந்திய விளைவு | 300 | — | 150 | — | — | — |
| நன்மதிப்பு மாறுதல் | 30 | — | 15 | — | — | 45 |
| 1.1.04க்கு பிந்திய விளைவு | 16 | — | 8 | — | 6 | — |
| நிகர கூடுதல் /(குறைவு) | (346) | — | (173) | — | | 39 |

| | C | D | E |
|---|---|---|---|
| 1.1.2005ல் இருப்பு | 9,600 | 5,900 | 6,400 |
| கழிக்க: குறைவு | 346 | 173 | — |
| | 9,254 | 5,727 | 6,400 |
| கூட்டுக: அதிகம் | — | — | 39 |
| | 9,254 | 5,727 | 6,439 |

## 1.4. கூட்டாளி விலகுதல்

பொதுவாக கூட்டாளி ஒருவர் அதிக வயது அடைந்து விட்டால் அல்லது அவருக்கு பிறதொழிலில் நல்லதொரு லாபம் கிடைத்தால் அல்லது கூட்டாளிகளுடன் சேர்ந்து தொழில் நடத்துவதில் சிரமம் ஏற்பட்டால் அவர் நிறுவனத்தில் இருந்து விலகிக் கொள்ளலாம் (Retirement). கூட்டாளி நிறுவனத்தில் இருந்து விலகிவிட்டால் அவர் கூட்டாளியாக கருதப்படமாட்டார். அக் கூட்டாளியை வெளியே செல்லும் கூட்டாளி அல்லது விலகிய கூட்டாளி என்று அழைக்கலாம்.

### விலகுங்கூட்டாளி பொறுப்புகள்

நிறுவனத்தில் இருந்து விலகிச் செல்லும் கூட்டாளியின் பொறுப்புகள் யாவை?

கூட்டாளிகளிடையே உள்ள உடன்படிக்கையின்படி அவர் பொறுப்புகளைத் தீர்ப்பதில் இருந்து விலக்கப்படுவார், விலகுங்கூட்டாளி தான் நிறுவனத்தில் இருந்து விலகும் முன்பு உள்ள நிறுவனத்தில் பொறுப்புகளை ஏற்பதில் பங்கு கொள்ள வேண்டும். ஆனால் மற்ற கூட்டாளிகள் மற்றும் கடனீந்தோர் உடன்படிக்கையின் பேரில் அவர் அப்பொறுப்புகளில் இருந்து விலகிக் கொள்ளலாம்.

### சட்டப்படி நிறுவனத்தின் நிலை

நிறுவனத்தில் இருந்து கூட்டாளி விலகும் சமயத்தில் அக்கூட்டு நிறுவனத்தின் சட்டப்படி நிலை என்ன? ஒரு கூட்டாளி விலகும் சமயத்தில் மற்ற கூட்டாளிகளிடையே உடனடியாக கூட்டு நிறுவன அமைப்பதற்கான ஒப்பந்தம் செய்து கொள்ளவில்லையானால் அக்கூட்டு நிறுவனம் கலைக்கப்பட்டதாகவும் புதிய நிறுவனம் ஏற்படுத்தப்படதுமாகக் கருதப்படும்.

### விலகுங்கூட்டாளியின் நிதிப்பற்றுரிமை

ஒரு கூட்டாளி நிறுவனத்தில் இருந்து விலகும் போது அவரின் நிதிப்பற்றுரிமையில் ஏற்படும் மாறுதல் என்ன? கூட்டாளி ஒருவர் விலகும்

பொழுது அவருக்கு நிறுவனத்தில் இருந்து வரக்கூடிய தொகையினை நிறுவனம் அவருக்கு கொடுக்க வேண்டும். இச்சந்தர்ப்பங்களில் கீழ்கண்ட இரு கேள்விகள் தோன்றலாம்.

1. அவருக்கு கொடுக்க வேண்டிய தொகை
2. எம்மாதிரியான முறையில் அத்தொகையினை கொடுப்பது?

விலகுங் கூட்டாளிக்கு கொடுக்க வேண்டிய தொகை

கூட்டாளி விலகும் பொழுது அவருக்கு நிறுவனம் கொடுக்க வேண்டிய தொகை எவ்வளவு என்று சரியாக நிர்ணயிக்க வேண்டும். இச்சந்தர்பத்தில் கூட்டாளிகளிடையே அதிகக் கருத்து வேறுபாடு ஏற்படலாம். கூட்டு நிறுவனத்தின் உடன்படிக்கை இருப்பின் கூட்டாளிகளிடையே தகராறு ஏதும் நிகழாமல் இருக்கும்.

விலகுங் கூட்டாளிக்குக் கொடுக்க வேண்டிய தொகையினை நிர்ணயிக்கும் பொருட்டு அவர் விலகுகின்ற தேதியில் நிறுவனத்தின் இருப்பு நிலைக் குறிப்பினைத் தயார் செய்தல் வேண்டும். நிறுவனத்தின் சொத்துக்கள் மற்றும் பொறுப்புக்களை மறுமதிப்பீடு செய்வது மிகவும் அவசியமாகும். கூட்டாளியைச் சேர்க்கும் பொழுது மறுமதிப்பீடு செய்தது போல சமயங்களில் மதிப்பீடு செய்தல் வேண்டும். முன்னெழுதப்பட்ட கணக்குகளில் தவறு ஏதும் இருந்தால் கூட்டாளி விலகும் முன்பு அவற்றைச் சரிக்கட்டிக் கொள்ள வேண்டும்.

பொதுவாக விலகுங் கூட்டாளி கீழ்கண்ட தொகையினை பெறத் தகுதியுடையவர் ஆவார்.

1. விலகுங் கூட்டாளியின் முதல் கணக்கில் உள்ள வரவு இருப்பு
2. அவருக்குக் கொடுக்க வேண்டிய வட்டி அல்லது சம்பளம்
3. அவர் விலகும் தேதி வரையிலான லாபம் அல்லது நட்டத்தின் பங்கு
4. அவருக்க வர வேண்டிய வட்டி, நன்மதிப்பு தொகையில் பங்கு
5. சொத்துக்கள் மற்றும் பொறுப்புகள் ஆகியவற்றின் மறுமதிப்பீட்டின்படி அவருக்கு சேர வேண்டிய பங்கு மற்றும்.
6. காப்பு நிதி ஏதும் இருப்பின் அதில் அவரின் பங்கு.

விலகும் கூட்டாளியிடமிருந்து தொகை ஏதும் வர வேண்டியது இருப்பின் அவர்களுக்கு கொடுக்க வேண்டிய தொகையில் இருந்து. அவற்றைக் கழித்து கொள்ள வேண்டும். இவ்வாறு அவருக்குக் கொடுக்க வேண்டிய தொகையினை கண்டுபிடிக்க வேண்டும்.

**விலகுங் கூட்டாளிக்குப் பணம் செலுத்தும் முறைகள்**

தேவையான சரிகட்டுதலுக்குப் பின்பு, நிர்ணயிக்கப்பட்ட தொகையினை விலகுங் கூட்டாளிக்குச் செலுத்தப்பட வேண்டிய தொகையினை, கூட்டு வணிக ஒப்பந்தத்தில் கூறியுள்ள முறையின்படி செலுத்த வேண்டும்.

கீழ்கண்ட முறைகளில் ஏதாவது ஒன்றின்படி தொகையினை செலுத்தலாம்.

**1. முழுத்தொகையாக**

விலகுங் கூட்டாளிக்குக் கொடுக்க வேண்டிய தொகையினை ஒரே நேரத்தில் முழுத்தொகையாக கொடுக்கலாம். அதற்காக கீழ்காணும் குறிப்பேட்டுப் பதிவினை செய்ய வேண்டும்.

| | |
|---|---|
| விலகுங் கூட்டாளியின் முதல் க/கு | ப |
| ரொக்க க/கு | |
| (கொடுக்க வேண்டிய பணம் செலுத்தியதற்காக) | |

**2. தவணை முறையில்**

விலகுங் கூட்டாளிக்குச் செலுத்த வேண்டிய தொகையினை உடனே செலுத்தாவிட்டால் அவரின் முதல் கணக்கு, கடன் கணக்கிற்கு மாற்றப்பட்டு புதிய நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பில் அத்தொகை முழுவதும் செலுத்தப்படும் வரையில் காண்பிக்கப்பட வேண்டும்.

இம்முறையில் விலகுங் கூட்டாளி மொத்தமாகத் தொகையினைப் பெற இயலாது. ஆனால் ஒரு பகுதியை ரொக்கமாகவும் மீதித் தொகையினைச் சில தவணைகளிலும் பெறலாம்.

ஒவ்வொரு வருடமும் கடன் கணக்கில் வட்டி வரவு வைக்கப்பட்டு செலுத்திய தொகைக்கு பற்று எழுதப்படும். மீதித் தொகை இருப்புநிலைக்குறிப்பில் பொறுப்பாகக் காண்பிக்கப்படும். கடன் தொகை முழுவதும் செலுத்தப்படும் வரையில், விலகுங் கூட்டாளியின் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பின் பொறுப்புப் பகுதியில் காண்பிக்கப்பட வேண்டும்.

---

விலகுங் கூட்டாளியின் முதல் க/கு ப

விலகுங் கூட்டாளியின் கடன் க/கு

(கடன் கணக்கிற்கு தொகையினை மாற்றியதற்காக)

---

வட்டி க/கு ப

விலகுங் கூட்டாளியின் கடன் க/கு

(கடன் கணக்கில் வட்டி வரவு வைக்கப்பட்டதற்காக)

---

விலகுங் கூட்டாளியின் கடன் க/கு ப

ரொக்க க/கு

(ரொக்கம் செலுத்தியதற்காக)

---

3. ஆண்டுத்தொகை **(By Annuity)**

இம்முறையில் விலகுங்கூட்டாளிக்கு, அவர் உயிருடன் இருக்கும் வரையில், ஒவ்வொரு ஆண்டும் ஒரு குறிப்பிட்ட தொகை கொடுக்கப்படும். அனாமத்துக் கணக்கு (Annuity Suspense Account) துவங்கி விலகுங் கூட்டாளிக்குக் கொடுக்க வேண்டிய தொகை இக்கணக்கில் வரவ எழுதப்படும். இக்கணக்கில் வட்டித் தொகையினை வரவு வைத்து, ஆண்டுத் தொகையாக செலுத்தும் தொகையினைப் பற்று எழுதி வர வேண்டும். விலகுங் கூட்டாளி இக்கணக்கில் உள்ள ஆண்டுத் தொகை முழுவதும் தீர்ந்து விடும் முன்பு இறந்துவிட்டால் மீதமுள்ள தொகையினை (விதி விலக்கு) லாபமாகக் கருதி இருக்கக் கூடிய கூட்டாளிகளின் முதல் கணக்கிற்கு புதிய லாபப் பகிர்வு விகிதத்தில் மாற்றப்படும் ஆண்டுத் தொகை அனாமத்துக் கணக்கு தீர்ந்த பின்பும், விலகுங் கூட்டாளி

உயிருடன் இருப்பாரோயானால் அவருக்கு கொடுக்கப்படும். ஆண்டுத் தொகை நிறுவனத்தின் லாப நட்டக் கணக்கில் பற்று எழுதப்படும்.

சில சந்தர்ப்பங்களில் கூட்டாளிகள் விலகுங் கூட்டாளியின் கணக்கினை முடித்துப் பணம் செலுத்தாமல், தம் தொழிலை மேற்கொண்டிருக்கலாம். இச்சந்தர்ப்பங்களில் ஒப்பந்தம் ஏதும் இல்லாத போது விலகுங் கூட்டாளி கீழ்கண்டவற்றுள் ஏதேனும் ஒன்றினை தேர்ந்தெடுக்கலாம்.

1. கூட்டாளி விலகிய தேதியிலிருந்து கிடைத்த லாபத்தில் இவரின் பங்கைப் பெற்றுக் கொள்ளலாம்.
2. விலகிய தேதியில் இவருக்கு சேர வேண்டிய தொகையும் மேலும் இத்தொகை முழுவதும் செலுத்தப்படும் வரை அத்தொகைக்கு 6 சதவீதம் வட்டியும் பெற்றுக் கொள்ளலாம்.

கூட்டாளி இறக்கும் பொழுதும் மேற்கண்ட இம்முறையே அமதல் நடத்தப்படும்.

**புதிய இலாப பகிர்வு விகிதம் மற்றும் அதிகரிக்கும் இலாப விகிதம்**

புதிய இலாப பகிர்வு விகிதத்ததை எளிதில் கணக்கிடலாம். அனைத்துக் கூட்டாளியகளின் விகிதங்களை எழுதியும் விலகும், கூட்டாளியின் பங்கினைத் தவிர்த்தும் புதிய லாப பகிர்வு விகிதத்தை எளிதில் அறியலாம். கூட்டாளி விலகுவதால் இருக்கின்ற கணக்கிட இருக்கின்ற கூட்டாளிகளிடையே புதிய இலாப விகிதத்தோடு அவர்களின் பழைய இலாப விகிதத்தை ஒப்பிட வேண்டும்.

**மாதிரி:**

உதாரணமாக X,Y,Z ஆகிய மூவரும் 4:3:1 விகிதத்தில் இலாபத்தை பகிர்ந்து கொண்டனர். Y—விலகி விடுகிறார். Y—னுடைய பங்கைத் தவிர்த்து மற்ற விகிதங்கள் 4:1 என்று கூறலாம். இதுவே இலாப பகிர்வு விகிதம், X 4/5 பங்கும் Z 1/5 பங்கும் பெறுவர்.

| X | : | Y | : | Z |
|---|---|---|---|---|
| 4 | : | 3 | : | 1 |

புதிய விகிதம்: 4:1

இருக்கின்ற கூட்டாளிகளுக்கு அதிகரிக்கும் இலாபத்தினை கீழ்கண்டவாறு கணக்கிடலாம்.

அதிகரிக்கும் (ஆதாய) இலாப விகிதம் =

இருக்கின்ற கூட்டாளியின் புதிய விகிதம் — இருக்கின்ற கூட்டாளியின் பழைய விகிதம்

X க்கு கூடியிருக்கும் இலாபம் $= \frac{4}{5} - \frac{4}{8}$

$= \frac{32 - 20}{40} = \frac{12}{40}$

Z க்கு கூடியிருக்கும் இலாபம் $= \frac{1}{5} - \frac{1}{8}$

$= \frac{8 - 5}{40} = \frac{3}{40}$

கூடியிருக்கும் இலாப விகிதம் $= \frac{12}{40} \frac{3}{40}$ அல்லது 4:1

இங்கு X மற்றும் Z ஆகியோரிடையே உள்ள பழைய இலாப விகிதம் (4:1) Y விலகிய பின்பும் மாறாமல் இருக்கிறபடியால் X மற்றும் Z ஆகியோரின் புதிய விகிதமும் (4:1) கூடியிருக்கும் விகிதமும் சமமாக உள்ளன.

**மாதிரி 2**

உதாரணமாக A,B,C,D, முறையே 1/2, 1/3 மற்றும் 1/6 என்ற விகிதத்தில் இலாபம் மற்றும் நட்டத்தினை பகிர்ந்து கொண்டனர். B என்பவர் நிறுவனத்தின் இருந்து விலகி விட்டார். A,C ஆகியோரின் புதிய லாப பகிர்வு விகிதம் முறையே 3/5 மற்றும் பங்கு 2/5 ஆகும். அவர்கள் அடைந்துள்ள இலாபம் எவ்வளவு?

குறிப்பு

4. ராமனின் முதல் மீதான வட்டி

ரூ. 8,000 5% வீதம் வட்டி 3 மாதத்திற்கு

ஆரம்ப இருப்பு 8,000 x 5/100 x 3/12 = ரூ.100

5. காப்பிருப்புத் தொகையில் ராமனின் பங்கு

ரூ. 3,000—த்தில் 1/3 பங்கு ரூ. 1,000

6. கூட்டு ஆயுள் காப்பீட்டு பாலிசியில் ராமனின் பங்கு:

ரூ. 15,000—த்தில் 1/3 பங்கு = ரூ. 5,000

ப ராமனின் நிறைவேற்றாளரின் க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 | | ரூ. | 2003 | | ரூ. |
| மார் 31 | ரொக்க க/கு | 18,600 | மார்ச் 31 | இருப்பு கீ/கொ | 8,000 |
| | | | | வட்டி க/கு | 100 |
| | | | | காப்பிருப்புக் க/கு | 1,000 |
| | | | | நன்மதிப்புக் க/கு | 4,000 |
| | | | | லாபநட்டக் க/கு | 500 |
| | | | | கூட்டு ஆயுள் காப்பீடு பாலிசி க/கு | 5,000 |
| | | 18,600 | | | 18.600 |

**இணை ஆயுள் திட்டம் (Joint Life Policy)**

சில சமயங்களில் கூட்டாளிகள், அவர்களின் ஆயுள் மீது கூட்டாக காப்பீடு செய்து கொள்வர். இதை இணை ஆயுள் திட்டம் அல்லது கூட்டு ஆயுள் காப்பீட்டு பாலிசி எனலாம். பிரிமியம் எனப்படும் ஒரு சிறு தொகையை ஒவ்வொரு வருடமும் காப்பீட்டு கழகத்திற்குச் (ஆயுள் காப்பீட்டுக் கழகம்) செலுத்த வேண்டும். கூட்டாளிகளில் யாராவது ஒருவர் இறந்து விட்டால் காப்பீட்டுக் கழகம், காப்பீட்டுப் பாலிசியின் முழுத்தொகையும் நிறுவனத்திற்குக் கொடுத்து விடும் கூட்டாளி இறந்தவுடன் பிரிமியம் செலுத்துவதை நிறுத்தி விடலாம். கூட்டு நிறுவனத்தின் நோக்கமானது இறந்த கூட்டாளியின் நிறைவெற்றாளருக்கு கொடக்க வேண்டும். பணத்தை உடனடியாக இத்திட்டத்தின் மூலம்

கொடுத்து விடுதல் ஆகும். இவ்வகையான ஏற்பாடு நிறுவனத்தின் நடை முறை முதல் தொகையைப் பாதிப்பதில்லை.

இதை முனைமம் எனக் கூறுவதுண்டு

இணை ஆயுள் திட்டத்தினை நிறுவனத்தின் ஏடுகளில் கீழ்க்கண்ட மூன்று வழிகளில் ஏதாவது ஒன்றின்படி எழுதலாம்.

**1. பிரிமியம் செலுத்துவதை செலவாகக் கணக்கிடுதல்**

பிரிமியம் செலவாகக் கருதப்படும். ஆகவே இச்செலவு லாப நட்டக்கணக்கில் பற்று வைக்கப்பட்டு முடிக்கப்படும் நிறுவனத்தின் ஏடுகளில் இணை ஆயுள் திட்ட க/கு இருப்பதில்லை. ஆகவே இருப்பு நிலைக்குறிப்பிலும் இக்கணக்கு காட்டப்படுவதில்லை.

நிறுவனம் காப்பீட்டுப் பாலிசியின் முழுத்தொகையைப் பெறும் பொழுது அனைத்துக் கூட்டாளிகளின் கணக்கில் அவர்களின் லாப பகிர்வு விகிதத்தில் வரவு வைக்க வேண்டும்.

**2. செலுத்தப்படும் பிரிமியத்தை சொத்தாக கருதும் பொழுது**

இம்முறையில் இணை ஆயுள் திட்டக் க/கு பிரிமியம் செலுத்தியதற்கு பற்று வைக்கப்பட்டு ரொக்கம் அல்லது வங்கி க/கு வரவு வைக்கப்படும். ஆண்டு முடிவில் விடு மதிப்பிற்கு அதிகமாக உள்ள தொகை நட்டமாகக் கருதப்பட்டு லாப நட்டக் கணக்கிற்கு மாற்றப்படும் விடுமதிப்பிற்கு அதிகமாக தொகை பெறும் பொழுது அது இலாபமாகக் கருதப்பட்டு அனைத்துக் கூட்டாளிகளின் இலாபப் பகிர்வு விகிதத்தில் வரவு வைக்கப்பட்டு இணை ஆயுள் திட்டக் கணக்கில் பற்று எழுத வேண்டும்.

**3. பிரிமியம் செலுத்துவது சொத்தாகக் கருதப்பட்டு காப்பிருப்பு வைத்திருத்தல்**

(1) இம்முறையில் முதலில் பிரிமியம் இணை ஆயுள் திட்டக் கணக்கில் பற்று எழுதப்பட்டு ரொக்கம் அல்லது வங்கி க/கு வரவு வைக்கப்படும். இருப்பினும், செலுத்திய பிரிமியம் அனைத்தையும் சொத்தாகக் கருதக் கூடாது. காரணம் நிறுவனம் பிரிமியம் செலுத்தத்

குறிப்பு

தவறும் பொழுது காப்பீட்டுக் கழகம் விடு மதிப்பினை மட்டுமே கொடுக்கின்றது.

(2) ஆண்டு முடிவில் கூட்டாளிகள் பகிரும் லாபத்தினை குறைக்கும் பொருட்டு பிரிமியத்திற்கு சமமான தொயினை லாப நட்டக் கணக்கில் பற்று எழுதி இதனை ஆயுள் திட்டக் காப்பு கணக்கினை வரவு வைக்க வேண்டும்.

(3) இணை ஆயுள் திட்டக் கணக்கு மற்றும் இணை ஆயுள் காப்பக் கணக்கு ஆகிய இரு கணக்குகளிலும் இருக்கக் கூடிய இருப்பானது பாலிசியின் விடுமதிப்பிற்குச் *சமமாக இருக்குமாறு செய்ய வேண்டும். இதற்காக பாலிசியின் விடுமதிப்பிற்கு அதிகமாக உள்ள தொகையை இணை ஆயுள் திட்டக் காப்புக் கணக்கில் பற்று எழுதி இணை ஆயுளின் திட்டக் கணக்கினை வரவு வைக்க வேண்டும். இருப்புநிலைக் குறிப்பில் இணை ஆயுள் திட்டக் கணக்கு சொத்துப் பகுதியிலும் இணை ஆயுள் திட்டக் காப்புக் கணக்கு பொறுப்புப் பகுதியிலும் காண்பிக்கப்பட வேண்டும்.

(4) கூட்டாளி இறக்கும் பொழுது பெறக்கூடிய தொகையினை இணை ஆயுள் திட்டக் கணக்கில் வரவு வைத்து ரொக்கம் அல்லது வங்கி கணக்கினை பற்று எழுத வேண்டும்.

(5) இணை ஆயுள் திட்டக் காப்புக் கணக்கில் வரவு இருப்பினை ஆயுள் திட்டக் கணக்கிற்கு மாற்ற வேண்டும். இதற்காக இணை ஆயுள் திட்டக் காப்புக் கணக்கிணைப் பற்று வைத்து எழுத வேண்டும்.

(6) முடிவாக, இணை ஆயுள் திட்டக் கணக்கு முடிக்கப்பட்டு அக்கணக்கின் இருப்பு அனைத்துக் கூட்டாளிகளின் முதல் கணக்கிற்கு (இறந்த கூட்டாளி உட்பட) அவர்களின் இலாப பகிர்வு விகிதத்தில் மாற்றப்படும்.

---

* மேற்கொண்டு பிரிமியம் செலுத்தாமல் நிற்கும் பொழுது ஏற்கனவே செலுத்திய தொகைக்கு காப்பீட்டுக் கழகம் பாலிசியை கொண்டு உடனடியாகக் கொடுக்கும் கைவிடப்பட்ட மதிப்பு அல்லது விடுமதிப்பு என்று பெயர்.

சுருக்கமான பதிவுகள்: இணை ஆயுள் திட்டம்

| | | |
|---|---|---|
| 1) வருட ஆரம்பத்தில் | இ.ஆ.தி. க/கு ப<br>ரொக்க க/கு<br>(பிரிமியம் செலுத்தியதற்காக) | |
| 2) வருட முடிவில் | லாப நட்ட க/கு ப<br>இ.ஆ.தி. காப்புக் க/கு<br>(பிரிமியம் செலுத்தியதற்கு சமமாக காப்பு வைத்திருப்பதற்காக)<br>இ.ஆ.தி. காப்பு க/கு ப<br>இ.ஆ.தி. க/கு<br>(இ.ஆ.தி.கணக்கின் விடுமதிப்பிற்கு அதிகமான தொகையை இ.ஆ.தி காப்பு க/கு மாற்றுப்பதிவின் மூலம் எழுதி நீக்கியதற்கான) | திரும்பத் திரும்ப பிரிமியம் செலுத்தும் வரை இப்பதிவுகள் தோன்றும் |
| (4) | ரொக்க க/கு ப<br>இ.ஆ.தி. க/கு<br>(கூட்டாளி இறந்த பொழுது, பாலிசியின் முழுத் தொகையினையும் பெற்றதற்காக) | கூட்டாளி ஒருவர் இறந்த பொழுது |
| (5) | இ.ஆ.தி. காப்பு க/கு ப<br>இ.ஆ.தி. க/கு | |
| (6) | இ.ஆ.தி. க/கு ப<br>அனைத்துக் கூட்டாளிகளின் முதல் கணக்குகள்<br>(பாலிசித் தொகையினை கூட்டாளிகள் லாபப் பகிர்வு விகிதத்தில் பகிர்ந்ததற்காக) | |
| | | |

இ.ஆ.தி = இணை ஆயுள் திட்டம்

இ.ஆ.தி.கா = இணை ஆயுள் திட்டக் காப்பு

எடுத்துக்காட்டு: 23

ராம், குமார், துரை ஆகிய மூவரும் நிறுவனம் ஒன்றில் கூட்டாளிகள் அவர்கள் 2002ம் வருடம் 2ந் தேதியில் கூட்டு ஆயுள் காப்பீட்டுப் பாலிசியை ரூ. 30,000க்கு எடுத்துக் கொண்டனர். இறந்த கூட்டாளியின் பங்கினை பாலிசியின் மூலம் திரும்பப் பெறப்படும் தொகையினைக் கொண்டு செலுத்தவதற்காகவே இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. ஒவ்வொரு வருடமும் ஜனவரி 2ந் தேதி ரூ.800 பிரிமியம் செலுத்தப்பட்டது. குமார் 2003 வருடம் மார்ச் மாதம் 3ஆம் தேதி மரணமடைந்தார்.

ஆண்டு இறுதியிலான பாலிசியின் விடுமதிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது

| | |
|---|---|
| 2000 | Nil |
| 2001 | 600 |
| 2002 | 900 |

குமார் இறந்த பொழுது ஆயுள் காப்பீடுக் கழகத்திடமிருந்து பாலிசியின் முழுத்தொகையும் பெறப்பட்டது. குறிப்பேட்டுப் பதிவுகளைப் பதிவு செய்து மூன்று வருடத்திற்கு இணை ஆயுள் திட்டக் கணக்கு மற்றும் இணை ஆயுள் திட்டக்காப்பு க/கு ஆகியவற்றைத் தயார் செய்க. ஒவ்வொரு வருடமும் டிசம்பர் 31ஆம் தேதி ஏடுகளில் கணக்குகள் முடிக்கப்படுகின்றன.

விடை

குறிப்பேடு

| தேதி | விபரம் | பே.ப | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 2000 ஜன 2 | இணை ஆயுள் திட்ட க/கு ப<br>ரொக்க க/கு<br>(பிரிமியம் செலுத்தியதற்காக) | | 800 | 800 |
| டிச 31 | இலாபநட்ட க/கு ப<br>இ.ஆ.தி காப்பு க/கு<br>(பிரிமியம் செலுத்தியதற்குச் சமமாக காப்பிருப்பு வைத்தற்காக) | | 800 | 800 |

| | | | | |
|---|---|---|---|---|
| | இ.ஆ.தி. காப்பு க/கு ப<br>இ.ஆ.தி. க/கு<br>(விடுமதிப்பிற்கான பதிவு) | | 800 | 800 |
| 2001 | இணை ஆயுள் திட்ட க/கு ப<br>ரொக்க க/கு<br>(பிரிமியம் செலுத்தியதற்காக) | | 800 | 800 |
| | இலாப நட்டக் க/கு ப<br>இ.ஆ.இ. காப்பு க/கு<br>(பிரிமியம் செலுத்தியதற்குச் சமமாக காப்பிருப்பு வைத்தற்காக) | | 800 | 800 |
| டிச 31 | இ.ஆ.இ. காப்பு க/கு ப<br>இணை ஆயுள் திட்ட க/கு<br>(விடுமதிப்பிற்கு அதிகமான இ.ஆ.தி க/கு மாற்றுப்பதிவின் மூலம் இ.ஆ.தி காப்பிருப்புக் கணக்கில் எழுதி நீக்கியதற்காக) | | 200 | 200 |
| 2002 ஜன 2 | இணை ஆயுள் திட்ட க/கு ப<br>ரொக்க க/கு<br>(பிரிமியம் செலுத்தியதற்காக) | | 800 | 800 |
| | இலாப நட்ட க/கு ப<br>இ.ஆ.தி. காப்பு க/கு<br>(பிரிமியம் செலுத்தியதற்காக சமமாக காப்பிருப்பு வைத்ததற்காக) | | 800 | 800 |
| டிச 31 | இ.ஆ.தி காப்பு க/கு ப<br>இ.ஆ.தி க/கு<br>(விடுமதிப்பிற்கு அதிகமாக உள்ள இ.ஆ.தி க/கு மாற்றுப்பதிவின் மூலம் இ.ஆ.தி காப்பியிருப்புக் கணக்கில் எழுதி நீக்கியதற்காக) | | 500 | 500 |
| 2003 | இணை ஆயுள் திட்ட க/கு ப<br>ரொக்க க/கு<br>(பிரிமியம் செலுத்தியதற்காக) | | 800 | 800 |

குறிப்பு

| | | | | |
|---|---|---|---|---|
| மார்ச் 3 | ரொக்க க/கு ப<br>இ.ஆ.தி. க/கு<br>(குமார் இறந்த பொழுத பாலிசியின் முழுமதிப்பையும் பெற்றதற்காக) | | 30,000 | 30,000 |
| | இ.அ.தி. காப்ப க/கு ப<br>இ.ஆ.தி. க/கு<br>(இ.ஆ.தி காப்பியிருப்புக் கணக்கினை முடித்ததற்காக) | | 900 | 900 |
| | இ.ஆ.தி க/கு ப<br>ராம் முதல் க/கு<br>குமார் முதல் க/கு<br>துரை முதல் க/கு<br>(இலாபப் பகிர்வு விகிதத்தில பாலிசியின் தொகையினைப் பகிர்ந்து கொண்டதற்காக) | | 29,200 | 9,733<br>9,734<br>9,733 |

**இணை ஆயுள் திட்டக் காப்பிருப்பு க/கு**

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2000<br>டிச 31 | இ.ஆ.தி. க/கு (2) | 800 | 2000<br>டிச 31 | இலாப நட்டக் க/கு | 800 |
| | | 800 | | | 800 |
| 2001<br>டிச 31 | இ.ஆ.தி. க/கு<br>இருப்பு கீ/இ | 200<br>600 | 2001<br>டிச 31 | இலாப நட்டக் க/கு | 800 |
| | | 800 | | | 800 |
| 2002<br>டிச 31 | இ.ஆ.தி க/கு<br>இருப்பு கீ/இ | 500<br>900 | 2002<br>டிச 31 | இருப்பு கீ/கொ<br>இலாப நட்டக் க/கு | 600<br>800 |
| | | 1,400 | | | 1,400 |
| 2003<br>மார்ச் 31 | இ.ஆ.தி க/கு (மாற்றப்பட்டது) | 900 | 2003<br>ஜன 1 | இருப்பு கீ/கொ | 900 |
| | | 900 | | | 900 |

ப இணை ஆயுள் திட்ட க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 | | ரூ. | 2000 | | ரூ. |
| ஜன 2 | ரொக்க க/கு | 800 | டிச 31 | இ.ஆ.தி காப்பு க/கு | 800 |
| | | 800 | | | 800 |
| 2001 | | | 2001 | | |
| ஜன | ரொக்க க/கு | 800 | டிச 31 | இ.ஆ.தி.காப்பு க/கு | 200 |
| | | | | இருப்பு கீ/இ | 600 |
| | | 800 | | | 800 |
| 2002 | | | 2001 | | |
| ஜன 1 | இருப்பு கீ/கொ | 600 | டிச 31 | இ.ஆ.தி. காப்பு க/கு | 500 |
| | ரொக்க க/கு | 800 | | இருப்பு கீ/இ | 900 |
| | | 1,400 | | | 1,400 |
| 2003 | | | 2001 | | |
| ஜன 1 | இருப்பு கீ/கொ | 900 | டிச 31 | ரொக்க க/கு | 30,000 |
| ஜன 2 | ரொக்க க/கு | 800 | | இ.ஆ.தி. காப்பு க/கு (மாற்றப்பட்டது) | 900 |
| ஜன 3 | ராம் முதல் க/கு | 9,733 | | | |
| | குமார் முதல் க/கு | 9,734 | | | |
| | துரை முதல் க/கு | 9,733 | | | |
| | | 30,900 | | | 30,900 |

எடுத்துக்காட்டு 24

ஆனந்த, பாலன், கண்ணன் ஆகிய மூவரும் இலாபத்தினை 1ஃ2இ ¼ என்ற விகிதத்தில் பிரித்துக் கொண்டனர். 2002 ஆம் ஆண்டு 31 ஆம் தேதியில் உள்ள அவர்களின் இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 4,000 | ரொக்கம் | 1,000 |
| ஆனந்தின் முதல் | 10,000 | மொத்தச் சொத்துக்கள் | 20,000 |
| பாலனின் முதல் | 6,000 | (நன்மதிப்பு தவிர) | |
| கண்ணனின் முதல் | 4,000 | ஆனந்திற்கு கடன் | 3,000 |
| | 24,000 | | 24,000 |

2003—ஆம் வருடம் ஏப்ரல் 1ம் தேதி ஆனந்த் இறந்து விட்டார். மூன்று கூட்டாளிகளும் ரூ. 10,000த்திற்கு கூட்டு ஆயுள் காப்பீட்டுப் பாலிசியை எடுத்து இருந்தனர். பாலிசிக்கான தீர்வுத் தொகை 2003 ஆம் வருடம் மே மாதம் 10 ஆம் தேதி பெறப்பட்டது.

கூட்டு வாணிகப் பத்திரப்படி முடிவு பெற்ற மூன்று வருடங்களின் லாபத்தினை கணக்கிட்டு அதன் இரண்டு மடங்கு தொகையினை நிறுவனத்தின் நன்மதிப்பு என மதிப்பிட வேண்டும்.

வியாபார முடிவுகள் பின்வருமாறு

| | | |
|---|---|---|
| 2000 | இலாபம் | ரூ.12,000 |
| 2001 | நட்டம் | ரூ. 4,000 |
| 2002 | இலாபம் | ரூ. 8,800 |

2003 ஆம் வருடம் ஜீன் 1ஆம் தேதி இறந்த கூட்டாளியின் முதல் மற்றும நன்மதிப்பு பங்குகள் ரொக்கமாகக் கொடுக்கப்பட்டது அதற்காக நிறுவனத்தில் உள்ள ரொக்கமும் மற்றும் நிறுவனத்தின் சொத்துக்களை அடமானமாக வைத்து வங்கி அதிக பற்றும் பெற்றுப் பயன்படுத்தப்பட்டது.

மேற்கொண்ட நடவடிக்கைகள் குறித்து குறிப்பேட்டுப் பதிவுகளை பதிவு செய்து கூட்டாளிகள் முக்கிய பேரேட்டுக் கணக்குகளை தயார் செய்க. ஜீன் 2ம் தேதியிலுள்ள பாலன் கண்ணன் ஆகியோரின் இருப்புநிலைக் குறிப்பினைத் தயார் செய்க. பாலன் கண்ணன் ஆகியோரின் ஏடுகளில் நன்மதிப்புக் கணக்குத் துவங்கவில்லை என்பதை நினைவில் கொள்க.

கணக்கிடல்

1. இ.ஆ. திட்டத்தின் பகிர்வு

ரூ.

| | | |
|---|---|---|
| ஆனந்த் | 1/2 x 10,000 | = 5,000 |
| பாலன் | 1/4 x 10,000 | = 2,500 |
| கண்ணன் | 1/4 x 10,000 | = 2,500 |

2) நன்மதிப்பைக் கணக்கிடல்

| | |
|---|---|
| லாபம் 2002 | 12,000 |
| லாபம் 2002 | 8,800 |
| | 20,800 |
| நட்டம் 2001 | 4,000 |
| மொத்த லாபம் | 18,800 |

சராசரி லாபம் $\frac{16,000}{3}$ = ரூ.5,600

2 மடங்கு = 2 x 5,600 = 11,200

ஆனந்தின் பங்கு 1/2 x 11,200 = ரூ.5,600 இத்தொகை பாலன் மற்றும் கண்ணன் ஆகியோரின் கணக்கில் மாற்றுப் பதிவின் மூலம் எழுதி நீக்கப்பட வேண்டும்.

பாலன், கண்ணன் ஆகிய இருவரும் சமபங்குக் கூட்டாளியாகையால் அவர்களின் கணக்கில் பற்று எழுத வேண்டும்.

| | | | ப. ரூ. | வ. ரூ. |
|---|---|---|---|---|
| 2003 ஏப் 1 | ஆனந்தின் முதல் க/கு ப<br>ஆனந்தின் நிறைவேற்றாளர்களின் க/கு<br>(முதல் கணக்கு நிறைவேற்றாளரின் கணக்கிற்கு மாற்றப்பட்டதற்காக) | | 10,000 | 10,000 |
| | ஆனந்தின் நிறைவேற்றாளரின் க/கு ப<br>ஆனந்தின் கடன் க/கு<br>(கடன் க/கு நிறைவேற்றாளரின் கணக்கிற்கு மாற்றப்பட்டதாக) | | 3,000 | 3,000 |
| | பாலன் க/கு ப<br>கண்ணன் முதல் க/கு ப<br>ஆனந்தின் நிறைவேற்றாளரின் க/கு<br>(ஆனந்தின் நன்மதிப்பு பங்கு பாலன் கண்ணன் ஆகியோரின் முதல் கணக்கில் மாற்றுப் பதிவின் மூலம் கணக்கில் மாற்றுப்பதிவின் எழுதி | | 2,800<br>2,800 | 5,600 |

குறிப்பு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 மே 10 | ரொக்கம் க/கு ப<br>இ.ஆ.தி க/கு<br>(ஆனந்தின் இறப்பின் காரணமாக பாலிசியின் முழுத்தொகை பெறப்பட்டதற்காக) | | 10,000 | 10,000 |
| | இ.ஆ.தி. க/கு ப<br>ஆனந்தின் நிறைவேற்றாளரின் க/கு<br>பாலன் முதல் க/கு<br>கண்ணன் முதல் க/கு<br>(இ.ஆ.தி யிலிருந்து பெற்ற தொகையை ஆனந்த் பாலன், கண்ணன் ஆகியோர் 1/2, 1/4, 1/4 என்ற விகிதத்தில் பிரித்துக் கொண்டதற்காக) | | 10,000 | 5,000<br>2,500<br>2,500 |
| 2003 ஜீன் 1 | ரொக்க க/கு ப<br>வங்கி அதிகப்பற்று க/கு<br>(வங்கி அதிகப் பற்று பெற்றமைக்காக) | | 6,600 | 6,600 |
| | ஆனந்தின் நிறைவேற்றாளரின் க/கு ப<br>ரொக்க க/கு<br>(ஆனந்தின் நிறைவேற்றாளருக்கு தொகையை முழுவதும் செலுத்தியதற்காக) | | 17,000 | 17,000 |

ஆனந்தின் நிறைவேற்றாளருக்கு க/கு மற்றும் ரொக்க க/கு போன்ற கணக்குகள் தயாரித்த பீ. இப்பதிவுகள் செய்யப்பட வேண்டும்.

ப ஆனந்தின் நிறைவேற்றாளரின் க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 | | ரூ. | | | |
| ஏப்ரல் 1 | ஆனந்தின் கடன் க/கு | 3,000 | மே 10 | ஆனந்தின் முதல் க/கு | 10,000 |
| ஜீன் 1 | ரொக்கக் க/கு | 17,600 | | பாலன்/கண்ணன் முதல் க/கு | 5,600 |
| | | | | இணை ஆயுள் திட்ட க/கு | 5,000 |
| | | 20,600 | | | 20,600 |

ப பாலன் க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 | | ரூ. | 2003 | | |
| ஏப்ரல் 1 | ஆனந்தின் க/கு | 2,800 | ஏப்ரல்1 | இருப்பு கீ/கொ | 6,000 |
| | இருப்பு க/கு | 5,700 | மே 10 | இ.ஆ.தி க/கு | 2,500 |
| | | 8,500 | | | 8,500 |
| | | | ஜீன் 1 | இருப்பு கீ/கொ | 5,700 |

ப கண்ணன் முதல் க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 | | ரூ. | 2003 | | ரூ. |
| ஏப்ரல் 1 | ஆனந்தின் க/கு | 2,800 | ஏப்ரல்1 | இருப்பு கீ/கொ | 4,000 |
| | இருப்பு கீ/கொ | 3,700 | மே 10 | இ.ஆ.தி க/கு | 2,500 |
| | | 6,500 | | | 6,500 |
| | | | ஜீன் | இருப்பு கீ/கொ | 3,700 |

ப நன்மதிப்பு க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ |
| 2003 ஏப்ரல் 1 | ஆனந்தின் நிறைவேற்றாளரின் க/கு | 5,600 | | பாலனின் க/கு<br>கண்ணனின் க/கு | 2,800<br>2,800 |
| | | 5,600 | | இருப்பு கீ/கொ | 5,600 |

ப இணை ஆயுள் திட்டக் க/கு வ்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ |
| 2003 மே 10 | ஆனந்தின் நிறைவேற்றாளரின் க/கு<br>பாலன் முதல் க/கு<br>கண்ணன் முதல் க/கு | 5,000<br>2,000<br>2,500 | 2003 மே 10 | ரொக்க க/கு | 10,000 |
| | | 10,000 | | | 10,000 |

ப ரொக்கக் க/கு வ

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2003 | இருப்பு கீ/கொ | 1,000 | 2003 மே 10 | ஆனந்தின் நிறைவேற்றாளரின் க/கு | 17,600 |
| ஏப்ரல் | இ.ஆ.தி. க/கு | 10,000 | | | |
| | வங்கி அதிகப்பற்று க/கு | 6,600 | | | |
| | | 17,600 | | | 17,600 |

ப வங்கி அதிகப் பற்று க/கு வ

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2003 மே | இருப்பு கீ/இ | 6,600 | 2003 மே 10 | ரொக்கக் க/கு | 6,600 |
| | | 6,600 | | | 6,600 |
| | | | ஜீன் 1 | இருப்பு கீ/கொ | 6,600 |

2003 ஆம் வருடம் ஜுன் 1ந் தேதியில் பாலன், கண்ணன் ஆகியோரின் இருப்புநிலைக்குறிப்பு

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 4,000 | மொத்த சொத்துக்கள் | 20,000 |
| வங்கி அதிகப்பற்று | | 6,600 | (நன்மதிப்பு நீங்கலாக) | |
| பாலன் | 5,700 | | | |
| கண்ணன் | 3,700 | 9,400 | | |
| | | 20,000 | | 20,000 |

எடுத்துக்காட்டு : 25

A, B மற்றும் C ஆகியோர் 6:5:4 விகிதத்தில் லாப நட்டத்தைப் பகிர்ந்து கொள்ளும் கூட்டாளிகள் ரூ.1 லட்சத்திற்கு இணை ஆயுள் காப்பீட்டுப் பாலிசி எடுத்திருந்தார்கள். அதற்கான ஆண்டுப் பிரிமியம்

தொகை ரூ.7,500. இது வியாபாரச் செலவாகக் கருதப்பட்டது. கணக்குகள் ஒவ்வொரு ஆண்டும் டிசம்பர் 31 அன்று முடிக்கப்பட்டன. மரணமடையும் கூட்டாளியின் நிறைவேற்றாளர் கீழ்வரும் தொகையைப் பெறும் உரிமையுடையவர்:

1. இறந்து போனவரின் முதல்
2. இறந்த தேதி வரை முதல் மீது ஆண்டுக்கு 6% வட்டி
3. இறந்த வரையிலான காலத்திற்கான லாபத்தில் அவரது பங்கு பிரிமியம் தொகை எழுதப்படுவதற்கு பின்பான கடந்த மூன்றாண்டு லாபத்தின் சராசரியில் கணக்கிடப்படும்.
4. நன்மதிப்பில் அவரது பங்கு பிரிமியம் தொகை எழுதப்படுவதற்கு முன்பான இரண்டாண்டு இலாபம் ஆகும்.
5. ரூ.1899 காப்பில் (Reserve) அவரது பங்கு.
6. காப்பீட்டுத் தொகை பெறப்பட்ட அளவுக்கு இறந்தவரின் நிறைவேற்றாளருக்கு உரிமை உண்டு.
7. இறந்தவரின் தொகைக்கு அது செலுத்தப்படும்வரை 10% வட்டி உண்டு. மார்ச் 31 அன்று மூன்று சமமான தவணைகளில் வட்டி உள்ளிட்ட தொகை ஒவ்வொரு ஆண்டும் வழங்கப்படும். 2004 ஏப்ரல் 1 அன்று B இறந்தார். 2004—ல் அவரது எடுப்பு ரூ.9667. 2003—ல் இருப்புநிலைக்குறிப்பில் அவரது முதல் ரூ.80,000 ஆக இருந்தது. 2001, 2002, 2003 ஆகிய ஆண்டுகளில் பாலிசி பிரிமியம் செலவாகச் சேர்க்கப்பட்ட பிறகு கணக்கிடப்பட்ட இலாபம் முறையே ரூ.65,000, ரூ.64,000 மற்றும் ரூ.69,000

B—யினுடைய நிறைவேற்றாளர் கணக்கை காட்டுக. தரப்படவேண்டிய தவணையைக் கணக்கிடுக.

**விடை:**

1. முதல் மீது வட்டி ரூ. $80,000 \times \frac{6}{100} \times \frac{3}{12} =$ ரூ.1,200

2. லாபத்தில் பங்கு

குறிப்பு

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பயிற்சி வினாக்கள்:**

**1) சரியா அல்லது தவறா என கூறுக:**

அ) மறுமதிப்பீட்டு கணக்கின் லாபம் அல்லது நட்டம், எஞ்சியுள்ள கூட்டாளிகளுக்கு அவர்களது புதிய விகிதத்தில் பிரித்து கொடுக்கப்படும்.

ஆ) மரணமடைவதற்கு முன்பு தயாரிக்கப்பட்ட கடைசி இருப்பு நிலைக் குறிப்பிற்கும், மரணமடைந்த தேதி வரைக்கும் இடையிலேயான லாபத்தில் பங்கு பெற, இறந்த கூட்டாளியின் நிறைவேற்றாளருக்கு உரிமை உண்டு.

இ) ஒரு காப்பீடு பாலிசியை, அது முதிர்வதற்கு முன்பு ஒப்படைப்பு செய்யும் பட்சத்தில், காப்பீடு நிறுமம் திரும்ப தரக்கூடிய தொகை ஒப்படைவ மதிப்பு எனப்படும்.

**2) சரியான விடையை தேர்ந்தெடுக்கவும்:**

அ) இணை ஆயல் காப்பீடு ஒரு

1) சொத்து 2) செலவு
3) ஒன்றுமில்லை

ஆ) தனிநபர் காப்பீடு பாலிசி பொதுவாக

1) ஒவ்வொரு கூட்டாளியின் மீதும் எடுக்கப்படும்
2) ஏதேனும் ஒரு கூட்டாளியின் மீது எடுக்கப்படும்
3) இவை ஏதுமில்லை

| ஆண்டு | பாலிசி பிரிமியம் சேர்க்கப்பட்டதற்கு பின்பு |
|---|---|
| 2001 | 65,000 |
| 2002 | 64,000 |
| 2003 | 69,000 |
| | 1,98,000 |

சராசரி $= 1,98,000 \times \frac{1}{3} =$ ரூ.66,000

3 மாதங்களுக்கான லாபம் $= 66,000 \times \frac{3}{12} =$ ரூ.16,500

B பங்கு $\left(\frac{5}{15}\right) = 16,500 \times \frac{5}{15} =$ ரூ.5,500

3. நன்மதிப்பில் பங்கு

| ஆண்டு | பாலிசி பிரிமியம் சேர்க்கப்பட்டதற்கு பின்பு | |
|---|---|---|
| 2001 | 72,500 | (ஒவ்வொரு ஆண்டும் |
| 2002 | 71,500 | ரூ.7500 சேர்க்கப்பட்டது) |
| 2003 | 76,500 | |
| | 2,20,500 | |

சராசரி லாபம் $= 2,20,500 \times \frac{1}{3} =$ ரூ.73,500

நன்மதிப்பு $= 73,500 \times 2 =$ ரூ.1,47,000

B பங்கு $\left(\frac{5}{15}\right) = 1,47,00 \times \frac{5}{15} =$ ரூ.49,000

4. காப்பில் பங்கு

காப்பு $= 1,899 \times \frac{5}{15} =$ ரூ.633

5. இணை ஆயுள் பாலிசியில் பங்கு

பாலிசி $= 1,00,000 \times \frac{5}{15} =$ ரூ.34,334

**Bயின் நிறைவேற்றாளர் க/கு**

| 2004 | | ரூ. | 2004 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| ஏப் 1 | எடுப்பு | 9,667 | ஏப் 1 | B முதல் க/கு மாற்றப்பட்டது | 80,000 |
| | வங்கி க/கு (இணை ஆயுள் பாலிசி தொகை தரப்பட்டது) | 1,00,000 | | வட்டி | 1,200 |
| | இருப்பு கீ/இ | 60,000 | | லாபம் | 5,500 |
| | | | | நன்மதிப்பு | 49,000 |
| | | | | காப்பு | 633 |
| | | | | வங்கி (இணை ஆயுள் பாலிசி பங்கு) | 33,334 |
| | | 1,69,667 | | | 1,69,667 |

**தவணை கணக்கீடு**

இருப்பு ரூ.60,000—த்துக்கு ஆண்டுக்கு 10% வட்டி உண்டு. வட்டி உள்ளிட்ட தொகை 31 மார்ச்சில் சம தவணையாகத் தரப்படும்.

ஒவ்வொரு ஆண்டும் ரூ.1 தரப்படுகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்படியென்றால் மூன்று ஆண்டுகளுக்கான இன்றைய ரூ.1—ன் மதிப்பு 10% கணக்கில்

$$=\left(\frac{10}{11}+\frac{10\times10}{11\times11}+\frac{10\times10\times10}{11\times11\times11}\right)=\frac{3310}{1331}$$

தவணையை இப்படிக் கணக்கிடலாம் $=\frac{1331}{3310}=0.4021$

= 0.4023 x ரூ.60,000

= ரூ.24,126

## 1.6. கூட்டு வணிக நிறுவனத்தின் கலைப்பு

ஒரு கூட்டு வணிக உறவு கீழ்க்கண்ட நேரங்களில் கலைக்கப்படுகிறது.

1. எந்த நோக்கத்திற்காக அவ்வமைப்பு தொடங்கப்பட்டிருப்பின் அது முடிவற்ற பொழுது
2. ஒரு குறிப்பிட்ட காலத்திற்கென்று அவ்வமைப்பு தொடங்கப் பட்டிருப்பின், அக்காலக்கெடு முடிவுற்ற பொழுது
3. கூட்டாளியொருவர் விலகும் பொழுது
4. கூட்டாளியொருவர் இறந்த பொழுது
5. கூட்டாளியொருவர் வக்கற்றவராகும் பொழுது

ஒரு கூட்டு வணிக நடவடிக்கைகளை தொடர்ந்து நடத்த வேண்டாமென்று முடிவு எடுத்தால் அந்நிறுவனமே கலைக்கப்பட்டு விட்டது எனக் கூறலாம். இங்கே ஒரு நிறுவனத்தை கலைத்தல் என்பது தன்னுடைய வணிகத்தை முடித்தல் ஆகும்.

மேற்கண்ட நிகழ்ச்சிகள் நடைபெறும் போது அதற்கு முரண்பாடான உடன்படிக்கை ஏதும் அங்கு இல்லையென்றால் ஒரு நிறுவனம் கலைக்கப்பட்டது எனக் கூறலாம்.

கீழ்க்கண்ட நேரங்களில் ஒரு நிறுவனம் கலைக்கப்பட்டதாக கருதப்படம்:

1. அனைத்துக் கூட்டாளிகளும் நிறுவனத்தை கலைத்துவிட உடன்பட்டபொழுது
2. ஒருவரைத் தவிர ஏனைய பிற கூட்டாளிகள் அனைவரும் வக்கற்றவர்களாகிவிடும் பொழுது
3. நிறுவனத்தின் தொழில் சட்டத்திற்குப் புறம்பானதாக மாறும்பொழுது,
4. கூட்டாளியொருவர் நிறுவனத்தைக் கலைத்துவிட அறிவிப்பு கொடுத்த பொழுது,
5. கூட்டு நிறுவனத்தை கலைத்துவிட அறிவிப்பு கொடுத்த பொழுது,

ஒரு கூட்டு வணிக உறவின் கலைப்பினால் அக்கூட்டு நிறுவனம் கலைக்கப்படலாம் அல்லது கலைக்கப்படாமலும் இருக்கலாம். ஆனால் ஒரு

கூட்டு நிறுவனத்தின் கலைப்பின் போது கூட்டு வணிக உறவு உறுதியாகக் கலைக்கப்படும்.

ஒரு நிறுவனம் கலைக்கப்படும் போது அறிவிப்பு (Public Notice) கொடுக்கப்பட வேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால், நிறுவனம் கலைக்கப்படாமலிருக்கும் போது அந்நிறுவனத்தின் சார்பில் செய்யப்பட்ட நடவடிக்கைகளுக்காக எங்ஙனம் கூட்டாளிகள் பிறருக்கு பொறுப்பாகிறார்களோ அவ்வாறே கலைத்த பின்பும் பிறர்க்கு தொடர்ந்து பொறுப்பேற்க வேண்டும்.

### 1.6.1 கணக்குகளைத் தீர்த்தல் (Settlement of Accounts)

ஒரு கூட்டு நிறுவன கலைப்பு ஏற்படும் பொழுது அது தன் வியாபார நடவடிக்கைகளை நிறுத்தி விடுகிறது. அடுத்து கீழ்க்கண்ட விதிமுறைகளை பின்பற்றுகிறது.

1. அதனுடைய அனைத்து சொத்துக்களையும் விற்பனை செய்து பணம் பெறுதல்
2. பொறுப்புக்கள் அனைத்தையும் செலுத்துவதற்கு விற்பனைத் தொகையை பயன்படுத்துதல்
3. மீதமுள்ள தொகையை கூட்டாளிகளுக்கிடையே பகிர்தல்

மேற்கண்டவைகளைச் செயல்படுத்த நிறுவனத்தின் சொத்துக்களை விற்பதால் கிடைத்த தொகையை கீழ்க்கண்டவாறு உபயோகப்படுத்த வேண்டும்.

முதலில் கூட்டாளிகளில்லாத பிறர்க்கு (மூன்றாம் நபர்) கடன்களை செலுத்த வேண்டும்.

பின் கூட்டாளிகளிடமிருந்து பெற்ற கடன்களைத் திரும்பச் செலுத்த வேண்டும்.

அதன் பிறகே கூட்டாளிகளின் மூலதனத்தைத் திரும்பச் செலுத்த வேண்டும்.

நிறுவனத்தின் கலைப்பினால் ஏற்பட்ட நட்டத்தைக் கீழ்க்கண்டவாறு சரிக்கட்ட வேண்டும்.

1. முதலில் முன்பே சேர்த்து வைத்திருந்த இலாபத் தொகையினை பயன்படுத்துதல்
2. அடுத்ததாக கூட்டாளிகளின் மூலதனங்களிலிருந்து எடுத்தல்
3. கடைசியாக தேவைப்பட்டால் (நட்டம் முழுவதுமாக சரிகட்ட முடியாமலிருந்தால் கூட்டாளிகள் சொந்த சொத்துக்களிலிரந்து இலாபப் பகிர்வு விகிதத்தில் எடுத்துக் கொள்ளுதல்.

கூட்டு நிறுவனத்தைக் கலைத்த பின்பு கணக்குகளைத் தீர்க்கும் விதம் பற்றி கூட்டாளிகளிடையே யாதொரு குறிப்பிட்ட ஒப்பந்தமும் இல்லாவிடில், மேற்கண்டவைகளை விளக்குகின்ற கூட்டு வணிகச் சட்டத்தின் சரத்துக்கள் பின்பற்றப்படும்.

### நிறுவனத்தின் கடன்களுகம் தனிக்கடன்களும்
### (Firm's Debts and Private Debts)

ஒரு கூட்டாளியின் சொந்தச் சொத்தை முதலில் தனிப்பட்ட முறையில் உள்ள அவருடைய கடன்களை செலுத்த உபயோகப்படுத்த வேண்டும். அதன்பின் மிகுதி ஏதாவது இருந்தால் அதனை மட்டும் நிறுவனத்தின் கடன்களைச் செலுத்த உபயோகப்படுத்த வேண்டும்.

இதே போல், நிறுவனத்தின் கடனாளிகளுக்குச் செலுத்த முதலில் நிறுவனத்தின் சொத்துக்களைப் பயன்படுத்த வேண்டும். நிறுவனக் கடன்களைத் தீர்த்த பின் உள்ள மிகுதித் தொகையின் தன் பங்குத் தொகையை மட்டும் ஒரு கூட்டாளி தன்னுடைய தனிக்கடன்களைத் தீர்க்க உபயோகப்படுத்த முடியும்.

### 1.6.2. கணக்கு எழுதும் முறை (Accounting Work)

கூட்டு நிறுவனத்தின் கலைப்பின் போது, நிறுவனத்தின் சொத்துக்கள் விற்று பணமாக்கப்பட்டு பொறுப்புக்கள் செலுத்தப்பட வேண்டும் பிறகு கூட்டாளிகளின் கணக்குகள் சரிக்கட்டி முடிக்கப்படும். இதனை வேறு முறையில் சொல்வதென்றால், கணக்கெழுத வேண்டிய முறையை 5 பகுதிகளாகப் பிரிக்கலாம்.

1. சொத்துக்களை விற்றுப் பணமாக்கல் மற்றும் பொறுப்புகளைச் செலுத்தல்
2. கூட்டாளிகளின் கணக்குகளைத் தீர்த்தல் மேலே கூறியவைகளை செயல்படுத்தும் முறையினைக் கீழே காண்போம்.

வணிகம் தொடர்ந்து நடைபெறாமல் முடிவடையும் போது அந்த வணிக நிறுவனம் கலைக்கப்பட்டது என நாம் அறிந்துள்ளோம். இதன் விளைவாக ரொக்கக் கணக்கு அல்லது வங்கிக் கணக்கு மற்றும் முதல் கணக்குகள் உள்பட அனைத்துக் கணக்குகளும் முடிக்கப்படும். அனைத்து சொத்துக்களும் விற்கப்பட்டு அனைத்து பொறுப்புகளும் செலுத்தப்படும் வரையில் நீங்கள் எங்ஙனம் அக்கணக்குகளை முடிக்க முடியும்? அனைத்து சொத்துக்களையும் பொறுப்புகளையும் "தீர்வு கணக்கு" (Realisation Account) என்னும் ஒரு தனிக் கணக்கிற்கு நாம் மாற்றுவதன் மூலம் அக்கணக்குகள் முடிக்கப்படும்.

இந்த தீர்வு கணக்கில், நிறுவனத்தின் சொத்துக்களை விற்பனை செய்து பணமாக்கல் மற்றும் பொறுப்புகளைச் செலுத்துதல் சம்பந்தப்பட்ட அனைத்து நடவடிக்கைகளும் பதிவு செய்யப்படும். கலைப்பின் போது சில செலவுகள் ஏற்படும். இச்செலவும் இக்கணக்கில் பற்று எழுதப்படும். இந்நிலையில் கலைப்பு ஏற்படும் இலாபம் அல்லது நட்டத்தை தீர்வுக்கணக்கு காண்பிக்கிறது. தீர்வுக்கணக்கின் பற்றப்பகுதி அதிகமாக இருந்தால், அங்கு நட்டம் உள்ளது எனவும் வரவுப்பகுதி அதிகமாயிருந்தால் அங்கு இலாபம் உள்ளது எனவும் அறியலாம். இந்த லாப அல்லது நட்டம் இலாபப்பகிர்வு விகிதப்படி பிரிக்கப்பட்டு, கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு மாற்றப்படும்.

குறிப்பு

கூட்டு வணிக நிறுவன கலைப்பிற்கான பதிவுகள்

| செய்கைகள் | குறிப்பேட்டுப் பதிவுகள் |
|---|---|
| 1. நிறுவனத்தின் அனைத்துச் சொத்துக்களையும் ஏட்டின் மதிப்புகளின்படி மாற்ற வேண்டும். (இலாப நட்டக் கணக்கில் பற்று இருப்பு மற்றும் விளம்பர அனாமத்துக் கணக்கில் பற்று இருப்பு போன்றவற்றை இங்கு மாற்றக்கூடாது) (ரொக்கக் க/கு மற்றும் வங்கிக் க/கு ஆகியவை ரொக்க நிலையில் இருப்பதால் அவைகளைத் தீர்வு கணக்கிற்கு மாற்றக்கூடாது. ஆனால் வணிகத்தை விற்று விட்டதன் காரணமாக ஒரு நிறுவனம் கலைக்கப்படுமேயானால், குறிப்பாக ஏதேனும் மாறுப்பட்ட ஒப்பந்தம் இல்லாதபோது, ரொக்கக் க/கு வங்கிக் க/கு ஆகியனவும் தீர்வுக்கணக்கிற்கு மாற்றப்படுகிறது)<br>**சிறுகுறிப்பு:**<br>(அ) பற்பல கடனாளிகள் கணக்கும் ஐயக்கடன் காப்புக் கணக்கும் தனித்தனியான இரு கணக்குகள் என்பதனை மனதில் கொள்ள வேண்டும். மேலும் கடனாளிகள் மொத்தத் தொகையைத் தீர்வுக் கணக்கிற்கு மாற்ற வேண்டும்.<br>(ஆ) இருப்பு நிலைக் குறிப்பில் நன்மதிப்பு இருக்குமேயானால், அதுவும் ஒரு சொத்தாகக் கருதப்பட்டு ஏட்டின் மதிப்பின்படி தீர்வுக் கணக்கிற்கு மாற்றப்பட்டு கணக்கு முடிக்கப்படுகிறது. நன்மதிப்பு ஏடுகளில் இல்லாத போது, மாற்ற வேண்டுமென்ற அவசியமில்லை. ஒரு கூட்டாளி வணிகத்தை எடுத்துக்கொண்டு ஒரு குறிப்பிட்ட தொகையை நன்மதிப்பிற்காக செலுத்த ஒப்புக் கொண்டாரேயானால், ஒத்துக் கொள்ளப்பட்ட தொகைக்கு அவருடைய முதல் கணக்கு பற்று வைக்கப்பட்டு தீர்வுக்கணக்கு பற்று வைக்கப்பட்டு தீர்வுக்கணக்கு வரவு வைக்கப்படும்.<br>(இ) கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்பு தீர்வுக் கணக்கிற்கு மாற்றப்படும். | தீர்வு க/கு ப<br>தனித்தனிச் சொத்துக்கள் க/கு<br>(சொத்துக்களைத் தீர்வுக் கணக்கில் மாற்றியதற்கான பதிவு) |

| | |
|---|---|
| 2. நிறுவனத்தின் அனைத்துப் பொறுப்புக்களும் ஏட்டின் மதிப்புகளின்படி மாற்றப்பட வேண்டும். (காப்பநிதி போன்ற கூடியிருக்கக் கூடிய இலாபம் மற்றும் இலாப நட்டக் கணக்கில் வரவு இருப்பு போன்றவற்றைத் தீர்வுக் கணக்கிற்கு மாற்றக்கூடாது) (இதே போல் கூட்டாளிகளின் கடன் கணக்குகளையும் மாற்றக்கூடாது) (ஐயக்கடன் காப்புக் க/கு மற்றும் கடனாளிகளின் மீது தள்ளுபடிக் காப்பு க/கு ஆகியவற்றை தீர்வுக் கணக்கிற்கு மாற்ற வேண்டும்) கூட்டு ஆயுள் காப்பீட்டுப் பாலிசிக் காப்பையும் நெகிழ்ச்சி நிதி முதலிய குறிப்பிட்ட ஒதுக்குகளையும் (Fluctuation Fund) தீர்வுக் கணக்கிற்கு மாற்ற வேண்டும். | தனித்தனிப் பொறுப்புகள் க/கு ப<br>தீர்வுக் க/கு<br>(பொறுப்புகளைத் தீர்வுக்கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) |
| 3. அ) ரொக்கத்திற்கு விற்பனை செய்யப்பட்ட சொத்துக்களை பதிய வேண்டும்.<br>சிறுகுறிப்பு :<br>அ) நன்மதிப்பிறாக ஏதாவது ஒரு தொகை பெறப்பட்டிருந்தால் ரொக்கக் கணக்கினை பற்று வைத்துத் தீர்வுக் கணக்கினை வரவு வைக்க வேண்டும்.<br>ஆ) ஏட்டில் பதிவில் இல்லாத ஒரு சொத்து ரொக்கத்திற்கு விற்கப்படுமேயனால் அப்போது ரொக்கக் கணக்கைப் பற்ற வைத்துத் தீர்வுக் கணக்கினை வரவு வைக்க வேண்டும். இது ஒரு இலாபம் ஆகும்.<br>குறிப்பு மூலதனம் நிலையானவையாக இருக்கும் பட்சத்தில், கலைப்பு சம்பந்தப்பட்ட அனைத்து சரிக்கட்டுதல்களும் நடப்புக் கணக்கில் செய்யப்படும். முடிவாக நடப்புக் கணக்குகளில் உள்ள இருப்புகள் முறையான முதல் கணக்குகளுக்கு மாற்றப்படும். | ரொக்கக் க/கு ப<br>தீர்வுக் க/கு<br>(சொத்துக்களை விற்றுப் பெற்ற தொகைக்கான பதிவு) |
| 4. கலைப்பு சம்பந்தமான தீர்வுச் செலவுகளைப் பதிய வேண்டும்.<br>சிறுகுறிப்பு : கூட்டாளியொருவர் தீர்வுச் செலவினங்களை கொடுக்க சம்மதித்தாரேயானால் அவருடைய முதல் கணக்கை வரவு வைக்க வேண்டும். | தீர்வு க/கு ப<br>ரொக்க க/கு<br>(தீர்வுச் செலவுகளை செலுத்தியதற்கான பதிவு) |

குறிப்பு

| | |
|---|---|
| 5. பொறுப்புக்களை செலுத்த வேண்டும். சிறுகுறிப்பு : ஏட்டின் பதிவில் இல்லாத பொறுப்பிற்காக பணம் செலுத்த இருந்தால் தீர்வுக் கணக்கை பற்று வைத்து ரொக்கக் கணக்கை வரவு வைக்க வேண்டும். இது ஒரு நட்டம் ஆகும். | தீர்வு க/கு ப<br>ரொக்க க/கு<br>(பொறுப்புகளைச் செலுத்தியதற்கான பதிவு) |
| 6. கூட்டாளியொருவரால் ஏற்றுக் கொள்ளப்பட்ட பொறுப்புகள் | தீர்வு க/கு ப<br>கூட்டாளியின் முதல் க/கு<br>(பொறுப்பு ஒத்துக் கொள்ளப்பட்டதற்கான பதிவு) |
| 6. அ) தீர்வில் ஏற்படும் இலாபம் அல்லது நட்டத்தை மாற்ற வேண்டும். சிறுகுறிப்பு : இதுவே நட்டமாயிருந் தால் மேற்கண்ட பதிவை எதிர் மாறாக எழுதி சிறு விளக்கத்தையும் தகுந்தவாறு மாற்ற எழுதவும். | தீர்வு க/கு ப<br>கூட்டாளியின் முதல் க/கு<br>(தீர்வில் ஏற்படும் இலாபம் இலாபப் பகிர்வு விகிதப்படி பிரிக்கப்பட்டதற்கான பதிவு) |
| 7. கூட்டாளியின் கடன் தொகை ஏதாவது இருந்தால் அதனைச் செலுத்த வேண்டும். | கூட்டாளியின் கடன் க/கு ப<br>ரொக்க க/கு<br>(கடன் செலுத்தப்பட்டதற்கான பதிவு) |
| 8. காப்புநிதி போன்ற சேர்த்து வைக்கப்பட்டுள்ள இலாபங்களை பகிர்ந்து தர வேண்டும். சிறுகுறிப்பு : இதே போல இருப்பு நிலைக் குறிப்பிலுள்ள இலாப நட்டக்கணக்கின் பற்று இருப்பு போன்ற நட்டங்களையும் மாற்ற வேண்டும். | காப்பு நிதி க/கு ப<br>கூட்டாளியின் முதல் க/கு<br>(காப்பை இலாபப் பகிர்வு விகிதத்தில் பகிர்ந்ததற்கான பதிவு) |
| 9. கூட்டாளிகளுடைய முதல் கணக்குகளை முடிக்க வேண்டும். சிறுகுறிப்பு : ஒவ்வொரு கூட்டாளி எவ்வளவு தொகை செலுத்தப்பட வேண்டுமென்பதை முதல் கணக்கு கள் காண்பிக்கின்றன. இப்போது ரொக்கக் க/கு அல்லது வங்கிக் க/கு ஒவ்வொரு கூட்டாளிக்கும் செலுத்த வேண்டிய தொகைக்குச் சமமான இருப்பைக் காண்பிக்கிறது. தொகை அவர்களுக்குச் செலுத்தப்ப டும் இவ்வாறு செய்வதால் முதல் கணக்குகளும் ரொக்கம் அல்லது வங்கிக் கணக்கும் முடிக்கப்படுகின்றன. | கூட்டாளியின் முதல் க/கு ப<br>ரொக்க க/கு<br>(ஒவ்வொரு கூட்டாளிக்கும் கொடுக்க வேண்டிய தொகையைச் செலுத்தியதற்கான பதிவு) |

| | |
|---|---|
| 10. தீர்வில் ஏற்பட்ட நட்டத்தை கூட்டாளியின் முதல் கணக்குக ளுக்கு மாற்றியதன் கூட்டாளிகளின் முதல் கணக்குளில் ஒரு கணக்கு பற்று இருப்பைக் காண்பிக்கிறது. என்றால் அந்தக் கூட்டாளி நிறுவ னத்தின் ஒரு கடனாளி ஆவார். ஆகவே அவருடைய முதல் கணக்கிலுள்ள பற்று இருப்பை நீக்குவதற்கு அவர் ரொக்கம் கொண்டு வர வேண்டும். | ரொக்க க/கு ப<br>கூட்டாளியின் முதல் க/கு |
| 11. கூட்டாளி அவருடைய பற்று இருப்பை நீக்க பணம் கொண்டு வர முடியாவிட்டால் | அக்கூட்டாளியின் பற்று இருப்பை ஏனைய கூட்டாளிகள் தங்களு டையஒத்துக்கொள்ளப்பட்ட பழைய முதல்கள் விகிதத்தில் சரிக்கட்டிக் கொள்வார்கள். |

குறிப்பு : மூலதனம் நிலையானதாக இருக்கும் பட்சத்தில் கலைப்பு சம்பந்தப்பட்ட அனைத்து சரிக்கட்டுதல்களும் நடப்புக் கணக்கில் செய்யப்படும். முடிவாக நடப்பு கணக்குகளில் உள்ள இருப்புகள் முறையான முதல் கணக்குகளுக்கு மாற்றப்படும்.

**எடுத்துக்காட்டு 26**

கூட்டு வணிகத்தில் ஈடுபட்டுள்ள இராமன், கிருஷ்ணன் மற்றும் கோபாலன் ஆகியோர் கிடைத்த இலாப—நட்டத்தை 5:3:2 என்ற விகிதத்தில் பிரித்துக் கொள்கிறார்கள். 2003 ஆம் ஆண்டு டிசம்பர் 31 ஆம் தேதியன்று கீழ்க்கண்டவாறு அவர்களுடைய இருப்புநிலைக்குறிப்பு இருக்கும்பொழுது கூட்டு வணிகத்தைக் கலைக்க அவர்கள் முடிவு செய்தனர்.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| முதல்கள்: | | நன்மதிப்பு | 2,000 |
| இராமன் 10,000 | | சரக்கிருப்பு | 12,500 |
| கிருஷ்ணன் 5,000 | | கடனாளிகள் | 10,000 |
| கோபாலான் 2,500 | 17,500 | ரொக்கம் | 500 |
| பற்பல கடனீந்தோர் | 7,500 | | |
| | 25,000 | | 25,000 |

கலைப்பின் போது கடனாளிகளிடமிருந்து ரூ.8,000 பெறப்பட்டது. மேலும் சரக்கிருப்பு ரூ.10,000. விற்று பணமாக்கப்பட்டது. கலைப்புச்

செலவு ரூ.500 ஆகியது. 10% யைக் குறைத்து கடனீந்தோர்க்கு பணம் செலுத்தப்பட்டது. பழைய தட்டெழுத்துப் பொறி ஒன்று அந்த நிறுவனத்தில் இருந்தது. அதன் மதிப்பு கணக்கேடுகளில் எழுதப்பட்டு பின் முற்றிலும் நீக்கப்பட்டுள்ளது. இப்போது அதனை ரூ.750க்கு விற்க முடியும் என மதிப்பிடப்பட்டது. மதிப்பிட்ட விலைக்கே கோபாலானால் அது எடுத்துக் கொள்ளப்பட்டது.

நிறுவனத்தின் ஏடுகளை முடித்தலுக்காக குறிப்பேட்டுப் பதிவகளை பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்கவும்.

விடை:

| | | | ப.<br>ரூ. | வ.<br>ரூ. |
|---|---|---|---|---|
| 2003<br>டிச 1 | தீர்வுக் க/கு ப.<br>நன்மதிப்பு க/கு<br>சரக்கிருப்பு க/கு<br>கடனாளிகள் க/கு<br>(சொத்துக்களைத் தீர்வுக்கணக்கிற்கு மாற்றிதற்கான பதிவு) | | 24,500 | <br>2,000<br>12,500<br>10,000 |
| | பற்பல கடனீந்தோர் க/கு ப.<br>தீர்வு க/கு<br>(பொறுப்பினைத் தீர்வுக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 7,500 | <br>7,500 |
| | ரொக்க க/கு ப.<br>தீர்வு க/கு<br>(சொத்துக்களை விற்பனை செய்து பணமாக்கியதற்கான பதிவு சரக்கிருப்பு ரூ.10,000 கடனாளிகள் ரூ.8,000) | | 18,000 | <br>18,000 |
| | தீர்வுக் க/கு ப.<br>ரொக்க க/கு<br>(தீர்த்தலுக்கு ஏற்பட்ட செலவிற்கான பதிவு) | | 500 | <br>500 |
| | தீர்வு க/கு ப.<br>ரொக்க க/கு<br>(பற்பல கடனீந்தோர்க்கு 10 சதவீதம் தள்ளுபடி செய்து தொகை செலுத்தியதற்கான பதிவு) | | 6,750 | <br>6,750 |
| | கோபாலின் முதல் க/கு ப.<br>தீர்வு க/கு<br>(பழைய தட்டெழுத்துப் பொறியை கோபால் மதிக்கப்பட்ட விலையில் எடுத்துக் கொண்டதற்கான பதிவு) | | 750 | <br>750 |
| | இராமனின் முதல் க/கு ப.<br>கிருஷ்ணனின் முதல் க/கு ப.<br>கோபாலின் முதல் க/கு ப. | | 2,750<br>1,650<br>1,100 | |

குறிப்பு

| | | | | |
|---|---|---|---|---|
| | தீர்வு க/கு<br>(தீர்க்கும் போது ஏற்பட்ட நட்டத்தை இலாபப் பகிர்வு விகிதமாகிய 5:3:2 பிரித்துக்கொண்டதற்கான பதிவு) | | | 5,500 |
| | இராமனின் முதல் க/கு ப.<br>கிருஷ்ணனின் முதல் க/கு ப.<br>கோபாலின் முதல் க/கு ப.<br>ரொக்க க/கு<br>(ஒவ்வொருவருக்கும் கொடுக்கப்பட வேண்டிய தொகையைச் செலுத்தியதற்கான பதிவு) | | 7,250<br>3,350<br>650 | 11,250 |

ப. நன்மதிப்பு க/கு வ.

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2003<br>டிச 31 | இருப்பு கீ/கொ | 2,000 | 2003<br>டிச 31 | தீர்வுக் க/கு<br>மாற்றியது (2) | 2,000 |

ப. சரக்கிருப்பு க/கு வ.

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2003<br>டிச 31 | இருப்பு கீ/கொ | 12,500 | 2003<br>டிச 31 | தீர்வுக் க/கு<br>மாற்றியது | 12,500 |

ப. கடனாளிகள் க/கு வ.

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2003<br>டிச 31 | இருப்பு கீ/கொ | 10,000 | 2003<br>டிச 31 | தீர்வுக் க/கு<br>மாற்றியது | 10,000 |

ப. பற்பல கடனீந்தோர் க/கு வ.

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2003<br>டிச 31 | தீர்வுக் க/கு | 7,500 | 2003<br>டிச 31 | | 7,500 |

குறிப்பு

ப. **தீர்வு க/கு** வ.

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2003 டிச 31 | நன்மதிப்பு க/கு | 2,000 | 2003 டிச 31 | பற்பல கடனீந்தோர் க/கு | 7,500 |
| | சரக்கிருப்பு க/கு | 12,500 | | ரொக்க க/கு | 18,000 |
| | கடனாளிகள் க/கு | 10,000 | | கோபாலின் முதல் க/கு (நட்டம் மாற்றப்படுகிறது) | 750 |
| | ரொக்கக் க/கு (செலவுகள்) | 500 | | இராமனின் முதல் க/கு | 2,750 |
| | ரொக்க க/கு | 6,750 | | கிருஷ்ணனின் முதல் க/கு | 1,650 |
| | | | | கோபாலின் முதல் க/கு 5:3:2 | 1,100 |
| | | 31,750 | | | 31,750 |

ப. **இராமனின் முதல் க/கு** வ.

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2003 டிச 31 | தீர்வுக் க/கு | 2,750 | 2003 டிச 31 | இருப்பு கீ/கொ | 10,000 |
| | நட்டம் ரொக்க க/கு | 7,250 | | | |
| | | 10,000 | | | 10,000 |

ப. **கிருஷ்ணனின் முதல் க/கு** வ.

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2003 டிச 31 | தீர்வுக் க/கு | 1,650 | 2003 டிச 31 | இருப்பு கீ/கொ | 5,000 |
| | நட்டம் ரொக்க க/கு | 3,350 | | | |
| | | 5,000 | | | 5,000 |

ப. **கோபாலின் முதல் க/கு** வ.

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2003 டிச 31 | தீர்வுக/கு | 750 | 2003 டிச 31 | இருப்பு கீ/கொ | 2,500 |
| | த.பொறி | 1,100 | | | |
| | தீர்வுக் க/கு நட்டம் ரொக்க க/கு | 650 | | | |
| | | 2,500 | | | 2,500 |

ப. ரொக்க க/கு வ.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003<br>டிச 31 | இருப்பு கீ/கொ<br>தீர்வுக் க/கு | ரூ.<br>2,750<br>7,250 | 2003<br>டிச 31 | தீர்வுக் க/கு<br>தீர்வுக் க/கு<br>இராமனின் முதல் க/கு<br>கிருஷ்ணனின் முதல் க/கு<br>கோபாலின் முதல் க/கு | ரூ.<br>500<br>6,750<br>7,250<br>3,350<br>650 |
| | | 18,500 | | | 18,500 |

எடுத்துக்காட்டு 27

கூட்டாளிகளாகிய ராமு, ரஹீம் மற்றும் ராஜா ஆகியோர் வணிகத்தில் ஏற்படும் இலாப நட்டத்தை முறையே ½ : ¼ : ¼ என்ற விகிதத்தில் பிரித்துக் கொள்கிறார்கள். .... தேதியில் கீழ்க்கண்டவாறு உள்ள தங்கள் வணிகத்தை கலைக்க அவர்கள் முடிவு செய்கின்றனர்.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 2,000 | ரொக்கம் | 2,000 |
| செலுத்த வேண்டிய | | சரக்கிருப்பு | 6,000 |
| உண்டியல்கள் | 1,100 | வியாபாரக் | 3,000 |
| முதல்கள்: | | கடனாளிகள் | |
| ராம் 5,000 | | ராஜாவின் முதல் | 100 |
| ரஹீம் 3,000 | 8,000 | (பற்றாக்குறை) | |
| | 11,100 | | 11,100 |

சரக்கிருப்பு ரூ.5000க்கு விற்கப்பட்டது. ஏட்டுக்கடன் முழுவதும் வசூலிக்கப்பட்டன. வராக்கடனை என எழுதப்பட்ட தொகையான ரூ.300யை அவ்வாடிக்கையாளர் இப்போது கொடுத்தார். இது மேற்கண்ட கடனாளிகள் மதிப்பாகிய ரூ.3000த்தில் அடங்கவில்லை. நிறுவனத்தின் தீர்வுச் செலவு ரூ.300 ஆகியது.

ஏடுகளை முடிப்பதற்காக தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளையும் பேரேட்டுப் பதிவுகளையும் தயாரிக்கவும்.

**விடை:**

குறிப்பேடு

| | | | ப. ரூ. | வ. ரூ. |
|---|---|---|---|---|
| | தீர்வுக் க/கு ப.<br>சரக்கிருப்பு க/கு<br>வியாபாரக் கடனாளிகள் க/கு<br>(சொத்துக்களை தீர்வுக் கணக்கிற்க மாற்றியதற்கான பதிவு) | | 9,000 | <br>6,000<br>3,000 |
| | பற்பல கடனீந்தோர் க/கு ப.<br>செலுத்த வேண்டிய க/கு ப.<br>தீர்வு க/கு<br>(பொறுப்பினைத் தீர்வுக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 2,000<br>1,100 | <br><br>3,100 |
| | ரொக்க க/கு ப.<br>தீர்வு க/கு<br>(சொத்துக்களை விற்றுப் பெற்ற தொகைக்கான பதிவு) | | 8,000 | <br>8,000 |
| | ரொக்க க/கு ப.<br>தீர்வு க/கு<br>(வராக்கடன் என எழுதப்பட்ட ஒரு தொகையை வாடிக்கையாளரிடமிருந்து பெற்றதற்கான பதிவு) | | 300 | <br>300 |
| | தீர்வுக் க/கு ப.<br>ரொக்க க/கு<br>(தீர்வக்கான செலவினங்களை செலுத்தியதற்கான பதிவு) | | 300 | <br>300 |
| | தீர்வு க/கு ப.<br>ரொக்க க/கு<br>(பொறுப்புகளை செலுத்தியதற்கான பதிவு) | | 3,100 | <br>3,100 |
| | ராமுவின் முதல் க/கு ப.<br>ரஹீமின் முதல் க/கு ப.<br>ராஜாவின் முதல் க/கு ப.<br>தீர்வு க/கு<br>(நட்டம் ½ ¼ ¼ என்ற விகிதத்தில் பிரிக்கப்பட்டதற்கான பதிவு) | | 500<br>250<br>250 | <br><br><br>1,000 |
| | ராமுவின் முதல் க/கு ப.<br>ரஹீமின் முதல் க/கு ப.<br>ரொக்க க/கு<br>(ஒவ்வொரு கூட்டாளிக்கும் செலுத்த வேண்டிய தொகையை அவர்களுக்கு செலுத்தியதற்கான பதிவு) | | 4,500<br>2,750 | <br><br>7,250 |
| | ரொக்க க/கு ப.<br>ராஜாவின் முதல் க/கு<br>(முதல் கணக்கில் உள்ள பற்றாக்குறையை நிவர்த்தி செய்வதற்காக ராஜா செலுத்திய தொகைக்கான பதிவு) | | 350 | <br>350 |

ப. தீர்வு க/கு வ.

| | | | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| சரக்கிருப்பு க/கு | 6,000 | பற்பல கடனீந்தோர் க/கு | 2,000 |
| வியாபாரக் கடனாளிகள் | 3,000 | செலுத்த வேண்டிய உண்டியல்கள் | 1,100 |
| ரொக்க க/கு | 300 | ரொக்க க/கு | 8,000 |
| ரொக்க க/கு | 3,100 | ரொக்க க/கு | 300 |
| | | நட்டம் முதல் கணக்குகளுக்கு மாற்றப்பட்டது. | |
| | | ராமுவின் முதல் க/கு | 500 |
| | | ரஹீமின் முதல் க/கு | 250 |
| | | ராஜாவின் முதல் க/கு | 250 |
| | | ( ½ : ¼ : ¼ ) | |
| | 31,750 | | 31,750 |

ப. ராமுவின் முதல் க/கு வ.

| | | | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| தீர்வுக் க/கு (நட்டம்) | 500 | இருப்பு கீ/கொ | 5,000 |
| ரொக்க க/கு | 4,500 | | |
| | 5,000 | | 5,000 |

ப. ரஹீமீன் முதல் க/கு வ.

| | | | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| தீர்வுக் க/கு நட்டம் | 250 | | |
| ரொக்க க/கு | 2,750 | இருப்பு கீ/கொ | 3,000 |
| | 3,000 | | 3,000 |

ப. ராஜாவின் முதல் க/கு வ.

| | | | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| இருப்பு கீ/கொ | 100 | | |
| தீர்வுக் க/கு நட்டம் | 250 | ரொக்க க/கு | 350 |
| | 350 | | 350 |

ப. ரொக்க க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | 2,000 | தீர்வுக் க/கு | 300 |
| தீர்வுக் க/கு | 8,000 | தீர்வுக் க/கு | 3,100 |
| தீர்வுக் க/கு | 300 | ராமுவின் முதல் க/கு | 4,500 |
| ராஜாவின் முதல் க/கு | 350 | ரஹீமின் முதல் க/கு | 2,750 |
| | 10,650 | | 10,650 |

எடுத்துக்காட்டு 28

31.3.2003 அன்று கருண், செந்தில், மணி ஆகிய மூவரும் தங்கள் கூட்டு நிறுவனத்தைக் கலைக்க முடிவு செய்தனர். அந்த தேதியில் அவர்களுடைய இருப்புநிலைக்குறிப்பு கீழ்க்கண்டவாறு இருந்தது.

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 25,000 | பொறி மற்றும் | 50,000 |
| காப்பு நிதி | | 10,000 | இயந்திரம் | 30,000 |
| முதல்கள் | | | கட்டடம் | 20,000 |
| கருண் | 60,000 | | சரக்கு | 25,000 |
| செந்தில் | 30,000 | | பற்பல கடனாளிகள் | 5,000 |
| மணி | 20,000 | 1,10,000 | வங்கி | 15,000 |
| | | | அலுவலக ஊர்தி | |
| | | 1,45,000 | | 1,45,000 |

அவர்களுடைய இலாபப் பகிர்வு விகிதம் முறையே கருண் 4/10 செந்தில் 3/10 மற்றும் மணி 3/10 1.4.2003 அன்று ரூ.5,000 நன்மதிப்புத் தொகை கொடுத்து மணி கூட்டாளியாக சேர்ந்தார். அடுத்த ஆண்டுகளுக்குள் நிறுவனம் கலைக்கப்பட மாட்டாது என்று அப்பொழுது உறுதி அளிக்கப்பட்டது. நடுவர் மதிப்பீட்டின் படி 31.3.2003 அன்று ரூ.10,500க்கான பயன் மணி பெறவில்லை என்று தீர்மானிக்கப்பட்டது. மற்ற இரு கூட்டாளிகளும் அலுவலக ஊர்தியை அன்பளிப்பாக வழங்க முடிவு செய்தனர். 31.3.2003 ஊர்தியின் மதிப்பு ரூ.12,000 எனத் தீர்மானிக்கப்பட்டது.

கட்டிடத்தையும் பொறி மற்றும் இயந்திரத்தின் ஒரு பகுதியையும் ரூ.60,000 என மதிப்பிட்டு செந்தில் எடுத்துக் கொண்டார். எஞ்சிய பொறி மற்றும் இயந்திரம் ரூ.30,000த்திற்கு மணியால் எடுத்துக் கொள்ளப்பட்டது. சரக்கினை செந்திலும் மணியும் சமமாக பிரித்துக் காண்டனர். கடனாளியிடமிருந்து வசூலிக்கப்பட்ட தொகை ரூ.24,000 அதன் பொருட்டு

செந்திலுக்கு 5% கழிவு வழங்கப்பட்டது. கடனீந்தோருக்கு முழுவதும் செலுத்தப்பட்டது.

கூட்டாளிகளின் கணக்குகள் உடனடியாக ரொக்கம் செலுத்தித் தீர்க்கப்பட்டன என்று கொண்டு பேரேட்டுக் கணக்குகள் தயாரிக்கவும்.

**விடை:**
**குறிப்பு:**

1. அலுவலக ஊர்தி அன்பளிப்பாக வழங்கப்படுவதால் செந்தில் மற்றும் மணியின் முதல் கணக்குகளில் அதன் தற்போதைய மதிப்பு 3:3 என்ற விகிதத்தில் பற்றெழுதப்பட வேண்டும்.
2. 1.4.2003 அன்று பெற்ற நன்மதிப்புத் தொகையில் ரூ.10,500ஐ கருணும் செந்திலும் மணிக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டும். 4:3 என்ற விகிதத்தில் பற்று வைக்கப்பட்டு மணியின் முதல் கணக்கில் வரவு வைக்கப்பட வேண்டும்.

**தீர்வு க/கு**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 டிச 31 | பொறி மற்றும் இயந்திரம் க/கு | ரூ. 50,000 | 2003 டிச 31 | பற்பல கடனீந்தோர் | 25,000 |
| | கட்டடம் க/கு | 30,000 | | செந்தில் முதல் க/கு | |
| | சரக்கு க/கு | 20,000 | | அலுவலக ஊர்தி 6,000 | |
| | பற்பல கடனாளிகள் க/கு | 25,000 | | கட்டடம் இயந்திரம் 60,000 | |
| | அலுவலக ஊர்தி க/கு | 15,000 | | சரக்கு 10,000 | 76,000 |
| | பற்பல கடனீந்தோர் க/கு | 25,000 | | மணி முதல் க/கு அலுவலக ஊர்தி 6000 | |
| | செந்தில் முதல் க/கு கழிவு | 1,200 | | பொறி மற்றும் இயந்திரம் 30,000 | |
| | தீர்வு லாபம் முதல் கணக்குகளுக்கு மாற்றப்பட்டது | | | சரக்கு 10,000 | 46,000 |
| | கருணன் 1,920 | | | வங்கி க/கு | 24,000 |
| | செந்தில் 1,440 | | | | |
| | மணி 1,440 | 4,800 | | | |
| | | 1,71,000 | | | 1,71,000 |

குறிப்பு

## முதல் கணக்குகள்

| தேதி | விவரம் | கருண் | செந்தில் | மணி | தேதி | விவரம் | கருண் | செந்தில் | மணி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2003 மார்ச் | மணியின் முதல் க/கு | ரூ. 6,000 | ரூ. 4,500 | ரூ. — | 2003 மார்ச் | இருப்பு கீ/கொ | ரூ. 60,000 | ரூ. 30,000 | ரூ. 20,000 |
| | தீர்வு க/கு | — | 76,000 | 46,000 | | காப்புநிதி | 4,000 | 3,000 | 3,000 |
| | வங்கி க/கு | 59,920 | — | — | | கருண் முதல் க/கு | — | — | 6,000 |
| | | | | | | செந்தில் முதல் க/கு | — | — | 4,500 |
| | | | | | | தீர்வு க/கு கழிவு | — | 1,200 | — |
| | | | | | | தீர்வு லாபம் | 1,920 | 1,440 | 1,440 |
| | | | | | | வங்கி க/கு | — | 44,860 | 11,060 |
| | | 65,920 | 80,500 | 46,000 | | | 65,920 | 80,500 | 46,000 |

## வங்கி க/கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | 5,000 | தீர்வுக் க/கு | 25,000 |
| தீர்வுக் க/கு | 24,000 | கருண் முதல் க/கு | 59,920 |
| செந்தில் முதல் க/கு | 44,860 | | |
| மணி முதல் க/கு | 11,060 | | |
| | 84,920 | | 84,920 |

### 1.7. கூட்டாளிகளின் நொடிப்பு நிலை

நிறுவனத்திற்குச் செலுத்த வேண்டிய தன்னுடைய கடனை ஒரு கூட்டாளியால் செலுத்த முடியாத போது அவர் வக்கற்றவராகி விட்டார் அல்லது நொடிப்ப நிலை எய்து விட்டார் (Insolvency) எனக் கூறலாம். கூட்டாளியின் பொறுப்பு வரையறுக்கப்படாததாகையால் வக்கற்ற கூட்டாளியின் பற்றாக்குறையை வகையுள்ள கூட்டாளியின் சரிகட்ட வேண்டும். இந்த நட்டம் இலாபப் பகிர்வு விகிதத்தில் ஏற்றுக் கொள்ளக் கூடிய மற்றைய நட்டங்களைப் போன்றதா அல்லது வேறுபட்ட முறையில் பகிர வேண்டிய ஒரு தனி வகையான நட்டமா என்று கேள்வி எழுகிறது. ஆனால் கார்னர் எ.முர்ரே என்ற வழக்கில் நீதிபதி ஜாய்சி (Justice Joice) கூறிய முடிவின்படி கூட்டாளியொருவரின் நொடிப்பு நிலையினால் ஏற்பட்ட

நட்டம் சாதாரண நட்டத்திற்கும் ஒரு வேறுபாடு உண்டாக்கப்படுகிறது. இந்த ஆங்கிலேய வழக்கில் சொல்லப்பட்ட முடிவின்படி கூட்டாளியொருவர் வக்கற்றவர் ஆகிவிட்டதால் ஏற்படும் நட்டத்தை இலா பகிர்வு முறையில் அல்லாமல் முதல்களின் விகிதத்தில் வகையுள்ள கூட்டாளிகள் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

**கார்னர் எ.முர்ரே (Garner Vs. Murray)**

இந்த வழக்கின் தீர்ப்பு கீழ்க்கண்ட விதிகளைத் தருகிறது.

அ. தீர்வுக் கணக்கில் ஏற்பட்ட நட்டத்தில் தங்கள் பங்கிற்கு சமமான ரொக்கத்தை வகையுள்ள கூட்டாளிகள் கொண்டு வர வேண்டும்.

ஆ. பிரிவில் உள்ளவாறு ரொக்கம் கொணர்ந்த பின் உள்ள முதல்களின் விகிதத்தில் வக்கற்ற கூட்டாளியின் காரணமாக ஏற்பட்ட நட்டத்தை பிரிக்க வேண்டும்.

இந்த நோக்கத்திற்காக முதல் விகிதத்தை நிர்ணயித்தல் கீழ்க்கண்டவாறு விளக்கப்படுகிறது. நிறுவனத்தில் நிலைத்த அல்லது மாறும் மூலதனத்தை கூட்டாளிகள் வைத்துக் கொள்ளலாம்.

1. முதல்கள் நிலையானவைகளாக இருந்தால் (அனைத்து சரிக்கட்டுதலுக்கும் நடப்பு கணக்குகளில் செய்யப்படும்) நொடிப்பு நிலை நட்டம் முதல்களின் விகிதத்தில் பகிர்ந்து கொள்ளப்படும்.
2. முதல்கள் மாறக்கூடியவைகளாக இருந்தால், நொடிப்பு நிலை நட்டம் சரிக்கட்டுதல்களுக்கும் பின் உள்ள உண்மையான முதல்களின் விகிதத்தில் பகிரப்படும்.

(இங்கு தீர்வுக் கணக்கில் உள்ள இலாபம் அல்லது நட்டத்தைச் சரிக்கட்டுவதற்கு முன் உள்ள மூலதனங்களை நாம் எடுத்துக் கொள்கிறோம்). அதாவது அனைத்து நிதிகளையும் கலைத்த தேதி வரையிலும் உள்ள சேர்ந்துவிட்ட இலாபங்களையும் சரிகட்டிய பின்பும், மூலதனம் மற்றும் எடுப்பின் மீது கலைத்த தேதி வரையிலும் உள்ள அனைத்து வட்டிகளையும் சரிகட்டிய பின்பும் உள்ள உண்மையான மூலதனங்கள்.

கார்னர் எ. முர்ரே வழக்கில் கூறிய தீர்ப்பை பாரபட்சமற்ற முறையில் எப்போதும் உபயோகிக்க முடியவில்லை. எடுத்துக்காட்டாக மேலே விளக்கிக் கூறிய உதாரணத்தில் கோபால் வக்கற்றவராகமல் இருந்தும் அவருடைய முதல் கணக்கில் பற்று இருப்பு இருக்கிறது என வைத்துக் கொண்டால், பாலுவின் நொடிப்பின் காரணமாக ஏற்பட்ட நட்டத்தை ஏற்றுக் கொள்ளுமாறு கோபாலிடம் கூற முடியாது. கார்னர் முர்ரே வழக்கின் முடிவு பின்பற்றப்பட்டு ஒரு வகையுள்ள கூட்டாளியிடம் யாதொரு மூலதனமும் இல்லையென்பதால் வக்கற்ற கூட்டாளியின் பற்றாக்குறையை ஏற்குமாறு அம்மூலதனமற்ற கூட்டாளியை கேட்க முடியாதென்பது ஒரு விசித்திரமான நிலையாகும். ஆகவே கூட்டாளிகளிடையே செய்து கொள்ளப்பட்ட ஒரு ஒப்பந்தத்தின் (கூட்டு வணிகப் பத்திரம்) மூலம் கார்னர் எ. முர்ரே வழக்கின் முடிவை நாம் உபயோகிக்காமல் விட்டுவிடலாம்.[1]

**எடுத்துக்காட்டு 29**

கணேசன், கதிரேசன் மற்றும் காந்தி ஆகியோர் அவர்களுடைய கூட்டு வணிகத்தைக் கலைக்கிறார்கள்.

அத்தேதியில் உள்ள அவர்களுடைய இருப்புநிலைக்குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 4,000 | ரொக்கம் | 500 |
| செலுத்த வேண்டிய | | கடனாளிகள் | 3,800 |
| உண்டியல் | 640 | கட்டிடம் | 7,00 |
| கணேசனின் முதல் | 6,000 | காந்தியின் முதல் | |
| கதிரேசனின் முதல் | 5,000 | அதிகப்பற்று | 4,340 |
| | 15,640 | | 15,640 |

[1] வக்கற்ற கூட்டாளியொருவரின் மூலதனப் பற்றாக்குறையினால் ஏற்படும் நட்டங்களை பிரித்துக் கொள்வதற்கான விகிதம் ஒரு சரத்து கூட்டு வணிக பத்திரத்தில் இருந்தால் அந்த விகிதத்தையே உபயோகப்படுத்த வேண்டும். இவ்வாறு யாதொரு சரத்தும் இல்லாத போது கார்னர் எ.முர்ரே வழக்கிலுள்ள முடிவு பயன்படுத்தப்படுகிறது. இந்த ஆங்கில வழக்கிலுள்ள முடிவை இந்தியா உபயோகப்படுத்தக் கூடாது என சிலர் நினைக்கிறார்கள். எனினும் ஒரு இந்திய நீதிமன்றத்தில் இதற்கு மாறான முடிவு ஏதும் சொல்லப்படாத வரையில் இந்த ஆங்கில வழக்கின் முடிவை நாம் பின்பற்றலாம்.

கூட்டாளியின் இலாபம் மற்றும் நட்டங்களை 5:3:2 என்ற விகிதத்தில் பிரித்துக் கொள்கின்றனர். கடனாளிகள் ரூ.2,000 வசூலானது. கட்டிடம் ரூ.14,000க்கு விற்கப்பட்டது.

காந்தியினால் யாதொன்றும் கொடுக்க முடியவில்லை அவர் வக்கறவராகி விட்டார்.

தீர்வுக் க/கு ரொக்க க/கு மற்றும் கூட்டாளிகளின் முதல் கணக்குகளைத் தயாரிக்கவும் முதல்கள் நிலைத்தவைகளாக இருக்கின்றன என வைத்துக் கொள்ளவும்.

**செய்முறை குறிப்புகள்**

கூட்டாளியொருவர் வக்கற்றவராகும் போது ஏற்படும் நிலைகளைக் கீழ்க்கண்டவாறு விவரிக்கலாம்.

1. ஒரு தீர்வுக் கணக்கினைத் தொடங்கி வழக்கம் போல் பதிவுகளைச் செய்யவும்.
2. சேர்த்து வைக்கப்பட்ட இலாபம் ஏதாவதிருந்தால் அதனை அவர்களுடைய இலாபப் பகிர்வு விகிதத்தில் கூட்டாளிகளிடையே பிரிக்கவும்.
3. தீர்வில் ஏற்பட்ட இலாபம் அல்லது நட்டத்தை கூட்டாளிகளிடையே இலாபப் பகிர்வு விகித அடிப்படையில் அவர்களிடையே பிரிக்கவும்.
4. தீர்வில் ஏற்பட்ட நட்டத்தில் தம் பங்குக்குச் சமமான ரொக்கத்தை வகையுள்ள கூட்டாளிகள் கொண்டு வர வேண்டும்.
5. வக்கற்ற கூட்டாளியின் முதல் கணக்கிலுள்ள பற்று இருப்பை வகையுள்ள கூட்டாளிகள் கீழ்க்கண்ட விகிதத்தில் ஏற்றுக் கொள்வார்கள்.
   a. முதல்கள் நிலையானவைகளாக இருந்தால், நிலைத்த முதல்கள் விகிதத்தில்
   b. முதல்கள் நிலையானவைகளாக இல்லாத போது உண்மையான முதல்களின் விகிதத்தில்

ப. தீர்வு க/கு வ.

| | | | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| கடனாளிகள் க/கு | 3,800 | கடனீந்தோர் க/கு | 4,000 |
| கட்டிடம் க/கு | 7,000 | செலுத்த வேண்டிய உண்டில் க/கு | 640 |
| ரொக்கம் க/கு செ/உ 640 கடனீந்தோர் 4,000 | 4,640 | ரொக்க க/கு | |
| இலாபம் மாற்றப்படுகிறது கணேசன் 2,600 கதிரேசன் 1,560 காந்தி 1,040 | 5,200 | கடனாளிகள் 2,000 கட்டிடம் க/கு 14,000 | 16,000 |
| | 20,640 | | 20,640 |

ப. கணேசனின் முதல் க/கு வ.

| | | | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| காந்தியின் முதல் க/கு | 1,800 | இருப்பு கீ/கொ | 6,000 |
| ரொக்கம் க/கு | 6,800 | தீர்வுக் க/கு | 2,600 |
| | 8,600 | | 8,600 |

ப. கதிரேசனின் முதல் க/கு வ.

| | | | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| காந்தியின் முதல் க/கு | 1,500 | இருப்பு கீ/கொ | 5,000 |
| ரொக்கம் க/கு | 5,060 | தீர்வுக் க/கு | 1,560 |
| | 6,560 | | 6,560 |

ப. காந்தியின் முதல் க/கு வ.

| | | | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| இருப்பு கீ/கொ | 4,340 | தீர்வுக் க/கு | 1,040 |
| | | * கணேசனின் முதல் க/கு | 1,800 |
| | | * கதிரேசனின் முதல் க/கு | 1,500 |
| | 4,340 | | 4,340 |

* காந்தியின் பற்று இருப்ப ரூ.3,300. (ரூ.4,340—ரூ.1,040)யை கணேசனும் கதிரேசனும் கலப்பிற்கு முன்பு உள்ள முதல்கள் விகிதத்தில் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

ஆகவே 6,000 : 5,000 அல்லது 6 : 5 அல்லது $\frac{6}{11} : \frac{5}{11}$

### எடுத்துக்காட்டு 30

மூர்த்தி, இராஜன் மற்றும் நாதன் ஆகியோர் நிறுவனமொன்றில் சம கூட்டாளியாக இருந்தனர். நிறுவனத்தை கலைக்கும் நேரத்தில் அவர்களுடைய இருப்புநிலைக்குறிப்பு கீழ்கண்டவாறு இருந்தது.

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|---|
| கடனீந்தோர் | | 2,500 | ரொக்கம் | 500 |
| முதல் கணக்குகள் | | | பற்பல சொத்துக்கள் | 15,000 |
| மூர்த்தி | 5,500 | | | |
| ராஜன் | 4,500 | | | |
| நாதன் | 1,500 | 11,500 | | |
| இலாப நட்டக் க/கு | | 1,500 | | |
| | | 15,500 | | 15,500 |

பற்பல சொத்துக்கள் ரூ.8,900க்கு விற்றுப் பணமாக்கப்பட்டது. தீர்வுச் செலவுகள் ரூ.560 ஆகிறது. நாதன் வக்கற்றவராகி விட்டார். மூலதனங்கள் நிலையானவைகளல்ல என வைத்துக் கொள்ளவும். குறிப்பேடு பதிவுகளுடன் முக்கியமான பேரேட்டுக் கணக்குளை எழுதி காண்பிக்கவும்.

விடை:

குறிப்பேடு

| | | | ப. ரூ. | வ. ரூ. |
|---|---|---|---|---|
| | தீர்வுக் க/கு ப.<br>பற்பல சொத்துக்கள் க/கு<br>(பற்பல சொத்துக்களை தீர்வுக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 15,000 | 15,000 |
| | கடனீந்தோர் க/கு ப.<br>தீர்வு க/கு<br>(பொறுப்பினைத் தீர்வுக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 2,500 | 2,500 |
| | இலாப நட்டக் க/கு ப.<br>மூர்த்தியின் முதல் க/கு<br>இராஜனின் முதல் க/கு<br>நாதனின் முதல் க/கு | | 1,500 | 500<br>500<br>500 |

குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| ரொக்க க/கு ப.<br>தீர்வு க/கு<br>(சொத்துக்கள் விற்கப்பட்டதற்கான பதிவு) | | 8,900 | 8,900 |
| தீர்வுக் க/கு ப.<br>ரொக்க க/கு<br>(தீர்வுச் செலவுகள் செலுத்தியதற்கான பதிவு) | | 560 | 560 |
| தீர்வு க/கு ப.<br>ரொக்க க/கு<br>(பொறுப்புகளைச் செலுத்தியதற்கான பதிவு) | | 2,500 | 2500 |
| மூர்த்தியின் முதல் க/கு ப.<br>இராஜனின் முதல் க/கு ப.<br>நாதனின் முதல் க/கு ப.<br>தீர்வு க/கு<br>(தீர்வில் ஏற்பட்ட நட்டத்தைச் சரிசமமாக பிரித்துக் கொண்டதற்கான பதிவு) | | 2,220<br>2,220<br>2,220 | <br><br><br>6,660 |
| ரொக்க க/கு ப.<br>மூர்த்தியின் முதல் க/கு<br>இராஜனின் முதல் க/கு<br>(தீர்வில் ஏற்பட்ட நட்டத்தினை பங்கை வகையுள்ள கூட்டாளிகள் கொண்டு வகையுள்ள கூட்டாளிகள் கொண்டு வந்ததற்கான பதிவு) | | 4,440 | <br>2,220<br>2,220 |
| மூர்த்தியின் முதல் க/கு ப.<br>இராஜனின் முதல் க/கு ப.<br>நாதனின் முதல் க/கு<br>(நாதனின் முதல் கணக்கிலுள்ள பற்றாக்குறையை ஏனையக் கூட்டாளிகளின் முதல்கள் விகிதமாகிய 6000:5000 (முதல்கள் சேர்த்து வைக்கப்பட்ட இலாபத்தில் பங்கு) என்னும் விகிதத்தில் ஏற்றுக் கொள்கிறார்கள். | | 120<br>100 | <br><br>220 |

| | | | | |
|---|---|---|---|---|
| | மூர்த்தியின் முதல் க/கு ப. | | 5,880 | |
| | இராஜனின் முதல் க/கு ப. | | 4,900 | |
| | ரொக்க க/கு | | | 10,780 |
| | (ஒவ்வொருவரிடமும் கொடுக்கப்பட வேண்டிய தொகை செலுத்தப்பட்டதற்கான பதிவு) | | | |

ப. தீர்வு க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பற்பல சொத்துக்கள் | 15,000 | கடனீந்தோர் க/கு | 2,500 |
| க/கு | 560 | ரொக்க க/கு (நட்டம் மாற்றப்பட்டது) | 8,900 |
| ரொக்க க/கு | 2,500 | மூர்த்தியின் முதல் க/கு 1/3 2,220 | |
| ரொக்க க/கு | | இராஜனின் முதல் க/கு 1/3 2,220 | |
| | | நாதனின் முதல் க/கு 1/3 2,220 | 6,660 |
| | 18,060 | | 18,060 |

ப. மூர்த்தியின் முதல் க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தீர்வுக் க/கு நட்டம் 1/3 | 2,200 | இருப்பு கீ/கொ | 5,500 |
| நாதனின் முதல் க/கு | 120 | இலாப நட்டக் க/கு | 500 |
| ரொக்கம் க/கு | 5,880 | ரொக்க க/கு | 2,220 |
| | 8,220 | | 8,220 |

ப. இராஜனின் முதல் க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தீர்வு க/கு நட்டம் 1/3 | 2,220 | இருப்பு கீ/கொ | 4,500 |
| நாதனின் முதல் க/கு | 100 | இலாப நட்டக் க/கு | 500 |
| ரொக்கம் க/கு | 4,900 | ரொக்க க/கு | 2,220 |
| | 7,220 | | 7,220 |

குறிப்பு

ப. நாதனின் முதல் க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தீர்வுக் க/கு நட்டம் 1/3 | 2,220 | இருப்பு கீ/கொ | 1,500 |
| | | இலாப நட்டக் க/கு | 500 |
| | | மூர்த்தியின் முதல் க/கு | 120 |
| | | இராஜனின் முதல் க/கு | 100 |
| | 2,220 | | 2,220 |

**எடுத்துக்காட்டு : 31**

R, S மற்றும் T எனும் கூட்டாளிகள் இலாப நட்டத்தை முறையே 3:2:1 விகிதத்தில் பிரித்துக் கொண்டனர். அவர்களின் இருப்புநிலைக் குறிப்பு பின்வருமாறு இருந்தது.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| நடைமுறை பொறுப்புகள் | 35,000 | நிலையற்ற சொத்துக்கள் | 26,000 |
| R கடன் க/கு | 6,000 | நடைமுறை சொத்துக்கள் | 57,000 |
| காப்பு நிதி | 12,000 | (வங்கி இருப்பு ரூ.9,500 | |
| இலாப நட்டக் க/கு | 6,000 | உள்ளிட்ட) | |
| முதல் கணக்கு | | எடுப்பு | |
| R 20,000 | | R 4,000 | |
| S 15,000 | 35,000 | S 1,000 | 5,000 |
| | | T முதல் க/கு | 6,000 |
| | 94,000 | | 94,000 |

நிலைத்த சொத்துக்களில் ஒன்றாகிய இயந்திரத்தை R ரூ.18,000க்கு எடுத்துக் கொண்டார். இதர நிலைத்த சொத்துக்களை விற்றதில் கிடைத்தது ரூ.46,500 கழிவு செய்யப்பட்ட வரவுக்குரிய உண்டியலுக்காக உருவாக்கப்பட்ட பொறுப்பிலிருந்து ரூ.600 கிடைத்தது. தீர்வுச் செலவு ரூ.600. T நொடிப்புநிலை எய்துவிட்டார். அவரது சொத்துக்களிலிருந்து ரூ.1,900 கிடைத்தது.

குறிப்பு

தயாரித்திடுக : அ) தீர்வு க/கு
ஆ) முதல் கணக்குகள் i) முதல்கள் நிலைத்தவை என்றால் ii) முதல்கள் நிலையற்றவை என்றால்

கார்னருக்கு எதிரான முர்ரே வழக்குத் தீர்ப்பை மயன்படுத்துக. நடப்புக் கணக்குகள் தேவையில்லை.

விடை:

ப. தீர்வு க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| நிலைத்த சொத்துக்கள் க/கு | 26,000 | நடைமுறை பொறுப்புகள் க/கு | 35,000 |
| நடைமுறை சொத்துக்கள் க/கு (வங்கி தவிர) | 47,500 | வங்கி க/கு சொத்து விற்றது. | 46,500 |
| வங்கி க/கு | | R முதல் க/கு இயந்திரம் பெற்றது | 18,000 |
| வ/உ பொறுப்பு 600 | | நட்டம் மாற்றப்பட்டது | |
| நடைமுறை பொறுப்பு 35,000 | | 3/4 R 5,100 | |
| தீர்வுச்செலவு 600 | 36,200 | 1/8 S 3,400 | |
| | | 1/6 T 1,700 | 10,200 |
| | 1,09,700 | | 1,09,700 |

அ) முதல்கள் நிலைத்தவை என்றால்

ப. முதல் கணக்குகள் வ.

| | R | S | T | | R | S | T |
|---|---|---|---|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | — | — | 6,000 | இருப்பு கீ/கொ | 20,000 | 15,000 | — |
| எடுப்பு க/கு | 4,000 | 1,000 | — | காப்பு நிதி க/கு | 6,000 | 4,000 | 2,000 |
| தீர்வு க/கு (இயந்திரம்) | 18,000 | — | — | லாப நட்டக் க/கு | 3,000 | 2,000 | 1,000 |
| தீர்வு க/கு (நட்டம்) | 5,100 | 3,400 | 1,700 | வங்கி க/கு (தீர்வு நட்டத் தொகை | 5,100 | 3,400 | — |
| T முதல் க/கு (T நொடிப்பினால் ஏற்பட்ட நட்டம்) | 1,600 | 1,200 | — | வங்கி க/கு (T சொத்துக்களிலிருந்து கிடைத்தது | — | — | 1,900 |
| வங்கி க/கு | 5,400 | 18,800 | — | R முதல் க/கு (4/7) பங்கு | — | — | 1,600 |
| | | | | S முதல் க/கு (3/7 பங்கு) | — | — | 1,200 |
| | 34,100 | 24,400 | 7,700 | | 34,100 | 24,400 | 7,700 |

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பயிற்சி வினாக்கள் :**

**1) சரியா அல்லது தவறா எனக் கூறவும்:**

அ) கூட்டாண்மை கலைப்பு, கூட்டாண்மை நிறுவன கலைப்பிலிருந்து வேறுபட்டதாகும்.

ஆ) சொத்தை நிறுவனத்திலேயே வைத்திருக்கும்போது, மறுமதிப்பீட்டு கணக்கும், விற்க வேண்டிவரும் பொழுது தீர்வு கணக்கும் தயாரிக்கப்படுகின்றது.

இ) தீர்வு கணக்கின் நட்டம் மூலதன விகிதத்தில் பிரிக்கப்படும்.

ஈ) இறுதியில் கணக்கை முடிக்கும் பொழுது, கூட்டாளியின் கடன் கணக்கு, கூட்டாளியின் முதல் கணக்கு போல் கையாளப்படும்.

உ) ஒரு கூட்டாளியின் மனநிலை பாதிக்கப்படும் பொழுது கூட்டாண்மை நிறுவன கலைப்பிற்கு நீதிமன்றம் உத்திரவிடும்.

குறிப்பு :

1. R கடன் ரூ.6000 நேரடியாக அவருக்கு செலுத்தப்பட்டு விட்டதாகக் கருதப்பட்டது.
2. T யின் நொடிப்பு நட்டம் ரூ.2,800 R மற்றும் S—ன் நிலைத்த முதல்கள் விகிதமாகிய ரூ.20,000 : ரூ.15,000 த்தில் அதாவது 4:3 விகிதத்தில் பிரிக்கப்பட்டது.
3. நடப்புக் கணக்குகள் கேட்கப்பட்டால் அவற்றைத் தனியாகக் காண்பித்து பின்னர் முதல் கணக்குகளுக்கு மாற்றப்பட வேண்டும்.

**ஆ) முதல்கள் நிலையற்றவை என்றால்**

ப. முதல் கணக்குகள் வ.

| | ரூ. | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | — | — | 6,000 | இருப்பு கீ/கொ | 20,000 | 15,000 | — |
| எடுப்பு க/கு | 4,000 | 1,000 | — | காப்பு நிதி க/கு | 6,000 | 4,000 | 2,000 |
| தீர்வு க/கு (இயந்திரம்) | 18,000 | — | — | லாப நட்டக் க/கு | 3,000 | 2,000 | 1,000 |
| தீர்வு க/கு (நட்டம்) | 5,100 | 3,400 | 1,700 | வங்கி க/கு (தீர்வு நட்டத் தொகை) | 5,100 | 3,400 | — |
| T முதல் க/கு (T நொடிப்பு நட்டத்திற்கு) | 1,556 | 1,244 | — | வங்கி க/கு (T சொத்துக்களிலிருந்து கிடைத்தது | — | — | 1,900 |
| வங்கி க/கு | 5,444 | 18,756 | — | R முதல் க/கு (5/9) பங்கு | — | — | 1,556 |
| | | | | S முதல் க/கு (4/9 பங்கு) | — | — | 1,200 |
| | 34,100 | 24,400 | 7,700 | | 34,100 | 24,400 | 7,700 |

குறிப்பு :

1. R கடன் க/கு ரூ.6000 நேரடியாக அவருக்கு செலுத்தப்பட்டு விட்டதாகக் கருதப்பட்டது.
2. T யின் நொடிப்பு நட்டம் ரூ.2,800 R மற்றும் S—ன் நிலையற்ற சொத்துக்கள் முதல்கள் விகிதமாகிய ரூ.25,000 : ரூ.20,000. அதாவது 5:4 விகிதத்தில் பிரிக்கப்பட்டது. இவர்களது முதல்களிலிருந்து எடுப்பு கழிக்கப்பட்டு காப்புநிதி மற்றும் லாப நட்ட தொகைகள் சேர்க்கப்பட்டுள்ளன.

**அனைத்துக் கூட்டாளிகளும் நொடிப்பு நிலை அடைதல் (Insolvency of All Partners)**

ஒரு நிறுவனத்தின் பொறுப்புகள் முழுமையாக செலுத்தப்படாத போது அனைத்துக் கூட்டாளிகளும் வக்கற்றவராகிவிட்டனர். இவ்வாறான சூழ்நிலையில் கடனீந்தோருக்கு முழுத்தொகையும் செலுத்த முடியாது. அனைத்துக் கூட்டாளிகளும் வக்கற்றவர்களாகி விட்டால் அதனால் ஏற்படும் நட்டத்தைக் கடனீந்தோர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். ஆகவே கடனீந்தோர்க்கு கணக்கினை தீர்வுக் கணக்கிற்கு மாற்ற வேண்டியது இல்லை. இவ்வாறான முறையில் தீர்வுக் கணக்கு தயாரிக்கப்படும் தீர்வில் ஏற்படும் நட்டம் கூட்டாளிகள் இலாபப் பகிர்வு முறையின் படி பிரிக்கப்படும் அனைத்துக் கூட்டாளிகளின் சொந்த சொத்துக்களிலிருந்து பெறப்பட்ட தொகைகளையும் சேர்த்து உள்ள மொத்த ரொக்கத்தையும் கடனீந்தோர்க்குச் செலுத்துவதற்காக உபயோகப்படுத்த வேண்டும். கடனீந்தோர்க்கு செலுத்த முடியாத கடன் தொகையை பற்றாக்குறை க/கு (Deficiency Account) அல்லது செலுத்தாத தொகை க/கு என்ற கணக்கிற்கு மாற்ற வேண்டும். இதே போல் கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் உள்ள பற்றாக்குறையையும் மேலே சொன்ன பற்றாக்குறைக் கணக்கிற்கு மாற்ற வேண்டும்.

**எடுத்துக்காட்டு 32**

கூட்டாளிகளாகிய சேகரும், சோமுவும் 3:1 என்ற விகிதத்தில் இலாப நட்டத்தைப் பகிர்ந்து கொள்கிறார்கள்.

அவர்கள் நிறுவனத்தைக் கலைக்கும் பொழுது அவர்களுடைய இருப்புநிலைக்குறிப்பு கீழ்க்கண்டவாறு உள்ளது.

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | | 10,000 | ரொக்கம் | 500 |
| மூலதனங்கள் | | | பற்பல சொத்துக்கள் | 18,500 |
| சேகர் | 7,500 | | | |
| சோமு | 1,500 | 9,000 | | |
| | | 19,000 | | 19,000 |

பற்பல சொத்துக்கள் ரூ.6,000க்கு விற்றுப் பணமாக்கப்பட்டது. சோமுவின் சொத்திலிருந்து யாதொரு தொகையும் கிடைக்கவில்லை. ஆனால் சேகர் ரூ.1000 அளிக்கிறார். தீர்வுக்கான செலவுகள் ரூ.300 ஆகிறது. இருவரும் வக்கற்வர்கள் ஆயினர்.

பேரேட்டு கணக்குகளை தயாரித்து நிறுவனத்தின் ஏடுகளை முடிக்கவும்

ப. தீர்வு க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பற்பல சொத்துக்கள் | 18,500 | ரொக்க க/கு | 6,000 |
| ரொக்க க/கு (செலவுகள்) | 300 | நட்டம் மாற்றப்பட்டது | |
| | | சேகரின் முதல் க/கு ¾ | 9,600 |
| | | சோமுவின் முதல் க/கு ¼ | 3,200 |
| | 18,800 | | 18,800 |

ப. ரொக்க க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | 500 | தீர்வுக் க/கு | 300 |
| தீர்வுக்க/கு | 6,000 | பற்பல கடனீந்தோர் க/கு | 7,200 |
| சேகரின் முதல் க/கு (கொடுத்தது) | 1,000 | | |
| | 7,500 | | 7,500 |

ப. பற்பல கடனீந்தோர் க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| ரொக்க க/கு | 7,200 | இருப்பு கீ/கொ | 10,000 |
| பற்றாக்குறை க/கு (செலுத்தப்படாத தொகை) | 2,800 | | |
| | 10,000 | | 10,000 |

ப. சேகரின் முதல் க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தீர்வுக்க/கு | 9,600 | இருப்பு கீ/கொ | 7,500 |
| | | ரொக்க க/கு | 1,000 |
| | | பற்றாக்குறை க/கு மாற்றப்பட்டது | |
| | 7,500 | | 7,500 |

ப. சோமுவின் முதல் க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தீர்வுக் க/கு | 3,200 | இருப்பு கீ/கொ | 1,500 |
| | | பற்றாக்குறை க/கு (மாற்றப்பட்டது) | 1,700 |
| | 3,200 | | 3,200 |

ப. பற்றாக்குறை க/கு வ.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| சேகரின் முதல் க/கு | 1,100 | பற்பல கடனீந்தோர் க/கு | 2,800 |
| சோமுவின் முதல் க/கு | 1,700 | | |
| | 2,800 | | 2,800 |

**பின் இணைப்பு (Appendix)**

## 1.7. கார்னர். முர்ரே (Garner Vs Murray)

கூட்டு வணிகம் சம்பந்தப்பட்ட ஆங்கில் சட்டத்தில் ஒரு பிரபலமான வழக்கு இருக்கிறது. இவ்வழக்கின் தீர்ப்பு 1903 ஆம் ஆண்டு நவம்பரில் நீதிபதி ஜாய்சி (Justice Joyce) என்பவரால் வழங்கப்பட்டது.

இவ்வழக்கின் விவரங்கள் கீழ்வருமாறு இருந்தன. கார்னர். முர்ரே மற்றும் வில்கின்ஸ் ஆகிய மூன்று கூட்டாளிகள் கிடைக்கும் இலாப நட்டங்களை சமமாக பகிர்ந்து கொண்டார்கள் நிறுவனத்தைக் கலைத்த தேதியன்று அவர்களுடைய இருப்புநிலைக்குறிப்பு கீழ்க்கண்டவாறு இருந்தது.

குறிப்பு

2) கோடிட்ட இடத்தை நிரப்புக:

அ) பதியப்படாத பொறுப்பு, கலைப்பின் போது செலுத்தப் படும் பொழுது ......... கணக்கில் பற்று வைக்கப்படும்.

ஆ) பதியப்படாத சொத்து விற்கப்படும் பொழுது .............. கணக்கு பற்று வைக்கப்பட்டு ................ கணக்கு வரவு வைக்கப்படும்.

இ) கலைப்பின் போது, இருப்பு நிலைக் குறிப்பில் இடம் பெற்றிருக்கும் நன்மதிப்பு, முடிவு செய்யப்பட்டு ............. கணக்கின் .......... பக்கம் மாற்றப்படும்.

ஈ) கூட்டாண்மை கலைப்பின் போது, காப்பு நிதி ......... கணக்கிற்கு ......... விகிதத்தில் மாற்றப்படும்.

உ) தீர்வு கணக்கு ஒரு .......... கணக்கு.

குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| முதல் கணக்குகள் | | ரொக்கம் | 1,916 |
| கார்னர் | 2,500 | வில்கின்ஸ் அதிக பற்று | 263 |
| முர்ரே | 314 | வணிக நட்டம் | 635 |
| | 2,814 | | 2,814 |

திரு. வில்கின்ஸ் வக்கற்றவராகிவிட்டபடியால் அவரால் ஏதும் கொடுக்க முடியவில்லை. திரு. ஜாய்சி மேற்கண்ட வழக்கின் முடிவை வெளியிடுவதற்கு முன்பு வியாபார நட்டம் ரூ.635ம் திரு. வில்கின்ஸ் நொடிப்பால் ஏற்பட்ட நட்டம் ரூ.263 ஒரே மாதிரியானவை என எண்ணப்பட்டு வகையுள்ள கூட்டாளிகளான கார்னர் மற்றும் முர்ரே ஆகியோரால் சமமாக ஏற்றுக் கொள்ள வேண்டியிருந்தது.

கார்னர், முர்ரே வழக்கின் முடிவு அறிவிக்கப்பட்ட பின்பு வியாபார நட்டம் ரூ.635யை கூட்டாளிகளுக்கிடையே முதலில் சமமாக பங்கிடுவதால் ஒவ்வொரு கூட்டாளியும் $211\frac{2}{3}$கை ஏற்றார். ரொக்கம் ஏதும் கொணர முடியாது நிலை இருந்ததால் வில்கின்சின் பற்றாக்குறை $263 + 211\frac{2}{3} = 474\frac{2}{3}$ என அதிகமாகியது. இந்தப் பற்றாக்குறையை கார்னரும், முர்ரேயும் 2500:314 என்ற தங்களுடைய முதல்கள் விகிதத்தில் ஏற்றக் கொள்ள வேண்டியுள்ளது. இவ்வாறு இந்த வழக்கில் முதன் முதலாக ஒரு வியாபார நட்டத்திற்கும் கூட்டாளியொருவரின் நொடிப்பு நிலையினால் ஏற்பட்ட நட்டத்திற்கும் இடையே ஒரு வேறுபாடு ஏற்படுத்தப்பட்டது.

## 1.8. படிப்படியாக வழங்குதல்

இப்பாடத்தில் இதுவரையிலும் நாம் படித்த அனைத்து எடுத்துக்காட்டுகளிலும் சொத்துக்களனைத்தும் கலைப்புத் தேதியன்றே விற்றுப் பணமாக்கப்பட்டதெனவும் பொறுப்புகளும் தீர்வுச் செலவுகளும் அதே தேதியில் செலுத்தப்பட்டன எனவும் வைத்துக் கொண்டிருந்தோம்.

இவ்வாறு கருதிக் கொள்வது ஓரளவு கற்பனையாகும். பொதுவாக சொத்துக்கள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் மெதுவாகவே விற்பனை செய்யப்பட்டு அவ்வாறு விற்பனையாகிக் கிடைத்த ரொக்கம் கீழ்க்கண்டவாறு அவ்வப்பொழுது தவணைகளில் (Piecemeal Distribution) செலுத்தப்படும்.

1. கையில் உள்ள ரொக்கமும் சொத்துக்களை விற்றுக் கிடைத்த தொகையும் முதன்முதலாக நிறுவனத்தின் கடனீந்தோர்களுக்குச் செலுத்தப்படும்.
2. கடனீந்தோர்களுக்கு முழுக்கடனையும் செலுத்திய பின் கூட்டாளிகளின் கடன் கணக்குகளுக்கு முழுவதுமாக தொகை செலுத்தப்படும்.
3. இப்பொழுது செலுத்தப்பட வேண்டிய தொகை கூட்டாளிகளுக்கு கொடுக்கப்பட வேண்டிய தொகையே ஆகும்.

கூட்டாளிகளுக்கு தொகைகள் செலுத்தப்படும் பொழுது மேலும் சொத்துக்களை விற்றுப் பணமாக்குவதற்கான சாத்தியக் கூறுகள் உறுதியாக தெரியாமல் இருப்பதால் கூட்டாளியொருவர் அதிகமான தொகை செலுத்தப்படாத முறையில் கண்காணிக்கப்பட வேண்டும். மூலதனங்களின் விகிதத்தினாலோ அல்லது இலாபம் பகிர்வு தொகைகளை செலுத்துவதால் சரியான முறையில் பகிர்வு செய்ய முடியாது.

அதிகமான தொகையினை செலுத்துதலைத் தவிர்ப்பதற்காக கீழ்க்கண்டவாறான இரு அடிப்படைகளின் ஒன்றினை பின்பற்ற வேண்டும்.

1. உபரி மூலதன அடிப்படை (Surplus Capital Basis)
2. உச்ச நட்ட அடிப்படை (Maximum Loss Basis)

### 1. உபரி மூலதன அடிப்படை

கூட்டாளிகளின் மூலதனங்கள் அவர்களுக்கிடையேயுள்ள இலாபப் பகிர்வு விகிதத்துடன் ஒத்திருந்தால் ஒவ்வொரு கூட்டாளிக்கும் மூலதன விகிதப்படி தொகை செலுத்தப்படும். அவ்வாறு இல்லாவிட்டால் கூட்டாளிகளுக்கிடையே பகிர்வதற்கான உள்ள ரொக்கத்தை இலாபப் பகிர்வு

விகிதங்களை காட்டிலும் கூடுதலான மூலதனங்களை வழங்கிய கூட்டாளிகளுக்குச் செலுத்திவிட வேண்டும். அதன் பிறகு ஒவ்வொரு கூட்டாளிக்கும் அவருடைய மூலதன விகிதப்படி செலுத்தப்பட வேண்டும்.

2. உச்ச நட்ட அடிப்படை

ஒவ்வொரு கட்டத்திலும் மேலும் சொத்துக்களை விற்று பணமாக்க வழி இல்லை எனக்கருதிக் கொண்டு ஏற்படும் நட்டத்தை மூலதனங்களின் மொத்தத்திலிருந்து கழிக்க வேண்டும். உதாரணமாக கணேசன், காந்தி மற்றும் கதிரேசன் ஆகியோர் 2:2:1 என்ற விகிதத்தில் இலாப நட்டங்களை பகிர்ந்து கொள்பவர்கள் எனவும், அவர்களுடைய முதல்கள முறையே ரூ.4,000, ரூ.8,000 மற்றும் ரூ.3,000மாக இருக்கின்றன எனவும் வைத்துக் கொள்வோம். பகிர்தலுக்கான ரூ.5,000 இருக்கிறது என வைத்துக் கொள்வோம். இங்கு மேலும் சொத்துக்கள் விற்றுப் பணமாக்கப்படலாம். ஆனால் இந்த முறையில் மேலும் சொத்துக்களை விற்றல் இல்லையென வைத்தக் கொள்ளப்படுகிறது. ஆகவே மொத்த நட்டம் (மூலதனங்களின் மொத்தம் ரூ.15,000 இருக்கின்ற ரொக்கம் ரூ.5,000) ரூ.10,000

இவ்வாறு தவணைகளில் கிடைக்கின்ற மொத்த ரொக்ம் கூட்டாளிகளுக்குச் செலுத்தப்பட வேண்டிய மொத்த மூலதனத்தோடு ஒப்பிடப்படுகின்றது. இங்கு வருங்காலத்தில் சொத்துக்களிலிருந்து பணம் ஏதும் கிடைக்காது என எண்ணப்படுகிறது. மூலதனங்ளின் மொத்தத்திலிருந்து கிடைத்த ரொக்கத்தை கழிப்பதால் நமக்கு மொத்த நட்டம் தெரிகிறது. இந்த நட்டத்தை கூட்டாளிகளின் இலாபப் பகிர்வு விகிதப்படி அவர்களுடைய மூலதன இருப்புகளை காண வேண்டும். இதே செயல்முறை ஒவ்வொரு தவணையிலும் பின்பற்றப்படும். ஆனால் சில சமயங்களில் இவ்வாறு கணக்கிடப்பட்ட இருப்பு ஒரு எதிர்மறை (பற்று) இருப்பாக இருக்கும். எதிர்மறை இருப்பை கலைப்பிற்கு முன்னால் உள்ள மூலதனங்களின் விகிதப்படி பிரித்து ஏனைய கூட்டாளிகளின் கணக்குகளுக்கு மாற்ற வேண்டும். முடிவில் உள்ள அனைத்து

இருப்புகளிலும் கூட்டல் குறிகள் இருக்கும் பொழுது அவ்விருப்புகள் செலுத்தப்பட்டு விடும். மறுபடியும் மொத்தம் செலுத்தப்பட வேண்டிய தொகையிலிருந்து செலுத்திய தொகையை கழித்துக் கிடைக்கும் இருப்பினைக் காண வேண்டும். இப்போது உள்ள மூலதனத்தின் மொத்தத்தில் கிடைத்த தவணை தொகையுடன் ஒப்பிடப்படுகிறது. மேலும் இதே முறை மறுபடியும் செய்யப்படுகிறது.

**எடுத்துக்காட்டு 33**

சேரன், சோழன் மற்றும் பாண்டியன் ஆகியோர் முறையே ½, ¼, ¼ விகிதத்தில் ஒரு நிறுவனத்தின் இலாபங்களைப் பிரிக்கின்றனர். கலைப்பு தேதியன்று அவர்களுடைய இருப்புநிலைக்குறிப்பு கீழ்க்கண்டவாறு உள்ளது.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் | 14,000 | பற்பல சொத்துக்கள் | 39,000 |
| சேரனின் முதல் | 10,000 | கையில் ரொக்கம் | 1,000 |
| சோழனின் முதல் | 10,000 | | |
| பாண்டியனின் முதல் | 6,000 | | |
| | 40,000 | | 40,000 |

சொத்துக்கள் கீழ்க்கண்டவாறு விற்றுப் பணமாக்கப்பட்டது.

1. தீர்வு ரூ. 13,000
2. தீர்வு ரூ. 10,000
3. தீர்வு ரூ. 10,000

பெற்ற தொகைகள் அவ்வப்போது எவ்வாறு பகிர்ந்து கொள்ளப்பட்டன என்பதைக் காண்பிக்கவும்.

**ரொக்க வழங்கும் அறிக்கை**

| | கடனீந்தோர்கள் | சேரன் | சோழன் | பாண்டியன் |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| இருப்புகள் | 14,000 | 10,000 | 10,000 | 6,000 |
| கையில் ரொக்கம் — கடனீந்தோர்க்கு செலுத்தியது | 1,000 | | | |
| செலுத்தப்படாத இருப்புகள் | 13,000 | 10,000 | 10,000 | 6,000 |
| I. தீர்வு ரூ.13,000 கடனீந்தோர்க்கு செலுத்தப்பட்டது. | 13,000 | | | |

குறிப்பு

| | ரூ. | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| செலுத்தப்படாத மூலதனத்தின் இருப்புகள் | 10,000 | 10,000 | 6,000 |
| II. தீர்வு ரூ.10,000 உச்ச நட்டம் (செலுத்தப்படாத மூலதனங்களின் மொத்தம் ரூ.26,000 கழி தீர்வில் கிடைத்த ரூ.10,000) ரூ.16,000 ½ ¼ ¼ விகிதத்தில் பிரிக்க வேண்டும். | 8,000 | 4,000 | 4,000 |
| செலுத்திய ரொக்கம் | 2,000 | 6,000 | 2,000 |
| | ரூ. | ரூ. | ரூ. |
| செலுத்தப்படாத மூலதனத்தின் இருப்புகள் | 8,000 | 4,000 | 4,000 |
| III. தீர்வு ரூ.10,000 மொத்த நட்டம் (செலுத்தப்படாத முதல்களின் மொத்தம் ரூ.16,000 கழி தீர்வில் கிடைத்தது ரூ.10,000) ரூ.6000த்தை ½ ¼ ¼ என்ற விகிதத்தில் பிரிக்கவும்) | 3,000 | 1,500 | 1,500 |
| செலுத்திய ரொக்கம் | 5,000 | 2,500 | 2,500 |
| செலுத்தப்படாத மூலதனத்தின் இருப்புகள் | 3,000 | 1,500 | 1,500 |

**எடுத்துக்காட்டு 34**

பாலன், ரவி மற்றும் மூர்த்தி 3:2:1 என்ற விகிதத்தில் தேதியன்று அவர்களுடைய இருப்புநிலைக்குறிப்பு கீழ்க்கண்டவாறு இருந்தது.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| பாலனின் முதல் | 3,000 | நிலைத்த மற்றும் | |
| ரவியின் முதல் | 5,000 | நடைமுறைச் சொத்துக்கள் | 20,000 |
| மூர்த்தியின் முதல் | 5,000 | | |
| கடனீந்தோர் | 7,000 | | |
| | 20,000 | | 20,000 |

கூட்டு வணிகம் கலைக்கப்பட்டு சொத்துக்கள் கீழ்க்கண்டவாறு விற்றுப் பணமாக்கப்பட்டது. முதல் தீர்வாக ரூ.5,000 இரண்டாம் தீர்வு ரூ.3,000 மூன்றாம் தீர்வு ரூ.9,000 ரொக்கத்தினை படிப்படியாக வழங்குவதற்கான ஒரு அறிக்கையைத் தயாரிக்கவும்.

விடை

## ரொக்கம் வழங்கும் அறிக்கை

| | கடனீந்தோர்கள் | பாலன் | ரவி | மூர்த்தி |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| இருப்புகள் | 7,000 | 3,000 | 5,000 | 5,000 |
| I. தீர்வு ரூ.5,000 செலுத்திய ரொக்கம் | 5,000 | | | |
| செலுத்தப்படாத இருப்புகள் | 2,000 | 3,000 | 5,000 | 5,000 |
| II. தீர்வு ரூ.2,000 செலுத்திய ரொக்கம் | 2,000 | | | |
| | | 3,000 | 5,000 | 5,000 |
| மொத்தம் ரூ.13,000 – கழி II. தீர்வில் கிடைத்த தொகை 1,000 = ரூ.12,000த்தை 3:2:1 என்ற விகிதத்தில் பிரிக்க வேண்டும். | | 6,000 | 4,000 | 2,000 |
| | | —3,000 | 1,000 | 3,000 |
| கழி : பாலனின் எதிர்மறை இருப்பு 5:5 என்னும் முதல்கள் விகிதத்தில் மற்ற கூட்டாளிகளுக்கு மாற்றப்படுகிறது. | | 3,000 | —1,500 | —1,500 |
| | | | —500 | 1,500 |
| கழி: ரவியின் எதிர்மறை இருப்பு மூர்த்திக்கு மாற்றப்பட்டது. | | | 500 | —500 |
| மூர்த்திக்கு செலுத்திய ரொக்கம் | | | | 1,000 |
| செலுத்தப்படாத மூலதனத்தின் இருப்புகள் | | 3,000 | 5,000 | 4,000 |
| III. தீர்வு — ரூ.10,000 மொத்த நட்டம் செலுத்தப்படாத முதனங்களின் மொத்தம் ரூ.12,000 கழி தீர்வில் கிடைத்த மொத்தம் ரூ.9,000 — ரூ.6000த்தை 3:2:1 என்ற விகிதத்தில் பிரிக்கவும்) | | 1,500 | 1,000 | 500 |
| செலுத்திய ரொக்கம் | | 1,500 | 4,000 | 3,500 |
| செலுத்தப்படாத மூலதனத்தின் இருப்புகள் | | 1,500 | 1,000 | 500 |

### எடுத்துக்காட்டு 35

D, E மற்றும் கு ஆகியோரின் முதல்கள் முறையே ரூ.10,000 ரூ.6,000 ரூ.7,000 என்றிருந்தது. அவர்கள் தங்களின் லாபநட்டத்தை 1/2 : 1/3 : 1/6 எனும் விகிதத்தில் பிரித்து வந்தனர். கடனீந்தோருக்கு கொடுத்தது போக கீழ்வரும் தொகைகள் பெறப்பட்டன. நிகரத் தொகைகள் ஒவ்வொரு மாத இறுதியிலும் முறைப்படி பகிர்ந்தளிக்கப்பட வேண்டும். வந்த தொகைகளும் செலவுகளும் வருமாறு:

| | இயந்திரம் | கடனாளிகள் | செலவுகள் |
|---|---|---|---|
| ஏப்ரல் 2006 | 1,000 | 450 | 50 |
| மே 2006 | 580 | 2,100 | 100 |

குறிப்பு

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பயிற்சி வினாக்கள் :**

**சரியா அல்லது தவறா:**

அ) கடனீந்தோருக்கு ரொக்கம் வழங்குவதையே படிப்படியாக வழங்குதல் என்கிறோம்.

ஆ) பிற பொறுப்புகளை எல்லாம் தீர்த்த பிறகு, எஞ்சி இருக்கும் ரொக்கத்தை கூட்டாளிகளுக்கு அவர்களின் மூலதன விகிதத்தில் பிரிக்க வேண்டும்.

இ) இனி அடுத்து எந்த பணமும் தீர்வில் கிடைக்காது என்ற யூகத்தில் உச்ச நட்டம் கணக்கிடப்படுகின்றது.

ஈ) ரொக்கம் வழங்கிய பின் இறுதியில் கூட்டாளிகளுக் கிடையேயான லாபம் அல்லது நட்டம் அவர்களது மூலதன விகிதத்தில் இருக்கும்படி பிரிப்பதே படிப்படியாக பிரித்து வழங்குதல் எனப்படும்.

உ) கூட்டாளிகளின் மூலதனத்தை, அவர்களது லாப நட்ட விகிதத்திற்கு, மாற்றும் வகையில் ரொக்கம் வழங்குவதையே மூலதன விகித முறை அல்லது உபரி மூலதன அடிப்படை முறை என்கிறோம்.

மேற்கொண்டு சொத்துக்கள் எவையும் பணமாகவில்லை. E நொடிப்பு நிலை எய்துவிட்டார். கிடைத்த தொகை எப்படி கூட்டாளிகளுக்கிடையே பகிர்ந்தளிக்கப்படும் என்பதைக் காட்டுக.

விடை

**படிப்படியாக வழங்கல் அறிக்கை**

| | D | E | F |
|---|---|---|---|
| முதல் இருப்புகள் | 10,000 | 6,000 | 7,000 |
| 30.4.2006ல் நிகர வசூல் ரூ.1,400 கழி: உச்ச நட்டம் (மொத்த முதல் ரூ.23,000த்திலிருந்து ரூ.1,400 கழிக்கப்பட்டது) ரூ.21,600 – 1/2 :1/3 : 1/6 | 10,800 | 7,200 | 3,600 |
| | —800 | —1,200 | 3,400 |
| D, E நட்டங்கள் F க்கு மாற்றப்பட்டன | 800 | 1,200 | —2,000 |
| F க்கு ரூ.1,400 தரப்பட்டது. | | | |
| இருப்புகள் | | | |
| 31.5.2006ல் நிகர வசூல் ரூ.2,580 | 10,000 | 6,000 | 5,600 |
| கழி : உச்ச நட்டம் (மொத்த முதல் ரூ.21,600—லிருந்து ரூ.2,580 கழிக்கப்பட்டது) ரூ.19,020 1/2:1/3:1/6 விகிதத்தில் பிரிக்கப்பட்டது) | 9,510 | 6,340 | 3,170 |
| | 490 | —340 | 2,430 |
| Eயின் நட்டம் ரூ.340 கார்னருக்கு எதிரான முர்ரே வழக்குத் தீர்ப்பின்படி விகிதமாகிய 10:7 ல் பிரிக்கப்பட்டது. | —200 | 340 | —140 |
| D மற்றும் Fக்க முறையே ரூ.290 மற்றும் ரூ.2,290 தரப்பட்டது. | 290 | 0 | 2,290 |
| இருப்புகள் (மேற்கொண்டு சொத்துக்கள் இல்லாததால் இவை நட்டங்கள்) | 9,710 | 6,000 | 3,310 |

### 1.9. கூட்டு வணிக நிறுவனங்களை இணைத்தல்

பேரளவு வியாபாரத்தில் (Amaigamation firms) பலன்களைப் பெறும் பொருட்டு நிர்வாகச் செலவினங்களைக் குறைக்கும் பொருட்டும் பல நிறுவனங்கள் இணைக்கப்பட்டு புதியதொரு கூட்டு வாணிபம் ஏற்படுத்தப்படலாம். இதற்காக ஒவ்வொரு நிறுவனத்தின் சொத்துக்கள் மற்றும் பொறுப்புக்களின் மதிப்பு உடன்படிக்கையின்படி மறுபடியும் மதிப்பிடப்படுகின்றன. அவ்வாறு மதிப்பிட்டதன் விளைவாக ஏற்படும் குறைந்த அல்லது அதிகப்படியான தொகையை அந்தந்த நிறுவனத்தின்

கூட்டாளிகளின் முதல் கணக்கில் பற்று அல்லது வரவு வைக்க வேண்டும். சரிக்கட்டுதலுக்குப் பின் கூட்டாளி ஒருவரின் முதல் கணக்கிற்கு தேவையான பணம் இல்லாமல் இருப்பின் அக்கூட்டாளி அத்தொகையினை ரொக்கமாகக் கொண்டு வர வேண்டும். கூட்டாளியின் முதல் தேவைக்கு மேல் அதிகமாக உள்ள தொகையினை அவருக்கு ரொக்கமாக செலுத்தி விடலாம். அல்லது அவரின் நடப்புக் கணக்கிற்கு மாற்றலாம். ஒவ்வொரு நிறுவனத்தின் கணக்குகளும் புதிதாக நிறுவப்பட்ட நிறுவனத்திற்கு மாற்றப்படுவதின் மூலம் அந்நிறுவனங்களின் கணக்குகள் முடிவடையும். புதிய நிறுவனத்தின் சொத்துக்கள் மற்றும் பொறுப்புக்களை எடுத்துக்கொண்டது குறித்து அதன் ஏடுகளின் ஆரம்ப குறிப்பேட்டுப் பதிவுகளைச் (Opening Entries) செய்யும்.

நிறுவனங்களை இணைப்பது பற்றிய நடவடிக்கைகளைப் பதிவு செய்யும் முறையினைக் கீழே காண்போம்.

1. பெரும்பாலும் புதிய நிறுவனத்தின் சில சொத்துக்கள் மற்றும் பொறுப்புகளை ஏடுகளின் மதிப்பிற்கும் மற்றவைகளை மறுமதிப்பீட்டு தொகைக்கும் எடுத்துக்கொள்ளும். இதற்காக ஒவ்வொரு நிறுவனமும் தனித்தனியே மறுமதிப்பீட்டுக் கணக்கு அல்லது, லாப நட்ட சரிக்கட்டுக் கணக்கு துவங்கி அக்கணக்கின் முடிவுகளை அந்தந்த நிறுவனங்களின் கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு மாற்ற வேண்டும்.
2. சில சமயங்களில் ஒவ்வொரு நிறுவனமும் தனித்தனியே அவைகளின் ஏடுகளில் நன்மதிப்பிலுள்ள மதிப்பிட்டு நன்மதிப்பு கணக்கினைத் துவங்கும். இதன் விளைவாக ஒவ்வொரு நிறுவனத்திலுள்ள கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் நன்மதிப்பு வரவு வைக்கப்படும்.
3. சில சொத்துக்களை புதிய நிறுவனம் எடுத்துக் கொள்ளாவிட்டால் அச்சொத்துக்களை விற்று பணமாக்கலாம் அல்லது கூட்டாளிகளில் யாராவது ஒருவர் அவற்றை எடுத்துக் கொள்ளலாம். அதைப் போலவே பொறுப்புகளில் எதையேனும்

புதிய நிறுவனம் கூட்டாளிகளிடம் தாமே செலுத்தலாம். அவ்வாறு கூட்டாளிகளில் யாரேனும் பொறுப்பினை எடுத்துக் கொண்டால் அக்கூட்டாளியின் கணக்கு வரவு வைக்கப்பட்டு பொறுப்புக் கணக்கு பற்று வைக்கப்படும்.

4. கூடி இருக்கக் கூடிய (Accumulated) லாபம் அல்லது நட்டத்தினை கூட்டாளிகளின் முதல் கணக்குகளுக்கு அவர்களின் லாபப்பகிர்வு விகிதத்தில் மாற்ற வேண்டும்.
5. புதிய நிறுவனம் சொத்துக்களை எடுத்துக்கொள்ளும் போது புதிய நிறுவனத்தின் வரவு வைத்து சொத்துக்களின் கணக்குகளைப் பற்று வைக்க வேண்டும்.
6. புதிய நிறுவனம் பொறுப்புகளை எடுத்துக்கொள்ளும் பொழுது புதிய நிறுவனத்தை வரவு வைத்து பொறுப்புகளின் கணக்குகளை வரவு வைக்க வேண்டும்.
7. கூட்டாளிகளின் முதல் கணக்குகளை ஏடுகளில் முடிக்க (முடிவில் நிர்ணயித்த தொகைக்கு) அவற்றை பற்று எழுதி புதிய நிறுவனத்தின் கணக்கை வரவு வைக்க வேண்டும்.

இவ்வாறு பழைய நிறுவனத்தின் ஏடுகளில் கணக்குகள் முடிக்கப்படுகின்றன.

புதிய நிறுவனத்தின் ஏடுகளில் ஆரம்பக் குறிப்பேட்டுப் பதிவுகள் கீழ்க்கண்டவாறு இருக்கும்.

| | |
|---|---|
| மறுமதிப்பீட்டின் அடிப்படையில் மறுமதிப்பீட்டின் அடிப்படையில் பழைய நிறுவனத்தின் ஏடுகளின்படி அல்லது கணக்கில் கொடுக்கப்பட்ட முறைப்படி | சொத்துக்களை பற்று வைக்க வேண்டும். பொறுப்புகளை வரவு வைக்க வேண்டும். கூட்டாளிகளின் முதல் கணக்குகளில் வரவு வைக்க வேண்டும். |

**பின் குறிப்பு:**

5 மற்றும் 6—வது நடவடிக்கைகளுக்கு ஒரு கூட்டுப்பதிவினைக் பதிவு செய்யலாம்.

எடுத்துக்காட்டு: 36

A, B மற்றும் C & D ஆகிய நிறுவனங்களின் இருப்புநிலைக் குறிப்புகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| | A & B ரூ. | C & D ரூ. | | A & B ரூ. | C & D ரூ. |
|---|---|---|---|---|---|
| முதல் — A – C | 15,000 | 12,000 | கட்டடங்கள் | 9,000 | |
| B – D | 15,000 | 6,000 | | | |
| காப்பு | 4,500 | | பொறி | 19,500 | 6,600 |
| கடனீந்தோர்கள் | 9,000 | 13,500 | சரக்கு | 12,000 | 9,000 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | 7,200 | | கடனாளிகள் | 8,700 | 14,100 |
| வங்கி அதிகப் பற்று | 3,000 | | முதலீடுகள் | 4,500 | |
| | | | ரொக்கம் | 90 | 1,800 |
| | 53,790 | 31,500 | | 53,790 | 31,500 |

2003ஆம் வருடம் ஜனவரி 1ம் தேதியிலிருந்து இரு நிறுவனங்களையும் இணைக்க உடன்பாடு செய்யப்பட்டது. கீழ்க்கண்ட நிபந்தனைகளின்படி புதிய நிறுவனமாகிய நான்கு சகோதரர்கள் சொத்துக்களையும் பொறுப்புக்களையும் எடுத்துக் கொண்டது.

1. நிறுவனத்தின் கட்டடங்கள், முதலீடுகள் மற்றும் கடனாளிகள் முறையே ரூ.15, 000 ரூ.3,000 முறையே ரூ.8,000 என்று மறுமதிப்பீடு செய்யப்பட்டது.
2. நிறுவனத்தின் சரக்கு மற்றும் கடனாளிகள் முறையே ரூ.10,500 மற்றும் ரூ.12,100 மதிப்பீடு செய்யப்பட்டது.
3. நிறுவனத்தின் மொத்த மூலதனம் ரூ.60,000 ஆகும். ஒவ்வொரு கூட்டாளியின் மூலதனமும் சமமாக இருத்தல் வேண்டும். மறுமதிப்பீட்டுக் கணக்கினை உபயோகித்து இரு நிறுவனங்களின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளைப் பதிவு செய்து, நான்கு சகோதரர்கள் நிறுவனத்தின் ஆரம்ப குறிப்பேட்டுப் பதிவுகளையும் பதிவு செய்க. மேலும் புதிய நிறுவனத்தின் இருப்புநிலைக் குறிப்பினைத் தயார் செய்க.

குறிப்பு

**விடை:**

## A & B நிறுவனத்தின் ஏடுகளில்

| | | | ப | வ |
|---|---|---|---|---|
| 2002 டிச 31 | | | ரூ. | ரூ. |
| | காப்பு க/கு ப | | 4,500 | |
| | A யின் முதல் க/கு | | | 2,250 |
| | B யின் முதல் க/கு | | | 2,250 |
| | (கூடியிருக்கக் கூடிய காப்புத் தொகை A மற்றும் B ஆகிய இருவருடைய முதல் கணக்குகளிலும் மாற்றப்பட்டதற்காக) | | | |
| | கட்டடங்கள் க/கு ப | | 6,600 | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு | | | 6,000 |
| | (கட்டடத்தின் மதிப்பு உயர்வை கணக்கிற்கு கொண்டு வந்ததற்காக) | | | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு ப | | 1,600 | |
| | முதலீகள் க/கு | | | 1,500 |
| | கடனாளிகள் க/கு | | | 100 |
| | (சொத்துக்களின் மதிப்பு குறைக்கப்பட்டதை கணக்கிற்கு கொண்டு வந்ததற்காக) | | | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு ப | | 4,400 | |
| | A யின் முதல் க/கு | | | 2,200 |
| | B யின் முதல் க/கு | | | 2,200 |
| | (மறுமதிப்பீட்டில் ஏற்பட்ட லாபத்தினை கூட்டாளிகள் சமமாக பகிர்ந்து கொண்டதற்காக) | | | |
| | நான்கு சகோதரர்கள் க/கு ப | | 38,900 | |
| | கடனீந்தோர் க/கு ப | | 9,000 | |
| | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப | | 7,290 | |
| | வங்கி அதிகப்பற்று க/கு ப | | 3,000 | |
| | கட்டடங்கள் க/கு | | | 15,000 |
| | பொறி க/கு | | | 19,500 |
| | சரக்கு க/கு | | | 12,000 |
| | கடனாளிகள் க/கு | | | 8,600 |
| | முதலீகள் க/கு | | | 3,000 |
| | ரொக்க க/கு | | | 90 |
| | (இணைக்கப்பட்ட நான்கு சகோதரர்கள் சொத்துக்களையும் பொறுப்புக்களையும் எடுத்துக் கொண்டதற்காக) | | | |
| | A யின் முதல் க/கு ப | | 19,450 | |
| | B யின் முதல் க/கு ப | | 19,450 | |
| | நான்கு சகோதரர்கள் க/கு | | | 38,900 |
| | (A,B ஆகிய இருவரின் முதல் கணக்கும் புதிய நான்கு சகோதரர்கள் நிறுவனத்தின் மாற்றப்பட்டதற்காக) | | | |

## C & D நிறுவனத்தின் ஏடுகளில்

| | | | ப | வ |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 2002 டிச 31 | சரக்கு க/கு ப | | 1,500 | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு | | | 1,500 |
| | (சொத்தின் மதிப்பு உயர்வை கணக்கிற்கு கொண்டு வந்ததற்காக) | | | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு ப | | 2,000 | |
| | கடனாளிகள் க/கு | | | 2,000 |
| | (சொத்து மதிப்புக் குறைக்கப்பட்டதை கணக்கிற்கு கொண்டு வந்ததற்காக) | | | |
| | C யின் முதல் க/கு ப | | 250 | |
| | D யின் முதல் க/கு ப | | 250 | |
| | மறுமதிப்பீட்டுக் க/கு | | | 500 |
| | (மறுமதிப்பீட்டில் ஏற்பட்ட நட்டத்தினை கூட்டாளிகள் பகிர்ந்து கொண்டதற்காக) | | | |

| | | | | |
|---|---|---|---|---|
| | நான்கு சகோதரர்கள் க/கு ப | | 17,500 | |
| | கடனீந்தோர்கள் க/கு ப | | 13,500 | |
| | பொறி க/கு | | | 6,600 |
| | சரக்கு க/கு | | | 10,500 |
| | கடனாளிகள் க/கு | | | 12,100 |
| | ரொக்க க/கு | | | 1,800 |
| | (பற்பல சொத்துக்களையும் பொறுப்புக்களையும் நான்கு சகோதரர்கள் நிறுவனம் எடுத்துக் கொண்டதற்காக ரூ.31,000—ரூ.13,500—ரூ.17,500) | | | |
| | C யின் முதல் க/கு ப | | 11,750 | |
| | D யின் முதல் க/கு ப | | 5,750 | |
| | நான்கு சகோதரர்கள் க/கு | | | 17,500 |
| | (C,D ஆகிய இருவரின் முதல் கணக்குகளை புதிய நான்கு சகோதரர்கள் நிறுவனத்திற்கு மாற்றியதற்காக) | | | |

**நான்கு சகோதரர்கள் நிறுவனத்தின் ஏடுகளில்**

| | | | ப | வ |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 2003 ஜன 1 | ரொக்க க/கு ப | | 90 | |
| | முதலீடுகள் க/கு ப | | 3,000 | |
| | கடனாளிகள் க/கு ப | | 8,600 | |
| | சரக்கு க/கு ப | | 12,000 | |
| | பொறி க/கு ப | | 19,500 | |
| | | | 15,000 | |
| | கட்டடங்கள் க/கு | | | |
| | வங்கி அதிகப்பற்று க/கு | | | 3,000 |
| | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | | | 7,200 |
| | கடனீந்தோர் க/கு | | | 9,000 |
| | A யின் முதல் க/கு | | | 19,450 |
| | B யின் முதல் க/கு | | | 19,450 |
| | (A&B நிறுவனத்திலிருந்து பற்பல சொத்துக்களும் பொறுப்புகளும் எடுத்துக் கொள்ளப்பட்டதற்காக) | | | |

அனைத்துச் சொத்துக்களும் பற்று இருப்பைக் காண்பிக்கும் என்பது உங்களுக்குத் தெரிந்தது. இக்கணக்குகள் முடிக்க அவற்றை வரவு வைக்க வேண்டும். அது போலவே அனைத்துப் பொறுப்புகளும் வரவு இருப்பு ஆகும். இக்கணக்குகளை முடிக்க அவற்றை பற்று வைக்க வேண்டும். இவ்விரு கூட்டுத் தொகைக்கும் உள்ள வேறுபாடு இணைக்கப்பட்ட நிறுவனத்தின் கணக்கில் பற்று வைக்க வேண்டும். (58,190—19,290 = 38,900)

முதல் கணக்குகள் வரவு இருப்பைக் காட்டும். இக்கணக்கினை முடிக்க அவற்றை பற்று வைக்க வேண்டும். இணைக்கப்பட்ட நிறுவனத்தை அக்கூட்டுத் தொகைக்குச் சமமாக வரவு வைக்க வேண்டும்.

குறிப்பு

| | | | | |
|---|---|---|---|---|
| 2003 ஜன 1 | ரொக்க க/கு ப<br>கடனாளிகள் க/கு ப<br>சரக்கு க/கு ப<br>பொறி க/கு ப<br>கடனீந்தோர் க/கு<br>C யின் முதல் க/கு<br>D யின் முதல் க/கு<br>(C, D நிறுவனத்திலிருந்து பற்பல சொத்துக்களையும் பொறுப்புகளையும் எடுத்துக் கொண்டதற்காக) | | 1,800<br>12,100<br>10,500<br>6,600 | <br><br><br><br>13,500<br>11,750<br>5,750 |
| | A யின் முதல் க/கு ப<br>B யின் முதல் க/கு ப<br>A யின் நடப்புக் க/கு<br>B யின் நடப்புக் க/கு<br>(முதல் கணக்கிற்கு அதிகமாக உள்ள தொகையினை கூட்டாளிகளின் நடப்புக் கணக்கிற்கு மாற்றியதற்காக)<br>A – 60,000 x ¼ = 15,000 (19,450)<br>A – 60,000 x ¼ = 15,000 (19,450) | | 4,450<br>4,450 | <br><br>4,450<br>4,450 |
| | ரொக்க க/கு ப<br>C யின் முதல் க/கு<br>D யின் முதல் க/கு<br>(முதல் கணக்கிற்கு அதிகமாக உள்ள தொகையினை கூட்டாளிகளின் நடப்புக் கணக்கிற்கு மாற்றியதற்காக)<br>C – 60,000 x ¼ = 15,000 (11,750)<br>D – 60,000 x ¼ = 15,000 (5,750) | | 12,500 | <br>3,200<br>9,250 |

**நான்கு சகோதரர்களின் இருப்புநிலைக் குறிப்பு**

**2003 ஆம் வருடம் ஜனவரி 1ஆம் தேதியில் உள்ளபடி**

| பொறுப்புக்கள் | | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|---|
| கடனீந்தோர் | | 22,500 | ரொக்கம் | 14,300 |
| செலுத்தவேண்டிய உண்டியல் | | 7,290 | முதலீடுகள் | 3,000 |
| வங்கி அதிகப்பற்று | | 3,000 | கடனாளிகள் | 20,700 |
| முதல் கணக்குகள் | | | சரக்கு | 22,500 |
| A | 15,000 | | பொறி | 26,100 |
| B | 15,000 | | சட்டங்கள் | 15,000 |
| C | 15,000 | | | |
| D | 15,000 | 60,000 | | |
| நடப்புக் கணக்குகள் | | | | |
| A | 4,450 | | | |
| B | 4,450 | 8,900 | | |
| | | 1,01,690 | | 1,01,690 |

## 1.10. கூட்டு நிறுவனத்தை கம்பெனியாக மாற்றுதல் அல்லது கம்பெனிக்கு விற்றல் (Conversion or Sale to a Company)

கூட்டு வாணிபத்தை வரையறுக்கப்பட்ட கம்பெனியாக மாற்றலாம். சில சமயங்களில் இந்நிறுவனத்தை நடைமுறையில் இருக்கும் வரையறுக்கப்பட்ட கம்பெனிக்கு விற்பனை செய்யலாம். அல்லது

நடைமுறையில் இருக்கும் கூட்டு வாணிபத்தை எடுத்துக் கொள்ள புதிய வரையறுக்கப்பட்ட கம்பெனியை நிறுவலாம். இவ்வாறான ஏற்பாடுகள் வரையறுக்கப்பட்ட பொறுப்பின் (Limited Liability) நன்மைகளை பெறுவதற்காக செய்யப்படுபவையாகும். கூட்டு வாணிபத்தில் கூட்டாளிகளின் பொறுப்பு வரையறுக்கப்படாதது (Unlimited Liability) ஆகும். எனவே, கடனீந்தோர் தேவைப்படுமானால் அக்கூட்டாளிகளின் தனிப்பட்ட சொத்துக்களின் மீது வழக்குத் தொடரலாம். வரையறுக்கப்பட்ட கம்பெனியைப் பொறுத்த வரையில் உறுப்பினர்களின் பொறுப்பு அவர்கள் எடுத்துக் கொண்ட பங்கு மூலதன அளவிற்கு மட்டுமேயாகும்.

இவ்வாறு கூட்டு நிறுவனம் மாற்றப்படும் பொழுது கூட்டு நிறுவனம் கலைக்கப்பட்டு அவற்றின் பொறுப்புக்களும் சொத்துக்களும் புதிதாக வரையறுக்கப்பட்ட கம்பெனிக்கு மாற்றப்படும். இதற்காக கூட்டு நிறுவனத்தின் ஏடுகளில் கணக்குகள் முடிக்கப்பட்டு கம்பெனியின் புதிய ஏடுகளில் துவங்கப்படும்.

**கணக்குகளை பதிவு செய்யும் முறை**

கூட்டு நிறுவனத்தை கம்பெனியாக மாற்றும்பொழுது ஒன்று கூட்டு நிறுவனத்தின் ஏடுகளில் கணக்குகளை முடிக்க வேண்டும். மற்றொன்று வரையறுக்கப்பட்ட கம்பெனியின் ஆரம்பக் குறிப்பேட்டுப் பதிவுகளைச் செய்ய வேண்டும்.

கூட்டு நிறுவனத்தின் கணக்குகளை எவ்வாறு முடிப்பது என்று உங்களுக்குத் தெரியும். நிறுவனத்தைக் கலைக்கும்பொழுது எவ்வாறு கணக்கினைப் பதிவு செய்தோமோ அதைப் போலவே இங்கும் கணக்குகளைப் பதிவு செய்ய வேண்டும். எனவே நிறுவனத்தை கம்பெனிக்கு விற்கும் பொழுது நிறுவனத்தின் கணக்கேடுகளை முடிப்பதில் புதிதாக கணக்குகள் ஏதும் துவங்கப்பட வேண்டியது இல்லை. இங்கும் தீர்வுக் கணக்கினைத் (Realisation Account) துவங்குதல் வேண்டும்.

**வழிமுறைகள்:**

1. நிறுவனத்தின் அனைத்துப் பொறுப்புக்களையும் (ஏட்டு மதிப்பில்) தீர்வுக் கணக்கிற்கு மாற்ற வேண்டும். இதற்காக தீர்வுக் கணக்கினைப் பற்று வைத்து அந்தந்த சொத்து கணக்குகளை வரவு வைக்க வேண்டும்
2. நிறுவனத்தின் அனைத்துப் பொறுப்புக்களையும் (ஏட்டு மதிப்பிற்கு) தீர்வுக் கணக்கிற்கு மாற்ற வேண்டும். இதற்காக தீர்வுக் கணக்கினை வரவு வைத்து அந்தந்த பொறுப்புக்களையும் பற்று எழுத வேண்டும். ஒரு வரையறுக்கப்பட்ட கம்பெனி நடைமுறையில் இருக்கும் நிறுவனத்தை எடுத்துக்கொள்ளும் பொழுது அதற்கான கொள்முதல் விலையினைச் செலுத்தும். இதனை கொள்முதல் விலை என்று அழைக்கலாம். பொதுவாக இக்கொள்முதல் விலை முழுவதும் ரொக்கமாகக் கொடுக்கப்பதில்லை. ஒரு பகுதியை முழுவதும் ரொக்கமாகவும் மற்றொரு பகுதியை பங்குகள் மற்றும் கடன் பத்திரங்கள் மூலமாகவும் கொடுக்கலாம்.
3. கொள்முதல் விலைக்கு வாங்கும் கம்பெனியின் கணக்கு பற்று வைக்கப்பட்டு தீர்வுக் கணக்கு வரவு வைக்கப்படும்.
4. கம்பெனியிடமிருந்து பெற்ற ரொக்கம் பங்குகளுக்காக பங்குக் கணக்கு மற்றும் ரொக்கக் கணக்கு பற்று வைக்கப்பட்டு வாங்கிய கம்பெனியின் கணக்கு வரவு வைக்கப்படும்.
5. வாங்கும் கம்பெனி ரொக்கத்தை எடுத்துக் கொள்ளவில்லை என்பதைக் குறிப்பிட்டிருந்தால் ரொக்கக் கணக்கினைத் தீர்வுக் கணக்கிற்கு மாற்றக் கூடாது. ஆனால், மற்ற சொத்துக்களை கம்பெனி வாங்கவில்லை என்றாலும் அவற்றைத் தீர்வுக் கணக்கிற்கு மாற்ற வேண்டும். ஏனென்றால் அச்சொத்துக்களை தீர்வு செய்ய (விற்று பணமாக்க) வேண்டும்.
6. கொள்முதல் விலை முழுத் தொகையாக கொடுக்கப்பட்டிருக்கலாம். சில சமயங்களில் கம்பெனி எடுத்துக் கொள்ளும் சொத்துக்களின்

பொறுப்புக்களின் பொறுப்புக்களில் கழித்து கொள்முதல் விலையைக் கணக்கிடலாம். அல்லது கணக்கில் கூறியபடி கண்டுபிடிக்கலாம்.

குறிப்பு: (3) மற்றும் (4)வது நடவடிக்கைகளை கூட்டுப்பதிவின் மூலம் பதிவு செய்யலாம்.

7. கம்பெனி எடுத்துக் கொள்ளாத சொத்தினை கூட்டு நிறுவனமே (Market) விற்று விடலாம். இதற்காக ரொக்கமாக கணக்கினைப் பற்று வைத்து தீர்வுக் கணக்கை (விற்கப்பட்ட தொகைக்கு) வரவு வைக்க வேண்டும். இதைப் போலவே சொத்து ஒன்றை கூட்டாளி ஒருவரே எடுத்துக்கொண்டால் உடன்பாட்டில் செய்யப்பட்ட மதிப்பில் அவரின் முதல் கணக்கினைப் பற்று வைத்து தீர்வுக் கணக்கினை வரவு வைக்க வேண்டும்.

8. பொறுப்புகளில் எதையேனும் கம்பெனி எடுத்துக் கொள்ளாத பொழுது நிறுவனமே அப்பொறுப்புக்களுக்குப் பணத்தினைக் கொடுத்து தீர்க்க வேண்டும். அதற்காக தீர்வுக் கணக்கினைப் பற்று எழுதி ரொக்கக் கணக்கினை வரவு வைக்க வேண்டும்.

9. நிறுவனம் செலுத்திய செலவுகளை (Realisation expenses) தீர்வுக் கணக்கில் பற்று வைத்து ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். தீர்வுச் செலவுகளை வாங்கும் கம்பெனி எடுத்துக் கொண்டால் நிறுவனத்தின் ஏடுகளில் இச்செலவினை பதியக் கூடாது.

10. தீர்வுக் கணக்கின் முடிவில் லாபம் அல்லது நட்டத்தினை கூட்டாளிகளின் முதல் கணக்கிற்கு அவர்களின் லாபப்பகிர்வு விகிதத்தில் மாற்ற வேண்டும். கூடியிருக்கக்கூடிய (accumulated) லாபம் அல்லது காப்பு போன்றவற்றையும் கூட்டாளிகளின் முதல் கணக்கிற்கு அவர்களின் லாபப் பகிர்வு விகிதத்தில் மாற்ற வேண்டும்.

11. கம்பெனியில் இருந்து பெறப்பட்ட பங்குகளையும் கடன் பத்திரங்களையும் கூட்டு வணிக உடன்படிக்கையின்படி கூட்டாளிகளுக்குப் பிரித்துக் கொடுக்க வேண்டும். உடன்படிக்கை

ஏதும் இல்லாவிட்டால் அப்பங்குகளும் கடன் பத்திரங்களும் கூட்டாளிகளின் சரிகட்டப்பட்ட முதல் கணக்குகளின் இருப்பு விகிதத்தில் பிரித்துக்கொடுக்கப்படும். அதாவது கூடியிருக்கக்கூடிய காப்பு அல்லது லாபம் தீர்வுக் கணக்கில் கிடைத்த லாபம் அல்லது நட்டம் இதற்கான கூட்டாளிகளின் முதல் கணக்குகளைப் பற்று வைத்து பங்குகள் அல்லது கடன் பத்திரங்கள் கணக்கினை வரவு வைக்க வேண்டும்.

12. முடிவாக ரொக்கத்தைக் கொண்டு கணக்குத் தீர்க்கப்பட வேண்டும். இதற்காக முதல் கணக்கினைப் பற்று வைத்து ரொக்கக் கணக்கினை வரவு வைக்க வேண்டும்.

பங்கு மற்றும் கடன் பத்திரத்தை பகுதியாக (Fraction of Share or Debenture) யாருக்கும் கொடுக்க முடியாது. ஆகவே முழு எண்ணிக்கையை மட்டும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

**எடுத்துக்காட்டு: 37**

ராமன் மற்றும் சாமி ஆகிய இரு கூட்டாளிகளும் தங்களது லாபம் மற்றும் நட்டத்தினை முறையே 2/3 பங்கு மற்றும் 1/3 என்ற விகிதத்தில் பிரித்துக் கொண்டனர். 2003 ஆம் வருடம் டிசம்பர் 31ஆம் தேதியிலுள்ள அவர்களின் இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 2,100 | | கையில் ரொக்கம் | 300 |
| கழிக்க: கடனீந்தோர் மீது தள்ளுபடிக்காப்பு | 100 | 2,000 | பற்பல கடனாளிகள் 3,000<br>கழிக்க: தள்ளுபடி காப்பு 150 | 2,850 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | | 615 | வியாபாரச் சரக்கிருப்பு | 2,465 |
| வங்கி அதிகப்பற்று | | 2,000 | இயந்திரம் | 11,000 |
| முதல் கணக்குகள் | | | | |
| ராமன் | 8,000 | 12,000 | | |
| சாமி | 4,000 | | | |
| | | 16,615 | | 16,615 |

இந்நிறுவனத்தை செண்பகம் கம்பெனி லிமிடெட்டிற்கு விற்க முடிவு செய்யப்பட்டது. இந்நிறுவனத்திற்கான கொள்முதல் விலையாக செண்பகம் கம்பெனி லிமிடெட் பங்கு ஒன்று ரூ.1 என முழுவதும் செலுத்திய பங்குகள் 13,000 ஐ ஒதுக்கியது மற்றும் ரூ.500 ரொக்கமாகக் கொடுத்தது. அக்கம்பெனி அனைத்துப் பொறுப்புக்களையும் ரொக்கம் மற்ற அனைத்துச் சொத்துக்களையும் எடுத்துக் கொண்டது.

குறிப்பேட்டுப் பதிவுகளைச் செய்து நிறுவனத்தின் ஏடுகளில் கணக்குகளை முடித்து ஒவ்வொரு கூட்டாளிகளுக்கும், ஒதுக்கப்பட்ட பங்குகளையும் செலுத்தப்பட்ட தொகையினையும் காண்க.

**விடை:**

**ராமன், சாமி ஆகியோரின் ஏடுகளில் குறிப்பேடு**

| | | | ப. | வ. |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 2003 டிச 31 | தீர்வு க/கு ப<br>பற்பல கடனாளிகள் க/கு<br>வியாபாரச் சரக்கு க/கு<br>இயந்திர க/கு<br>கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்பு க/கு<br>(ரொக்கம் நீங்கலாக மற்ற கணக்குகள் தீர்வு கணக்கிற்கு மாற்றப்பட்டதற்காக) | | 16,565 | <br>3,000<br>2,465<br>11,000<br>100 |
| | பற்பல கடனீந்தோர் க/கு ப<br>செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப<br>வங்கி அதிகப்பற்று க/கு ப<br>கடனாளிகள் மீது தள்ளுபடி காப்பு க/கு ப<br>தீர்வுக் க/கு<br>(பொறுப்புக்கள் தீர்வு கணக்கிற்கு மாற்றப்பட்டதற்காக) | | 2,100<br>615<br>2,000<br>150 | <br><br><br><br>4,865 |
| | செண்பகம் கம்பெனி லிமிடெட் க/கு ப<br>தீர்வுக் க/கு<br>(செண்பகம் கம்பெனி லிமிடெட்டிடமிருந்து கொள்முதல் விலை பெறுவதற்காக) | | 13,500 | <br>13,500 |
| | பங்குகள் க/கு ப<br>ரொக்கக் க/கு ப<br>செண்பகம் கம்பெனி லிமிடெட் க/கு<br>(முழுவதும் செலுத்தப்பட்ட 13,500 பங்குகளையும் மற்றும் 5,000 லிமிடெட்டிடமிருந்து பெறப்பட்டதற்காக) | | 13,000<br>500 | <br><br>13,500 |
| | தீர்வுக் க/கு ப<br>ராமன் முதல் க/கு<br>சாமி முதல் க/கு<br>(கூட்டாளிகளின் முதல் கணக்கிற்கு 2/3:1/3 என்ற விகிதத்தில் தீர்வுக் கணக்கின் லாபம் மாற்றப்பட்டதற்காக) | | 1,800 | <br>1,200<br>600 |

குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| ராமன் முதல் க/கு ப<br>சாமி முதல் க/கு ப<br>பங்குகள் க/கு<br>(சரிக்கட்டிய பின்பு உள்ள கூட்டாளிகளின் முதல் கணக்குகளின் இருப்புகள் விகிதத்தில் ரூ.13,000 பங்குகள் பிரிக்கப்பட்டதற்காக)<br>$13,000 \times \frac{92}{138} = 8,667$<br>$13,000 \times \frac{46}{138} = 4,3333$ | | 8,667<br>4,333 | 13,000 |
| ராமன் முதல் க/கு ப<br>சாமி முதல் க/கு ப<br>ரொக்கக் க/கு<br>(ஒவ்வொரு கூட்டாளிக்கும் கடைசியாக செலுத்த வேண்டிய தொகையை ரொக்கமாக செலுத்தியதற்காக) | | 533<br>267 | 800 |

**தீர்வுக் க/கு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனாளிகள் க/கு | 3,000 | பற்பல கடனீந்தோர் க/கு | 2,100 |
| வியாபாரச் சரக்கு | 2,465 | செலுத்த வேண்டிய | 615 |
| இயந்திரக் க/கு | 11,000 | உண்டியல் க/கு | 2,000 |
| கடனீந்தோர் மீது தள்ளுபடி | 100 | வங்கி அதிகப்பற்று க/கு | 150 |
| காப்பு க/கு | 1,200 | கடனாளிகள் மீது | 13,500 |
| ராமனின் முதல் க/கு | 600 | தள்ளுபடி காப்பு க/கு | |
| சாமியின் முதல் க/கு | | செண்பகம் கம்பெனி | |
| | | லிமிடெட் க/கு | |
| | 18,365 | | 18,365 |

**செண்பகம் கம்பெனி லிமிடெட் க/கு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தீர்வுக் க/கு | 13,500 | பங்குகள் க/கு | 13,00 |
| | | ரொக்கக் க/கு | 500 |
| | 13,500 | | 13,500 |

### ராமன் முதல் க/கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பங்குகள் க/கு | 8,667 | இருப்பு கீ/கொ | 8,000 |
| $13,000 \times \frac{9,200}{13,800}$ | | தீர்வுக் க/கு (1/2 பங்கு லாபம்) | 600 |
| ரொக்கக் க/கு | 533 | | |
| | 8,600 | | 8,600 |

### சாமி முதல் க/கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பங்குகள் க/கு | 4,333 | இருப்பு கீ/கொ | 4,000 |
| $13,000 \times \frac{4,600}{13,800}$ | | தீர்வுக் க/கு (1/2 பங்கு லாபம்) | 600 |
| ரொக்கக் க/கு | 267 | | |
| | 4,600 | | 4,600 |

### பங்குகள் க/கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| செண்பகம் லிமிடெட் கம்பெனி க/கு | 13,000 | ராமன் முதல் க/கு | 8,667 |
| | | சாமி முதல் க/கு | 4,333 |
| | 18,365 | | 13,000 |

### ரொக்கக் க/கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | 300 | ராமன் முதல் க/கு | 537 |
| செண்பகம் கம்பெனி லிமிடெட் க/கு | 500 | சாமி முதல் க/கு | 267 |
| | 800 | | 800 |

**எடுத்துக்காட்டு: 38**

A, B மற்றும் C ஆகிய மூவரின் இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பயிற்சி வினாக்கள்:**

**1) சரியா அல்லது தவறா:**

அ) நிறுவனத்தை இணைக்கும் போது மறுமதிப்பீடு செய்த சொத்திற்கும் பொறுப்பிற்கும் மறுமதிப்பீடு கணக்கு தொடங்கப் பட வேண்டும்.

ஆ) புதிய நிறுவனம் சில சொத்துக்களையும் பொறுப்பு களையும் எடுத்துக்கொள்ளாத போது அவற்றை கூட்டாளிக ளின் மூலதன கணக்கிற்கு இலாப விகித அடிப்படையில் மாற்ற வேண்டும்.

இ) கூட்டாளிகளின் இறுதி மூலதனத் தொகையை முடித்து புதிய நிறுவனத்திற்கு மாற்றப்பட வேண்டும்.

ஈ) இணையும் நிறுவத்தின் கணக்கை முடிக்க மறுமதிப்பீடு கணக்கு தொடங்கப்பட வேண்டும்.

உ) வரையறுக்கப்பட்ட பொறுப்பின் நன்மையை அடைய ஒரு கூட்டு பங்கு நிறுமம் ஒரு கூட்டாண்மை நிறுவனமாக தன்னை மாற்றிக் கொள்கின்றது.

ஊ) ஒரு ஒப்பந்தம் இல்லாத பட்சத்தில் கொள்முதல் செய்யும் நிறுமத்திலிருந்து பெறப்படும் பங்குகள் மற்றும் கடன் பத்திரங் கள் இலாப விகிதத்தில் கூட்டாளி களுக்கு வினியோகிக்கப்படும்.

எ) ஒரு நிறுவனத்தை ஒரு நிறுமத்திற்கு விற்கும் பொழுது, கிடைக்கும் இலாபம் மற்றும் நட்டத்தை மறுமதிப்பீட்டு கணக்கின் மூலம் கண்டறியப் படுகின்றது.

குறிப்பு

| பொறுப்புகள் | | | சொத்துக்கள் | |
|---|---|---|---|---|
| | | ரூ. | | ரூ. |
| கடனீந்தோர் | | 17,000 | வங்கி இருப்பு | 6,200 |
| செலுத்த வேண்டிய உண்டியல்கள் | | 1,200 | கடனாளிகள் | 19,000 |
| முதல் கணக்குகள் | | | சரக்கு | 22,000 |
| A | 20,000 | | இயந்திரம் | 15,000 |
| B | 20,000 | | பொருந்தியவை | 2,000 |
| C | 10,000 | 50,000 | நன்மதிப்பு | 4,000 |
| | | 68,200 | | 68,200 |

கூட்டாளிகள் கூட்ட நிறுவனத்தை முகுந்தன் கம்பெனி லிமிடெட்டிற்கு விற்க முடிவு செய்தனர். முகுந்தன் கம்பெனி லிமிடெட் செலுத்த வேண்டிய உண்டியல் நீங்கலாக மற்ற பொறுப்புக்களையும் வங்கி இருப்பு நீங்கலாக மற்ற சொத்துக்களையும் கீழ்க்கண்ட மதிப்பிற்கு எடுத்துக் கொண்டது.

| | ரூ. |
|---|---|
| நன்மதிப்பு | 18,000 |
| பொருந்தியவை | 1,000 |
| இயந்திரம் | 20,000 |
| சரக்கு | 50,000 |
| கடனாளிகள் | 18,000 |

அக்கம்பெனி கொள்முதல் விலையில் 12% கடன் பத்திரங்களை ரூ.52,000றக்கும் மீதியை ரொக்கமாகவும் கொடுத்தது. செலவுத் தொகை ரூ.600ஐ கம்பெனி செலுத்தியது. கூட்டாளிகள் லாபம் மற்றும் கட்டத்தினை 1/2:1/3:1/6 என்ற விகிதத்தில் பிரித்துக் கொண்டனர்.

நிறுவனத்தின் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளை பதிவு செய்து முக்கியமான பேரேட்டுக் கணக்குகளைத் தயார் செய்க.

விடை:

எடுத்துக் கொண்ட சொத்துக்கள்

கம்பெனி எடுத்துக் கொண்ட சொத்துக்கள்

குறிப்பு

| | ரூ. |
|---|---|
| நன்மதிப்பு | 18,000 |
| பொருந்தியவை | 1,000 |
| இயந்திரம் | 20,000 |
| சரக்கு | 20,000 |
| கடனாளிகள் | 18,000 |
| கழிக்க: எடுத்துக்கொண்ட | 77,000 |
| பொறுப்புக்கள்— | |
| கடனீந்தோர் | 17,000 |
| | 60,000 |

| | |
|---|---|
| 12% கடன் பத்திரங்களாக | 52,000 |
| (மீதி) ரொக்கமாக | 8,000 |
| | 60,000 |

## A, B & C நிறுவனத்தின் குறிப்பேட்டுப் பதிவுகள்

| | | | ப ரூ. | வ ரூ. |
|---|---|---|---|---|
| | தீர்வு க/கு ப<br>கடனாளிகள் க/கு<br>சரக்கு க/கு<br>இயந்திர க/கு<br>பொருந்தியவை க/கு<br>நன்மதிப்பு க/கு<br>(வங்கி இருப்பு நீங்கலாக மற்ற சொத்துக்கள் தீர்வுக் கணக்கிற்கு மாற்றப்பட்டதற்காக) | | 62,000 | <br>19,000<br>22,000<br>15,000<br>2,000<br>4,000 |
| | கடனீந்தோர்கள் க/கு ப<br>செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப<br>தீர்வு க/கு<br>(பொறுப்புக்கள் தீர்வுக் கணக்கிற்கு மாற்றப்பட்டதற்காக) | | 17,000<br>1,200 | <br><br>18,200 |
| | தீர்வு க/கு ப<br>வங்கி க/கு<br>(செலுத்த வேண்டிய உண்டியலுக்கு பணம் செலுத்தியதற்காக) | | 1,200 | <br>1,200 |
| | முகுந்தன் கம்பெனி க/கு ப<br>தீர்வு க/கு<br>(கம்பெனியிலிருந்து பெற வேண்டிய கொள்முதல் விலைக்கான பதிவு) | | 60,000 | <br>60,000 |
| | கடன் பத்திரங்கள் க/கு ப<br>வங்கி க/கு ப<br>முகுந்தன் கம்பெனி லிமிடெட் க/கு<br>(12,% கடன் பத்திரங்களை ரூ.52,000க்கும் மீதம் ரூ.8,000ஐ ரொக்கமாகவும் பெற்றுக் கொண்டதற்காக) | | 52,000<br>8,000 | <br><br>60,000 |

குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| தீர்வுக் க/கு ப<br>A யின் முதல் க/கு<br>B யின் முதல் க/கு<br>C யின் முதல் க/கு<br>(தீர்வுக் கணக்கில் லாபத்தினை கூட்டாளிகளின் முதல் கணக்கிற்கு ½ : ½ : 1/6 என்ற விகிதத்தில் மாற்றியதற்காக) | | 15,000 | 7,500<br>5,000<br>2,500 |
| A யின் முதல் க/கு ப<br>B யின் முதல் க/கு ப<br>C யின் முதல் க/கு ப<br>கடன் பத்திரங்கள் க/கு<br>(சரிக்கட்டலுக்குப் பின் கூட்டாளிகள் ரூ.52,000 கடன் பத்திரங்களை பிரித்துக் கொண்டதற்காக)<br>$52,000 \times \frac{27,500}{65,000} = 22,000$<br>$52,000 \times \frac{25,000}{65,000} = 20,000$<br>$52,000 \times \frac{12,500}{65,000} = 10,000$ | | 22,000<br>20,000<br>10,000 | 52,000 |
| A யின் முதல் க/கு ப<br>B யின் முதல் க/கு ப<br>C யின் முதல் க/கு ப<br>வங்கி க/கு<br>(ஒவ்வொரு கூட்டாளிக்கும் கடைசியாகச் செலுத்த வேண்டிய தொகையினை செலுத்துவதற்காக) | | 5,500<br>5,000<br>2,500 | 13,000 |

**தீர்வுக் க/கு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| கடனாளிகள் க/கு | 19,000 | கடனீந்தோர்கள் க/கு | 17,000 |
| சரக்கு க/கு | 22,000 | செலுத்த வேண்டிய | 1,200 |
| இயந்திரக் க/கு | 15,000 | உண்டியல் க/கு | 60,000 |
| பொருந்தியவை க/கு | 2,000 | முகுந்தன் கம்பெனி க/கு | 4,000 |
| நன்மதிப்பு க/கு | 4,000 | நன்மதிப்பு க/கு | |
| வங்கி க/கு | 1,200 | | |
| லாபம் மாற்றப்பட்டது: | | | |
| A யின் முதல் க/கு | 7,500 | | |
| B யின் முதல் க/கு | 5,000 | | |
| C யின் முதல் க/கு | 2,500 | | |
| | 78,200 | | 78,200 |

**முகுந்தன் கம்பெனி லிமிடெட் க/கு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தீர்வுக் க/கு | 60,0000 | கடன் பத்திரங்கள் க/கு<br>வங்கி க/கு | 52,000<br>8,000 |

### A யின் முதல் க/கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| கடன் பத்திரங்கள் க/கு | 22,000 | இருப்பு கீ/கொ | 20,000 |
| வங்கி க/கு | 5,500 | தீர்வுக் க/கு (1/2 பங்கு லாபம்) | 7,500 |
| | 27,500 | | 27,500 |

### B யின் முதல் க/கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| கடன் பத்திரங்கள் க/கு | 20,000 | இருப்பு கீ/கொ | 20,000 |
| வங்கி க/கு | 5,000 | தீர்வுக் க/கு (1/3 பங்கு லாபம்) | 5,000 |
| | 20,500 | | 20,500 |

### C யின் முதல் க/கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| கடன் பத்திரங்கள் க/கு | 10,000 | இருப்பு கீ/கொ | 10,000 |
| வங்கி க/கு | 2,500 | தீர்வுக் க/கு (1/3 பங்கு லாபம்) | 2,500 |
| | 12,500 | | 12,500 |

### 12% கடன் பத்திரங்கள் க/கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| முகுந்தன் கம்பெனி லிமிடெட் க/கு | 52,000 | A யின் முதல் க/கு | 22,000 |
| | | B யின் முதல் க/கு | 20,000 |
| | | C யின் முதல் க/கு | 10,000 |
| | 52,000 | | 52,000 |

### வங்கி க/கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | 6,200 | தீர்வுக் க/கு (செ. வே. உண்டியல் செலுத்தியது) | 1,200 |
| முகுந்தன் கம்பெனி லிமிடெட் க/கு | 8,000 | A யின் முதல் க/கு | 5,500 |
| | | B யின் முதல் க/கு | 5,000 |
| | | C யின் முதல் க/கு | 2,500 |
| | 14,200 | | 14,200 |

குறிப்பு

**2) கோடிட்ட இடத்தை நிரப்புக:**

அ) மறுமதிப்பீட்டு கணக்கின் இலாப நட்டங்களை ............ கணக்கிற்கு மாற்றப்பட வேண்டும்.

ஆ) புதிய நிறுவனம் சில பொறுப்புகளை ஏற்காத பொழுது அவை ....... கணக்கிற்கு மாற்றப்படும்.

இ) .......... பயனை அனுபவிக்கவே நிறுவனங்கள் இணைக்கப்படுகின்றன.

ஈ) ஒரு நிறுவனம் மற்றொரு நிறுவனத்துடன் இணைக்கும் பொழுது ............ நிறுவனம் என்றும், மேலும் புதிய நிறுவனம் ............. என்றும் அழைக்கப் படுகின்றது.

உ) ஒரு நிறுமத்திற்கு மாற்றப்படுவதற்கு அல்லது விற்கப்படுவதற்கான கணக்கியல் முறை ...................

ஊ) சொத்துக்களை விற்கும் பொழுது மற்றும் பொறுப்புகளை கணக்கு தீர்க்கும் பொழுதும் ஏற்படும் லாப நட்டத்தை அறிய .............. கணக்கு தாயாரிக்கப்படுகின்றது.

எ) கொள்முதல் மறுபயன் என்பது ............ நிறுவனம் ................ நிறுவனத்திற்கு செலுத்தும் விலையாகும்.

**எடுத்துக்காட்டு: 38**

கீழ்வரும் இருப்பு நிலைக் குறிப்பு D, E மற்றும் F உடையது. அவர்கள் சமமான கூட்டாளிகள்.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| முதல் கணக்குகள் | | நிலைத்த சொத்துக்கள் | 30,000 |
| D | 20,000 | பெற வேண்டிய கணக்குகள் | 20,000 |
| E | 25,000 | சரக்கிருப்பு | 2,000 |
| நடப்புக் கணக்குகள் | | வங்கி | 4,000 |
| D | 1,000 | F நடப்பு க/கு | 9,000 |
| E | 2,000 | | |
| சேர்ந்திருக்கும் கட்டணம் | 1,000 | | |
| செலுத்த வேண்டிய கணக்குகள் | 14,000 | | |
| உற்பத்தி வரிக்கான ஒதுக்கீடு | 2,000 | | |
| | 65,000 | | 65,000 |

ஒரு ரூபாய் பங்குகள் என ரூ.1,00,000 முதலோடு அப்சரா லிமிடெட் எனும் கம்பெனி பதிவு செய்யப்பட்டது. கம்பெனி பதிவு மற்றும் அதனுடைய ஒப்பந்தத்திற்கு ரூ.900 செலவானது. இது கூட்டு வணிகத்தில் தரப்பட்டது. கம்பெனி எடுத்துக் கொண்ட சொத்துக்கள் வருமாறு:

நிலைத்த சொத்துக்கள் ரூ.27,000 சரக்கிருப்பு ரூ.1,000, நன்மதிப்பு ரூ.2,000, இந்தச் சொத்துக்களுக்காக கம்பெனியானது கூட்டாளிகளுக்கு அவர்களது உரிய விகிதத்தில் ரூ.28,000த்துக்கு பங்குகளை வழங்கியது. மீதித் தொகை கம்பெனியில் அவர்களது தற்காலிக கடனாக விட்டு வைக்கப்பட்டது.

கூட்டாளிகள் கடன்களை வசூலித்து (அது ரூ.19,000) பொறுப்புகளை முழுவதுமாக அடைத்தார்கள். உற்பத்தி வரிக்கான பொறுப்பை பொறுத்தவரை இது ரூ.1,400 எனக் கண்டறியப்பட்டு கொடுக்கப்பட்டது. வருமான வரியான D-ரூ.1,000, E-ரூ.500, F-ரூ.300 ஆகியவையும் தரப்பட்டன.

F நொடிப்பு நிலையை அடைந்தார். ஆனால் ரூ.500 மட்டுமே தர முடிந்தது. தீர்வு க/கு மற்றும் முதல் கணக்குகளை கூட்டு வணிக நிறுவன ஏடுகளில் காண்பித்திடுக. கார்னருக்கு எதிரான முர்ரே வழக்குத் தீர்ப்பை அமுல்படுத்துக.

குறிப்பு

விடை :

தீர்வு க/கு

| பற்பல சொத்துக்கள் | | பற்பல பொறுப்புக்கள் | |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| நிலைத்த சொத்துக்கள் | | சேர்ந்திருக்கும் கட்டணம் | |
| 30,000 | | 1,000 | |
| பெறவேண்டிய | 52,000 | செலுத்த வேண்டிய | |
| கணக்குகள் 20,000 | | கணக்குகள் | |
| சரக்கிருப்பு | | 14,000 | 17,000 |
| 2,000 | | உற்பத்தி வரிக்கான | 30,000 |
| | | ஒதுக்கீடு | |
| வங்கி க/கு | | 2,000 | 19,000 |
| சேர்ந்திருக்கும் | | அப்சரா லிமிடெட் க/கு | |
| கட்டணம் 1,000 | 16,400 | சொத்துக்களை எடுத்ததற்கு | |
| செலுத்த வேண்டிய | 900 | வங்கி க/கு கடன் வசூல் | |
| கணக்குகள் | | | |
| | | | 3,300 |
| 14,000 | | நட்டம் மாற்றப்பட்டது | |
| உற்பத்தி வரிக்கான | | D 1,100 | |
| ஒதுக்கீடு | | E 1,100 | |
| 1,400 | | F 1,100 | |
| வங்கி க/கு பதிவுக் | | | |
| கட்டணம் | | | |
| | 69,300 | | 69,300 |

முதல் கணக்குகள்

| | D ரூ. | E ரூ. | F ரூ. | | D ரூ. | E ரூ. | F ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| நடப்பு க/கு— மாற்றப்பட்டது | — | — | 9,000 | இருப்பு கீ/கொ | 20,000 | 25,000 | — |
| வங்கி க/கு — வரி கட்டியது | 1,000 | 500 | 300 | நடப்பு க/கு – மாற்றப்பட்டது | 1,000 | 2,000 | — |
| தீர்வு க/கு—நட்டம் | 1,100 | 1,100 | 1,100 | வங்கி க/கு—தீர்வு நட்டத் தொகை | 1,100 | 1,100 | — |

## 1.11 அருஞ்சொற்கள்

**கூட்டாண்மை பத்திரம்:**

நடைமுறைகள் மற்றும் கட்டுப்பாடுகள் பற்றிய விபரங்கள் அடங்கிய, கூட்டாளிகளுக்கிடையேயான ஓர் எழுத்துப்பூர்வ ஒப்பந்தம்.

**நிலை முதல் கணக்கு :**

கூட்டாளிகளின் முதல் தொகை எல்லாக்காலங்களிலும் மாறாமல் இருப்பது.

**தியாகவிகிதம் :**

புதிய கூட்டாளிக்காக, பழைய கூட்டாளிகள் விட்டுக் கொடுக்கும் லாப விகிதம்.

**மறுமதிப்பீட்டுக்கணக்கு :**

கூட்டுவணிகத்தில் மாற்றம் ஏற்படும்பொழுது, இருப்புநிலைக்குறிப்பில் உள்ள சொத்து மற்றும் பொறுப்புகளை மறுமதிப்பீடு செய்ய உதவும் கணக்கு.

**ஆதாய விகிதம் :**

ஒரு கூட்டாளி விலகுவதால், தொடரும் கூட்டாளிகளுக்கு கிடைக்கும் அதிகரிக்கப்பட்ட லாப விகிதம்.

**நிறைவேற்றாளர் கணக்கு :**

மரணமடைந்த கூட்டாளிக்கு சேர வேண்டியதொகை இந்த கணக்கிற்கு மாற்றப்படும்.

**கொள்முதல் மறுபயன் :**

விற்கும் கூட்டுவணிகத்தின் சொத்துக்கள் மற்றும் பொறுப்புகளை எடுத்துக் கொண்டமைக்கு வாங்கும் நிறுமம் செலுத்தும்விலை.

**தீர்வு கணக்கு :**

சொத்துக்களை விற்பதிலும், பொறுப்புகளை தீர்ப்பதிலும் கிடைக்கும் லாபநட்டத்தை கணக்கிட தயாரிக்கும் கணக்கு.

பற்றாக்குறை கணக்கு : நொடிப்பு நிலையின் பொழுது, செலுத்தப்படாத பொறுப்புகளையும், முடிக்கப்படாத கூட்டாளிகளின் முதல் கணக்கின் பற்று இருப்பையும் இறுதியாகமாற்றம் செய்யும் கணக்கு.

## 1.12 தொகுத்தறிவோம்:

கூட்டாண்மை அமைப்பானது, எளிதாக உருவாக்கவும், பேரளவு தொழில் அமையவும் வாய்ப்பளிப்பதால், தொழில்முனைவோர் மத்தியில் பிரசித்தி பெற்றுள்ளது. கூட்டு ஒப்பந்தத்தின் மூலம் கடமைகள், உரிமைகள் பகிர்ந்து கொள்ளப்பட்டு, நிலை அல்லது மாறுபடும் கணக்கு மூலம் கூட்டாளிகளின் பங்கு உறுதியளிக்கப்படுகின்றது. வணிகச் சூழ்நிலையை கருத்தில் கொண்டு புதிய கூட்டாளியை பழைய கூட்டாளிகளுக்கு பாதிப்பில்லாமல் சேர்க்கவும், தேவையான சூழ்நிலையில் கூட்டாளிகள் விலகவும் கூட்டுபணிக் கணக்குகள் ஒத்துழைக்கின்றன. நன்மதிப்பு மதிப்பிடல், மறுமதிப்பீடு கணக்குகள், லாபநட்ட பகிர்வு விகித மாற்றங்கள் முக்கிய கணக்கீடுகளாகும். கூட்டாளிகள் திவாலாகும் சமயத்தில் சட்டபூர்வ அடிப்படையிலும், முந்தையவழக்கான கார்னர் எதிர் முர்ரேயின் தீர்ப்பு அடிப்படையிலும் முதல்கணக்குகள் முடிக்கப்பட்டு கூட்டாளுக்கு பணம் வழங்கப்படுகிறது. பணம் வழங்கப்படும் பொழுதும், எல்லாக் கூட்டாளிகளுக்கும் அவர்களது லாப நட்ட பகிர்வு விகிதப்படி லாபமோ அல்லது நட்டமோ கிடைக்கும் வண்ணம் படிப்படியாக வழங்கப்படுகின்றது. போட்டியை தவிர்க்கும் பொருட்டு இரண்டு கூட்டு வணிகங்களை இணைத்து ஒரு புதிய கூட்டு வணிகத்தை ஆரம்பித்து அதில் அனைத்து கூட்டாளிகளும் புதிய ஒப்பந்த அடிப்படையில் செயல்படலாம். அல்லது ஒரு நல்ல கொள்முதல் மறுபயனுக்கு கூட்டுவணிகத்தை கூட்டு பங்கு கம்பெனிக்கு விற்கலாம் அல்லது கூட்டாளிகள் தங்களுக்குள் தீர்மானித்து வணிகத்தை பங்கு நிறுமமாக மாற்றலாம்.

## 1.13. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்களுக்கான விடைகள்

**பயிற்சி எண் I க்கான விடைகள்:**

சரியா / தவறா : (1) தவறு (2) தவறு (3) சரி (4) சரி

**பயிற்சி எண் II க்கான விடைகள்:**

சரியா / தவறா : (அ) சரி (ஆ) தவறு (இ) சரி (ஈ) சரி (உ) சரி

குறிப்பு

கோடிட்ட இடத்தை நிரப்புக : (அ) குறைக்கப்படுகிறது (ஆ) புதிய லாப விகிதம்

(இ) மூலதன (ஈ) நட்டத்தை (உ) பழைய

**பயிற்சி எண் III க்கான விடைகள்:**

சரியா / தவறா : (அ) சரி (ஆ) சரி (இ) தவறு (ஈ) சரி

சிறந்த விடையைத் தேர்ந்தெடுக்கவும் :

(1) அ (2) அ (3) அ (4) ஆ

**பயிற்சி எண் IV க்கான விடைகள்:**

சரியா / தவறா : (அ) தவறு (ஆ) சரி (இ) சரி

சரியான விடையை தேர்ந்தெடு :

(1) சொத்து (2) ஒவ்வொரு கூட்டாளியின் மீதும் எடுக்கப்படும்.

**பயிற்சி எண் V க்கான விடைகள்:**

கோடிட்ட இடத்தை நிரப்புக:

(அ) தீர்வு கணக்கு (ஆ) ரொக்கக்கணக்கு, தீர்வு கணக்கு

(இ) தீர்வு கணக்கு, பற்று (ஈ) மூலதனகணக்கு, லாப பகிர்வு

(உ) பெயரளவு

**பயிற்சி எண் VI க்கான விடைகள்:**

சரியா / தவறா : (அ) தவறு (ஆ) தவறு (இ) சரி (ஈ) தவறு (உ) சரி

**பயிற்சி எண் VII க்கான விடைகள்:**

சரியா / தவறா : (அ) சரி (ஆ) தவறு (இ) சரி (ஈ) தவறு

**கோடிட்ட இடத்தை நிரப்புக:**

(அ) மூலதனகணக்கு (ஆ) மூலதனகணக்கு

(இ) பேரளவு உற்பத்தி (ஈ) இணையும், இணைக்கப்பட்ட

## 1.14. மாதிரி வினாக்கள்

(1) 1. X மற்றும் Y என்னும் கூட்டாளிகள் 3:2 என்னும் விகிதத்தில் லாப நட்ட பகிர்வு செய்து கொள்கின்றனர். ஜனவரி 1, 2001 முதல் 1/6 பங்கு லாபத்திற்கு குறைந்தபட்ச லாப உறுதியாக ரூ.25,000 என Zஐ சேர்த்துக் கொள்கின்றனர். X மற்றும் Y பழைய லாப பகிர்வின் படி தொடர ஒப்புக் கொள்கின்றனர். ஆனால் Z பெற இருக்கின்ற உறுதி செய்யப்பட்ட லாபத் தொகையில் 1/6 லாப பகிர்வை விட அதிகமாக உள்ள தொகையை, X மற்றும் Y, 4:1 என்கின்ற விகித்தில் ஏற்பது என்று ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளது. அந்த வருடம், நிறுவனத்தின் லாபம் ரூ.1,20,000. லாப நட்ட பகிர்வு கணக்கு தயார் செய்க.

(2) 31.12.1995ல் முடிவடையும் ஆண்டிற்கான லாப நட்ட ஒதுக்கீட்டு கணக்கு பின்வருமாறு.

| விபரம் | ரூ. | விபரம் | ரூ. |
|---|---|---|---|
| முதல் மீதான வட்டி க/கு | | லாப நட்ட க/கு (நிகர லாபம்) | 50,000 |
| X 50,000க்கு 6% | 3,000 | எடுப்பு மீதான வட்டி | |
| Y 30,000க்கு 6% | 1,800 | X எடுக்க 12,000க்கு 5% 600 | |
| கூட்டாளிகளினுடைய சம்பள க/கு X | 3,600 | Y எடுக்க 10,000க்கு 5% 500 | 1,100 |
| லாப நட்ட பகிர்வு க/கு X 25,620 Y 17,080 | 42,700 | | |
| | 51,100 | | 51,100 |

மேற்சொன்ன பகிர்வுகள் முறையாக பதியப்பட்டுள்ளது. ஆனாலும் சில குறைபாடுகள் பிற்பாடு கண்டு அறியப்பட்டுள்ளது.

1. முதல் மீதான வட்டி 5% மற்றும் எடுப்பு மீதான வட்டி 6% பதியப்பட வேண்டும்.
2. X கூட்டாண்மையிலிருந்து சம்பளம் பெற உரிமை இல்லை, மற்றும் Y மாதம் ரூ.200 சம்பளமாக பெற உரிமையடையவர் எனினும் இதுவரை அவரால் எடுக்கப்படவில்லை.

3. முதலின் அடிப்படையில் லாபப் பகிர்வு செய்யப்பட வேண்டும்.

4. ஏட்டில் உள்ள A அளித்துள்ள கடன் ரூ.10,000க்கு 6% வட்டி எழுதப்படவில்லை

மேற்படி விடுதல்களை சரி செய்ய குறிப்பேட்டு பதிவு தருக.

விடை : முதல் க/கு ப 2140

பு முதல் க/கு 1540

கொடுபடா செலவு க/கு 600

(3) ஏ மற்றும் பி கூட்டாளிகள் 3:1 என்ற விகிதத்தில் லாபநட்டத்தை பிரித்துக் கொள்கின்றனர். 31.3.2000ம் அவை அவர்களது இருப்புநிலைக்குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 75,000 | கையிருப்பு ரொக்கம் | 45,000 |
| பொதுக்காப்பு | 8,000 | பெறுதற்குரிய உண்டியல் | 6,000 |
| மூலதனக்கணக்கு: | | கடனாளிகள் | 32,000 |
| ஏ 60,000<br>பி 32,000 | 92,000 | சரக்கிருப்பு | 40,000 |
| | | மனை<br>துணைப்பொருட்கள் | 2,000 |
| | | நிலம் மற்றும் கட்டிடம் | 50,000 |
| | 1,75,000 | | 1,75,000 |

அவர்கள் சி என்பவரை புதிய கூட்டாளியாக 1.4.2000 அன்று கீழ்கண்ட விதிமுறைகளில் சேர்க்கின்றனர்.

அ) சி 1/5 லாப விகிதத்திற்கு ரூ.20,000 மூலதனமாக கொண்டு வர வேண்டும்.

ஆ) நன்மதிப்பு ரூ.40,000 என மதிப்பீடு செய்யப்படுகின்றது.

இ) சரக்கிருப்பும், மனைதுணைப் பொருட்களும் 10 சதவீதம் மதிப்பில் குறைக்கப்படுகிறது. கடனாளிகள் மீது 5 சதவீதம் ஒதுக்கீடு செய்க.

ஈ) கட்டிடத்தின் மதிப்பு 20 சதவீதம் அதிகரிக்கப்படுகிறது.

உ) எல்லா கூட்டாளிகளின் மூலதனக் கணக்கும் லாப விகிதத்தின் அடிப்படையில் மாற்றி அமைக்கப்பட வேண்டும். மூலதனக் கணக்கில் உள்ள மிகுதி நடைமுறை கணக்கிற்கு தற்காலிகமாக மாற்றப்பட்டு, உடனடியாக கூட்டாளிகளால் எடுக்கப்படுகிறது.

புதிய கூட்டாண்மையின் முதற்குறிப்பேட்டு பதிவுகள், மறுமதிப்பீடு கணக்கு மற்றும் தொடக்க இருப்பு நிலைக்குறிப்பு தயார் செய்க.

(4) ஏ மற்றும் பி கூட்டாளிகளான இருவரும் லாபத்தை 2௯3 மற்றும் 1/3 என்ற லாப விகிதத்தில் பிரித்து கொள்கின்றனர். 31.12.2004 அன்று அவர்களுடைய இருப்பு நிலைக் குறிப்பு கீழே தரப்பட்டுள்ளது.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 65,900 | ரொக்கம் மற்றும் வங்கி இருப்பு | 1,200 |
| மூலதனக்கணக்கு: | | பற்பல கடனாளிகள் | 9,700 |
| ஏ | 30,000 | சரக்கிருப்பு | 20,000 |
| பி | 20,000 | இயந்திர தளவாடங்கள் | 35,000 |
| | | கட்டிடம் | 50,000 |
| | 1,15,900 | | 1,15,900 |

அவர்கள் சி என்பவரை புதிய கூட்டாளியாக கீழ்கண்ட விதிமுறைகளில் சேர்க்கின்றனர்.

அ) சி மூலதனமாக ரூ.15,000 கொண்டு வரவேண்டும் அவருடைய லாப விகிதம் 1/3.

ஆ) சரக்கிருப்பு மற்றும் இயந்திர தளவாடங்களின் மதிப்பு 10 சதவீதம் குறைக்கப்படுகின்றது.

இ) 5 சதவீதம் வராக்கடன் ஒதுக்கீடு செய்யப்பட வேண்டும்.

ஈ) கட்டிடத்தின் மதிப்பு ரூ.9,500 அதிகரிக்கப்படுகிறது.

உ) இருப்பு நிலைக்குறிப்பில் காட்டப்படாத முதலீடுகள் ரூ.400 கணக்கில் கொண்டுவரப்படுகிறது.

ஊ) ரொக்கத்தை தவிர மற்ற பொறுப்புகளின் மதிப்பும் சொத்துக்களின் மதிப்பும் புதிய கூட்டாண்மையில் மாறக்கூடாது.

புதிய கூட்டாண்மையின் குறிப்பு மறுமதிப்பீடு கணக்கு, மூலதனக்கணக்கு மற்றும் தொடக்க இருப்பு நிலைக் குறிப்பு தயார் செய்க.

(விடை : லாபம் ரூ.3,175; மூலதனக் கணக்கு இருப்பு ஏ ரூ.30,870; பி ரூ.20,435; சி ரூ.13,695; இருப்ப நிலைக் குறிப்பு மொத்த தொகை ரூ.1,30,900).

(5) ஏ, பி மற்றும் சி என்ற கூட்டாளிகள் தங்கள் இலாப நட்டத்தை சமமாக பிரித்துக் கொள்கின்றனர். 1.1.96 அன்று ஏ விலகினார் அன்றைய தேதியில் நிறுவனத்தின் இருப்பு நிலைக் குறிப்பு :

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| முதல் கணக்கு: | | பொறி & இயந்திரம் | 6,980 |
| ஏ | 8,000 | நிலம் & கட்டிடம் | 4,200 |
| பி | 6,800 | கடனாளிகள் | 8,915 |
| சி | 7,800 | முதலீடுகள் | 8,000 |
| கடனீந்தோர் | 6,928 | ரொக்கம் | 1,433 |
| | 29,528 | | 29,528 |

'ஏ' விலகலின் போது சொத்துக்கள் பின்வருமாறு மறுமதிப்பீடு செய்யப்பட்டன.

நிலம் மற்றும் கட்டிடம் ரூ.5,800, பொறி மற்றும் இயந்திரம் ரூ.6,594, முதலீடு ரூ.8,400. நற்பெயர் ரூ.9,600 ஆக மதிப்பிடப்பட்டது. 'ஏ' அவருக்கு சேரவேண்டிய தொகையின் ஒரு பகுதியாக முதலீட்டை மறுமதிப்பீட்டுத் தொகையில் ஏற்றார். 'பி' கூடுதல் முதலாகச் செலுத்தியது ரூ.4,000, 'ஏ'—யின் எஞ்சிய தொகை செலுத்தி முடிக்கப்பட்டது.

மறுமதிப்பீட்டு கணக்கு கூட்டாளிகள் முதல் கணக்கு மற்றும் 'பி' மற்றும் 'சி'யின் இருப்பு நிலைக் குறிப்பைத் தயாரிக்க.

(விடை : மறுமதிப்பீட்டு இலாபம் ரூ.1,584, இருப்புநிலைக் குறிப்பு மொத்தம் ரூ.32,984)

(6) இலாப விகிதத்தை 4:3:2 என்ற விகிதத்தில் பகிரும் 'ஏ', 'பி' மற்றும் 'சி' கூட்டாளிகளின் 31.12.1995 நாளது இருப்பு நிலைக் குறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | | ரூ. |
|---|---|---|---|---|
| பற்பல கடனீந்தோர் | 4,140 | வங்கி ரொக்கம் | | 3,300 |
| முதல் கணக்கு: | | கடனாளிகள் | 3045 | |
| ஏ | 12,000 | கழி : ஒதுக்கீடு | 105 | 2,940 |
| பி | 9,000 | சரக்கு | | 4,800 |
| சி | 6,000 | பொறி மற்றும்<br>இயந்திரம்<br>நிலம் கட்டிடம் | | 5,100<br>15,000 |
| | 31,140 | | | 31,140 |

'பி' என்பவர் விலகுவதாக அறிவித்தார். பின்வரும் சரிக்கட்டுகளை புத்தகத்தில் உருவாக்க ஏற்றுக் கொண்டனர்.

1) நிலம் மற்றும் கட்டிட மதிப்பை 10 சதவீதம் உயர்த்துவது.
2) வராக்கடன் ஒதுக்கீடு இனி தேவையற்றது.
3) சரக்கு மதிப்பை 20 சதவீதமாக உயர்த்துவது.
4) பி—ன் கணக்கில் உள்ள மிகுதி வரவு ரூ.810, ஏ மற்றும் சி—யின் பற்றில் மிகுதியாக உள்ள தொகை முறையே ரூ.420 மற்றும் ரூ.390 போன்றவை கணக்கில் திருத்தப்பட்டு சரிக்கட்டப்படுகின்றது.
5) நிறுவனத்தின் நற்பெயர் மதிப்பு ரூ.5,400 ஆக முடிவு செய்யப்பட்டு, அதில் பி—ன் பங்கை, எதிர்காலத்தில் லாபத்தை 2:1 என்ற

குறிப்பு

1) விகிதத்தில் பங்கிடும் 'ஏ' மற்றும் 'சி'—யின் கணக்கில் சரிக்கட்ட வேண்டும்.

2) நிறுவனத்தின் புதிய முதலை, 'ஏ' மற்றும் சி—யின் முதல்கள் 2:1 என்ற விகிதத்தில் இருக்கும் வண்ணம் ரொக்கம் கொடுத்தோ அல்லது எடுத்துச் சரிக்கட்டுவது. தேவையான குறிப்புகளை எழுது. புதிய நிறுவனத்தின் இருப்பு நிலைக் குறிப்பை 'பி'யின் இருப்பை கடனாக காண்பிக்குமாறு தயாரிக்க.

(விடை : 'பி'யின் கடன் கணக்கு ரூ.10,845, இருப்பு நிலைக் குறிப்பு ரொக்கம் ரூ.33,705)

(7) பிற நிறுவனத்துடன் இணையும் பொழுது, ஏட்டில் கணக்குகளை கையாளக் கூடிய செயல்முறைகளை விவரிக்கவும்.

(8) நிறுவனக்களின் இணைப்பு என்றால் என்ன? நிறுவனங்கள் இணைவதற்காக காரணத்தை கூறுக.

(9) இரண்டு நிறுவனங்கள், ° மற்றும் ஞ, மற்றும் ச மற்றும் ஞ ஆகியவைகள், இணைய ஒத்துக் கொண்டன. 31 டிசம்பர் 2000 அன்று அவர்களது இருப்பு நிலைக் குறிப்பு:

| பொறுப்புகள் | P & Q ரூ. | R & S ரூ. | சொத்துக்கள் | P & Q ரூ. | R & S ரூ. |
|---|---|---|---|---|---|
| முதல் கணக்கு | | | தளவாடம் | 5,000 | 6,500 |
| P | 91,000 | — | கட்டிடம் | 39,000 | — |
| Q | 65,000 | — | சரக்கிருப்பு | 21,000 | 13,000 |
| R | — | 45,500 | கடனாளிகள் | 65,000 | 52,000 |
| S | — | 32,500 | வங்கியில் ரொக்கம் | 78,000 | 32,500 |
| கடனீநதோாக்ள | 52,000 | 26,000 | | | |
| | 2,08,000 | 1,04,000 | | 2,08,000 | 1,04,000 |

PQRS என்னும் புதிய நிறுவனம் ஆரம்பிக்கப்படுகின்றது. PQRS, பழைய நிறுவனங்களின் கடனாளிகள் மற்றும் கடனீந்தோர்களை எடுத்துக்கொள்ளவில்லை. கட்டிடத்தை P மற்றும் Q தன்னிடம் வைத்துக்

கொண்டது. நடைமுறை முதலுக்கு தேவையான தொகை ரூ.65,000 என கணக்கிடப்பட்டு, இதை கூட்டாளிகள் அனைவரும் புதிய லாப விகிதமான 3:3:2:2 என்ற விகிதத்தில் கொண்டு வரவேண்டுமென முடித்துக் கொள்ப்பட்டது. P, Q மற்றும R ஆகியோரது ஏடுகளில் முடிவு பதிவுகளும், PQRS ஏட்டில் ஆரம்ப இருப்பு நிலைக் குறிப்பும் தயாரிக்கவும்.

(10) ஏ, பி, சி அன் கோ—வில் உள்ள கூட்டாளிகள் ஏ, பி மற்றும் சி—யின் இலாபம் மற்றும் நட்டத்தை பகிரும் விகிதமானது 2:1:2, 2000, டிசம்பர், 31ல் தங்கள் நிறுவனத்தை தனி கூட்டு கம்பெனியாக மாற்ற முடிவு செய்தனர். அந்நாளில் அந்நிறுவன இருப்பு நிலைக் தறிப்பு பின்வருமாறு:

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| முதல் கணக்கு: | | நற்பெயர் | 24,000 |
| ஏ 7,500 | | கார் | 15,000 |
| சி 25,500 | 33,000 | பெற வேண்டிய கழிவு | 3,000 |
| சி—யின் கடன் | 15,000 | சரக்கு | 12,000 |
| வங்கி மேல்வரைப்பற்று | 9,000 | கடனாளிகள் | 25,200 |
| பற்பல கடனீந்தோர் | 18,000 | ரொக்கம் | 3,000 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | 15,000 | முதல் க/கு பி | 9,000 |
| | 90,000 | | 90,000 |

எல்லா சொத்துக்களையும் (திரும்ப கிடைக்காத, பெற வேண்டிய கழிவு மற்றும் ரொக்கம் தவிர்த்து) மற்றும் எல்லாப் பொறுப்புகளையும் ரூ.60,000 மறுபயனுக்காக எடுத்துக் கொண்டு அதனை முழுமையாக செலுத்தப்பட சாதாரணப் பங்குகளாக ரூ.10 வீதம் 6000 பங்குகளை வழங்கியது. கணக்கை முடிக்கவும்.

(11) சுதிர் மற்றும் ரமேஷ் ஆகியோரது 31.12.1999 அன்று உள்ளபடி இருப்பு நிலைக்குறிப்பு.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர்கள் | 76,000 | வங்கி | 23,000 |
| திருமதி. சுதிர் கடன் | 20,000 | சரக்கிருப்பு | 12,000 |
| ரமேஷ் கடன் | 30,000 | கடனாளிகள் 40,000 | |
| காப்பு நிதி | 10,000 | கழி : காப்பு 2,000 | 38,000 |
| காப்பு நிதி | 10,000 | தளவாடம் | 8,000 |
| முதல் க/கு | | பொறி | 56,000 |
| சுதிர் | 20,000 | முதலீடுகள் | 20,000 |
| ரமேஷ் | 16,000 | லாப நட்ட க/கு | |
| | 1,72,000 | | 1,72,000 |

31.12.1999 அன்று நிறுவனம் கலைக்கப்பட்டது.

1) சுதிர் முதலீட்டை ரூ.16,000க்கு எடுத்துக் கொண்டார். மேலும் தனது மனைவி கடனை தானே அடைப்பதாக ஒப்புக்கொள்கிறார்.

2) சொத்துக்கள் கீழ்உள்ளவாறு விற்கப்பட்டது.

சரக்கிருப்பு ரூ.10,000, கடனாளிகள் ரூ.37,000, தளவாடம் ரூ.9,000, பொறி ரூ.5,000, கலைப்புச் செலவு ரூ.2,200.

3) கடனீந்தோர்கள் 2.5 சதவீதம் தள்ளுபடியில் கணக்கு முடிக்கப்பட்டது. சுதிர் மற்றும் ரமேஷ் லாப பகிர்வு விகிதம் 3:2 ஆகும். தீர்வு கணக்கு, வங்கி கணக்கு மற்றும் மூலதன கணக்குகளை காண்பிக்கவும்.

(விடை : நட்டம் ரூ.12,300, இறுதி செலுத்துதல்கள் சுதிர் ரூ.13,620, ரமேஷ் ரூ.9,080)

(12) பின் உள்ளது 31 மார்ச் 1991ல் P, Q மற்றும் R கூட்டாளிகள் இருப்பு நிலைக் குறிப்பாகும்.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| P முதல் க/கு | 25,000 | கட்டிடம் | 10,000 |
| R முதல் க/கு | 15,000 | தளவாடம் | 5,000 |
| P நடப்பு க/கு | 1,000 | சரக்கு | 23,100 |
| R நடப்பு க/கு | 500 | கடனாளிகள் | 30,000 |
| கடனீந்தோர்கள் | 30,000 | ரொக்கம் | 2,500 |

| | | | |
|---|---|---|---|
| கட்டிடத்தின் மேல் அடமானக்கடன் | 4,000 | Q முதல் க/கு | 4,900 |
| | 75,500 | | 75,500 |

கூட்டாளிகள் 6:3:5 விகிதத்தில் லாப நட்டத்தை பிரிக்கின்றனர். மேற்சொன்ன தேதியில் கூட்டாண்மை கலைக்கப்படுகின்றது. சொத்துக்கள் விற்ற விபரம் பின்வருமாறு:

கட்டிடம் ரூ.6,000, தளவாடம் ரூ.2,000, சரக்கு ரூ.15,000, கடனாளிகள் ரூ.20,000, கலைப்பு செலவு ரூ.2,000, கடனீந்தோர்கள் 1 ரூபாய்க்கு 75 பைசா வீதம் வாங்கிக் கொண்டு கணக்கை முடிவு செய்ய இசைந்துள்ளனர். ரு திவால் என்று அறிவிக்கப்பட்டுள்ளார். அவருடைய சொத்திலிருந்து இறுதி ஈவாக 50 பைசா வீதம் நீதிமன்றம் மூலம் பெறப்பட்டுள்ளது.

தீர்வு கணக்கு, வங்கிக் கணக்கு, மூலதன கணக்குகள் மற்றும் நடப்பு கணக்குகள் தயாரிக்கவும். மூலதன பற்றாக்குறையை பிரித்த முறையை தெளிவாக எடுத்துரைக்கவும்.

(விடை:தீர்வு நட்டம் ரூ.19,600, இறுதி செலுத்தல்கள் P ரூ.23,156, R ரூ. 13,794)

(13) A, B, C மற்றும் D ஆகியோர் சம கூட்டாளிகள். நிறுவனம் கலைக்கப்படும் போது அவர்களது இருப்பு நிலைக் குறிப்பு.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர்கள் | 45,000 | பற்பற சொத்துக்கள் | 63,000 |
| செ.மா.சீட்டு | 5,000 | வங்கி | 2,000 |
| டீ யின் கடன் | 3,000 | லாப நட்ட க/கு | 16,000 |
| முதல் கணக்கு: | 500 | எடுப்பு : | 30,000 |
| A | 23,000 | B | 3,000 |
| B | 6,000 | C | 3,000 |
| C | 4,000 | D | 3,000 |
| D | 4,000 | | |
| | 90,000 | | 90,000 |

ரூ.56,000க்கு சொத்துக்கள் விற்கப்பட்டன. கலைப்பு செலவு ரூ.1,000. கலைப்பு தேதியில் கூட்டாளிகள் நிலைமை பின்வருமாறு:

| | தனிப்பட்ட சொத்து (ரூ) | தனிப்பட்ட பொறுப்பு (ரூ) |
|---|---|---|
| A | 20,000 | 23,000 |
| B | 16,000 | 10,000 |
| C | 14,000 | 12,000 |
| D | 8,000 | 9,000 |

நிறுவனத்தின் ஏட்டை முடிக்கும் வகையில் பேரேட்டு கணக்குகளை தயாரிக்கவும்.

(விடை : தீர்வு நட்டம் ரூ.8,000)

(14) A, B மற்றும் C ஆகிய கூட்டாளிகள் 4/10, 5/10 மற்றும் 1/10 என்ற விகிதத்தில் லாபத்தை பிரித்துக் கொள்கின்றனர். அவர்களது நிறுவனம் கலைக்கப்படும் பொழுது அவர்களது இருப்பு நிலைக் குறிப்பு.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துக்கள் | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் | 10,000 | கையில் ரொக்கம் | 3,000 |
| A—யின் கடன் | 6,000 | பிற சொத்துக்கள் | 56,000 |
| B—யின் கடன் | 3,000 | | |
| பொதுக்காப்பு | 6,000 | | |
| உறுதியற்ற நிகழ்வு காப்பு | | | |
| A—யின் முதல் | | | |
| B—யின் முதல் | | | |
| C—யின் முதல் | | | |
| | 59,000 | | 59,000 |

சொத்துக்கள் பின்வருமாறு விற்கப்பட்டன.

முதல் தவணை ரூ.10,000, இரண்டாம் தவணை ரூ.20,000, மூன்றாம் தவணை ரூ.17,000 கலைப்பு தேதியில், உறுதியில்லாமல் இருந்த பொறுப்பு ரூ.1,000, இரண்டாம் தவணையின் பொழுது ரூ.700 செலுத்தி முடிக்கப்பட்டது. முதலில் தீர்வுச்செலவு ரூ.2,000 என மதிப்பிடப்பட்டு, பின்பு உண்மையில் ரூ.1,500 செலவழிக்கப்பட்டது. மூன்றாம் தவணையின் போது ‘C’ ரூ.500க்கு சரக்கு எடுத்துக்கொள்கிறார். மேலும், மூன்றாம் தவணையின் போது ரூ.600 செலுத்தி, ஒரு ஒதுக்கு

ஏற்படுத்தப்படாத ஒரு பொறுப்பை முடிக்க வேண்டியிருந்தது. உச்ச நட்ட அடிப்படையில், படிப்படியாக ரொக்கம் வழங்கல் பட்டியல் ஒன்றை தயாரிக்கவும்.

விடை:

| தவணை | A | B | C |
|---|---|---|---|
| I | ரூ.7,520 | ரூ.2,650 | ரூ.1,130 |
| II | ரூ.6,960 | ரூ.8,700 | ரூ.1,740 |

# பாடம் 2:

# வாடகை கொள்முதல்

கட்டமைப்பு



## 2.0. அறிமுகம்:

இன்றைய நவீன உலகில், ஒவ்வொருவரும் எல்லா வசதிகளையும் அனுபவிக்கு விரும்புகின்றனர். அவர்களுடைய வருமானத்தை கவனத்தில் கொள்ளாமல், இத்தகைய வசதிகளை அடைய எண்ணுகின்றனர். அதற்கு அவர்கள், அவர்களுடைய சேமிப்பு வளர்ந்து, இத்தகைய வசதிகளை வாங்குவதற்கு வாய்ப்பு வரும் வரை பொறுத்திருக்க வேண்டும். ஆனால் அந்த காலம் வரும்வதற்குள் அந்த பொருள் தேவையில்லாமல் போய்விடலாம். இந்த சூழ்நிலையில் வாடகை கொள்முதல் முறை ஒரு வரப்பிரசாதமாகும். இப்பொழுது மக்கள் தங்கள் தேவைகளை உடனே பூர்த்தி செய்து கொண்டு, சேமிப்பை தவணையாக செலுத்த முடியும். இதே முறை சிறு தொழில் முனைவோருக்கும் ஒரு கடவுளின் பரிசாக காட்சி அளிக்கின்றது. ஏனென்றால், தொழில் ஆரம்பிப்பதில் உள்ள முக்கிய பிரச்சனை இயந்திரம் மற்றும் கட்டுமான பொருள் வாங்குவதற்கான மூலதன தேவையாகும். இந்த மூலதன தேவையை வாடகை கொள்முதல்

பெருமளவு குறைத்து வருகின்றது. பெருமளவு மூலதனத்தை நடைமுறை முதலுக்கு ஒதுக்க முடிவதால் தொழில் நல்ல முறையில் நடத்த முடிகின்றது. நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கும் இந்த வாடகை கொள்முதல் மறைமுகமாக உதவுகின்றது.

## 2.1. கற்றல் நோக்கங்கள்

இந்த பிரிவை படித்த பின்பு உங்களால்,

— வாடகை கொள்முதல் முறையை தவணை கொள்முதல் முறையில் இருந்து வேறுபடுத்த முடியும்.

— வாடகை கொள்முதல் விலையை ரொக்கவிலை மற்றும் வட்டி என இரண்டாக பிரிக்க இயலும்.

— வாங்குபவர் மற்றும் விற்பவர் ஏட்டில் கணக்குகள் எழுத முடியும்.

— தவணைத் தொகை செலுத்த முடியாமல் போகும்பட்சத்தில் சொத்தை திரும்ப எடுத்துக் கொள்ளும் முறை பற்றியும் அதற்கான கணக்குபதிவையும் அறிந்து கொள்ளமுடியும்.

இன்றைய நவீன காலத்தில் விற்பனையை வளர்ப்பதற்கு பலவகையான புதிய கவர்ச்சிகரமான முறைகள் பின்பற்றப்படுகின்றன. அவைகளில் ஒன்று வாடகைக் கொள்முதல் முறையாகும் (Hire Purchase System). இந்த முறையில் ஒத்துக் கொள்ளப்பட்ட தொகையைச் சமமான காலத் தவணைகளில் தவணைத் தொகைகளாக விற்பனையாளருக்குச் செலுத்த ஒப்புக் கொண்ட ஒரு நபருக்கு சரக்குகள் அல்லது பொருட்கள் அளிக்கப்படுகின்றன. தொகையைச் செலுத்திய பின் அப்பொருள் வாங்குநருடைய சொத்தாகிறது. இங்கு ஒவ்வொரு தவணையும் வாங்குநருக்கு அளிக்கப்பட்ட பொருளுக்கு வாடகை எனக் கருதப்படும். தவணைகள் (கடைசித் தவணை உட்பட) செலுத்தத் தவறினால் வாங்குநருக்கு நட்ட ஈடு ஏதும் கொடுக்காமல் பொருளை எடுத்துக்கொள்ள விற்பனையாளருக்கு உரிமை உண்டு. அனைத்துத் தவணை தொகைகளும் செலுத்தப்படும் போது சரக்குகள் விற்பனையானதாகக்

கருதப்படும். ஆகவே அச்சரக்குகள் வாங்குநரின் சொத்தாகிவிடுகிறது. சரக்குகளின் மீதான சொத்துரிமை, கடைசி அல்லது முடிவுத் தவணை செலுத்தும் வரையில் வாங்குநருக்கு மாற்றப்படுவதில்லை.

வாடகை கொள்முதல் முறையின் அடிப்படையில் தவணைகள், மூலமாகச் செலுத்துகையில் செய்யப்படுவதால் செலுத்தப்படும் மொத்தத் தொகை சரக்குகளின் ரொக்க விலையை விட அதிகமாக இருக்கும். இங்குள்ள வித்தியாசத் தொகையானது கடன் காலத்தை அதிகப்படுத்தியதற்கான வட்டியாகும். எனவே காலத் தவணைகளின் செலுத்திய மொதத் தொகையும் சொத்துக் கணக்கில் பற்று வைத்தல் முறையானதன்று. ஏனெனில் இத்தொகையில் வட்டியும் அடங்கியுள்ளது. இதில் ஏற்படும் தவறால் கணக்கீடுகளில் உள்ள சொத்துக் கணக்கு அச்சொத்தின் உள்மதிப்பையும் விட அதிகத் தொகையினை காண்பிக்கும். ஆகவே ஒவ்வொரு தவணைத் தொகையிலும் உள்ள சொத்தின் விலையையும் வட்டியையும் சரியான முறையில் பிரித்து வட்டியை வருவாய்க் கணக்கில் பற்று வைத்து சொத்துக் கணக்கு சொத்தின் மதிப்பைச் சரியாகக் காண்பிக்க செய்ய வேண்டும்.

## 2.2. கணக்கேடுகளில் செய்ய வேண்டிய பதிவுகள்

1). விற்பனையாளரின் ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவுகள்

அ). வாடகைக் கொள்முதல் முறையில் விற்பனை செய்யும் பொழுது

| | | |
|---|---|---|
| வாங்குநர் க/கு | ப | தற்போதைய மதிப்பு |
| விற்பனை க/கு | | ரொக்க விலைக்காக |

ஆ). ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டு தொகையை பெற்ற பொழுது

| | | |
|---|---|---|
| வங்கி க/கு | ப | பெற்ற உண்மையான |
| வாங்குநர் க/கு | | தொகைக்காக |

இ). காலத் தவணைகளில் தவணைத் தொகை பெறப்பட வேண்டிய போது

| | | |
|---|---|---|
| வாங்குநர் க/கு | ப | கணக்கில் செலுத்தப்படாமலிருக்கும் தொகையின் |
| வட்டி க/கு | | மீதான வட்டிக்காக |

ஈ). ஒவ்வொரு தவணையும் பெற்ற போது

| | | |
|---|---|---|
| வங்கி க/கு | ப | பெற்ற உண்மையான |
| வாங்குநர் க/கு | | தொகைக்காக |

2). வாங்குநரின் ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவுகள்

வாங்குநரின் ஏடுகளில் வாடகைக் கொள்முதலின் நடவடிக்கைகளைப் பதிவதற்கு இரண்டு முறைகள் உள்ளன.

அ). வாடகைக் கொள்முதலை ஒரு சாதாரண கொள்முதல் நடவடிக்கை எனக் கருதும் போது

1). ஒரு பொருளை வாங்கியவுடன்

| | | |
|---|---|---|
| சொத்து க/கு | ப | ரொக்க விலைக்காக |
| விற்பனையாளர் க/கு | | |

2). ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டுள்ள ஒரு தொகையினைச் செலுத்திய பொழுது

| | | |
|---|---|---|
| விற்பனையாளர் க/கு | ப | செலுத்தப்பட்ட தவணைத் தொகைக்காக |
| வங்கி க/கு | | |

3). ஒவ்வொரு நிதியாண்டின் இறுதியிலும் இன்னும் செலுத்தப்படாமலிருக்கின்ற தொகையின் மீதான வட்டியைக் கணக்கிடும் போது

| | | |
|---|---|---|
| வட்டி க/கு | ப | செலுத்தப்படாமலிருக்கும் தொகையின் மீதான வட்டி |
| விற்பனையாளர் க/கு | | |

4). தவணைத் தொகையினைச் செலுத்தும் போது

| | | |
|---|---|---|
| விற்பனையாளர் க/கு | ப | செலுத்தப்படாமலிருக்கும் தொகையின் மீதான வட்டி |
| வங்கி க/கு | | |

5). சொத்தின் மீதான தேய்மானத்தை நீக்கும் போது

| | | |
|---|---|---|
| தேய்மான க/கு | ப | தேய்மானத் தொகைக்காக |
| சொத்து க/கு | | |

ஆ). முடிவாகக் கடைசித் தவணைத் தொகை செலுத்தும் போது தான் சொத்தின் உரிமை வாங்குநருக்கு மாற்றப்படுவதால் இவ்வாடகைக் கொள்முதலை வாங்குநர் ஒரு சாதாரணக் கொள்முதல் நடவடிக்கை எனக் கருதாத போது செய்ய வேண்டிய பதிவுகள்.

1. ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டவுடன் முதல் முறையில் செய்வதைப் போன்று இங்கு பதிவுகள் செய்யப்படுதில்லை. ஆனால ஒவ்வொரு தவணைத் தொகை செலுத்தும் போதும் பதிவுகள் செய்யப்படுகின்றன.

2. வாடகைக் கொள்முதல் ஒப்பந்தத்தின்படி ரொக்கமாக செலுத்த வேண்டிய போது

| | | |
|---|---|---|
| சொத்து க/கு | ப | ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டு செலுத்தப்பட வேண்டிய |
| விற்பனையாளர் க/கு | | தவணைத் தொகைக்காக |

3). ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டவுன் ரொக்கம் செலுத்தப்படும் போது

| | | |
|---|---|---|
| விற்பனையாளர் க/கு | ப | ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டு |
| வங்கி க/கு | | செலுத்தப்பட்ட தொகைக்காக |

4). தவணைத் தொகை செலுத்தப்பட வேண்டிய போது கொடுக்கப்பட வேண்டிய வட்டியும் சொத்துக் கணக்கிலிருந்து குறைக்கப்பட வேண்டிய தொகையும் முறையாகப் பிரிக்கப்படும்.

இப்போது செய்ய வேண்டிய பதிவுகள் கீழ்வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| சொத்து க/கு | ப | | செலுத்தப்படவேண்டிய தவணைத் தொகைக்காக |
| வட்டி க/கு | ப | | |
| | | விற்பனையாளர் க/கு | |

5). தவணைத் தொகை செலுத்தப்படும் போது

| | | |
|---|---|---|
| விற்பனையாளர் க/கு | ப | செலுத்தப்பட்ட தவணைத் தொகைக்காக |
| வங்கி க/கு | | |

6). தேய்மானத்தை நீக்கிய போது

| | | |
|---|---|---|
| தேய்மான க/கு | ப | தேய்மானத் தொகைக்காக |
| சொத்து க/கு | | தொகைக்காக |

குறிப்பு:

1. செலுத்துகைகளை செய்கின்ற போது மட்டுமே சொத்துக் கணக்கானது பற்று வைக்கப்பட்ட போதிலும் சொத்து முழுவதுமே வாங்கப்படுகிறது என்ற காரணத்தால், அச்சொத்தின் மொத்த ரொக்க விலையிலிருந்து தேய்மானம் நீக்கப்படுகிறது.
2. இறுதியாண்டில் செலுத்த வேண்டிய அல்லது பற்று வைக்கப்பட வேண்டிய வட்டியானது அவ்வாண்டில் செலுத்தப்பட வேண்டிய தவணைத் தொகைக்கும் மொத்தத் தொகையில் செலுத்தபடாமலிருக்கின்ற தொகைக்கும் இடையே உள்ள வித்தியாசமேயாகும். தவணைத் தொகைகள் பொதுவாக முழுத் தொகைகளாகவே இருப்பதால் கடைசி ஆண்டின் வட்டியானது சதவீத முறைப்படி கணக்கிடப்படுதில்லை.

## 2.3. வட்டி கணக்கிடுதல்

அ). வாடகைக் கொள்முதல் முறையில் வட்டியைக் கணக்கிடுதல் ஒரு முக்கியமான கட்டமாகும். சொத்தின் ரொக்கவிலைக்கே தவணைத் தொகையுடன் மொத்தத் தவணைகளின் எண்ணிக்கை ஆகியன கொடுக்கப்பட்டிருக்கும் போது எவ்வித சிரமும் இன்றி வட்டித் தொகையை கணக்கிட முடியும். நாம் இங்கு மனதில் கொள்ள வேண்டிய ஒரு விஷயம் கடைசித் தவணையில் செலுத்தும் வட்டியாகும். தவணைத் தொகைகள் முழுத் தொகைகளாக இருப்பதால் கடைசித் தவணைக்கான வட்டியானது அக்கடைசித் தவணைத் தொகைக்கும் மொத்தத் தொகையில் செலுத்தப்படாமலிருக்கின்ற தொகைக்கும் இடையேயுள்ள வித்தியாசமேயாகும்.

**உதாரணம்:**

2000 ஜனவரி 1ம் தேதி இராமன் என்பவர் கோபாலிடமிருந்து வாடகைக் கொள்முதல் முறையின் அடிப்படையில் ரூ.10,450 ரொக்க விலையுள்ள இயந்திரம் ஒன்றினை கீழ்க்கண்ட நிபந்தனைகளின் பேரில் வாங்கினார்.

அ). ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டவுடன் ரூ.3,000 செலுத்தப்பட வேண்டும்.

ஆ). மீதமுள்ள தொகையை 3 தவணைகளில் ஒவ்வொன்றும் ரூ.3,000 மாக ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் செலுத்த வேண்டும்.

இ). விதிக்கக் கூடிய வட்டி விகிதம் 10% ஆகும்.

கொடுக்கப்பட்டிருக்கும் நிபந்தனைகளின்படி செலுத்தப்பட வேண்டிய வாடகையைக் காண்பிப்பதற்காக விற்பனையாளர் (கோபால்) கணக்கினைக் காண்பிக்கவும்.

**வட்டியைக் கணக்கிடுவதற்கான செய்முறைக் குறிப்புகள்:**

ஒப்பந்தத்தின்படி செலுத்த வேண்டிய
மொத்தத் தொகை ரூ. 12,000

சொத்தின் ரொக்க விலை ரூ. 10,450

ஃ செலுத்த வேண்டிய வட்டி ரூ. 1,550

முதல் ஆண்டில் ரூ.7,450 (ரூ.10,450—3,000)க்கு 10% வட்டி வீதம் வட்டி=745. இரண்டாம் ஆண்டில் ரூ.5,195 (ரூ.7,450 + ரூ.745— ரூ.3,000)க்கு 10% வீதம் (பேரேட்டுக் கணக்கினை பார்க்கவும்) வட்டி ரூ.519.50

மூன்றாம் ஆண்டிற்கான வட்டி ரூ.285.50 அதாவது கடைசித் தவணையின் தொகைக்கும் மொத்தத் தொகையில் செலுத்தப்படாமலிருக்கின்ற தொகைக்கும் இடையேயுள்ள வித்தியாசம் ஆகும்.

விற்பனையாளர் கோபால் க/கு

ப. வ.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2000 ஜன1 டிச 31 | வங்கி க/கு<br>வங்கி க/கு<br><br>இருப்பு கீ/இ | ரூ.<br>3,000.00<br>3,000.00<br><br>5,195.00 | 2000 ஜன1 டிச 31 | இயந்திர க/கு<br>வட்டி க/கு<br>ரூ.7,450<br>(ரூ.10,450—3,000 | ரூ.<br>10,450.00<br><br><br>745.00 |
| | | 11,195.00 | | | 11,195.00 |
| 2001 | வங்கி க/கு<br><br>இருப்பு கீ/இ | 3,000.00<br><br>2,714.50 | 2001 ஜன1 டிச 31 | இயந்திர கீ/கொ<br>வட்டி க/கு<br>ரூ. 5,195ன் மீது 10% வீதம் | 5,195.00<br><br>519.00 |
| | | 5,714.00 | | | 5,714.00 |
| 2002 | வங்கி க/கு | 3,000 | ஜன1 டிச 31 | இயந்திர கீ/கொ<br>வட்டி க/கு<br>(மீதமுள்ள தொகை) | 2,714.00<br><br>285.00 |
| | | 3,000 | | | 3,000 |

ஆ). சொத்தின் ரொக்க விலையும் தவணைகளின் மூலம் செலுத்தப்படும் தொகைகளின் மொத்தமும் கொடுக்கப்படும் வட்டி விகிதமும் கொடுக்கப்படாதபோது மொத்தம் செலுத்தப்பட்ட வட்டியானது சொத்தின் ரொக்க விலைக்கும், ஒப்பந்தத்தின்படி செலுத்தப்பட்ட தொகைக்கும் இடையேயுள்ள வித்தியாசமாகும். இந்த வட்டித் தொகையானது ஒவ்வொரு

ஆண்டின் இறுதியிலும் செலுத்தப்படாமலிருக்கின்ற தொகைகளின் விகிதத்தில் பிரிக்கப்படுகின்றது.

**உதாரணம்:**

கண்ணன் என்பவர் ஒரு இயந்திரத்தை வாடகைக் கொள்முதல் ஒப்பந்தத்தின் அடிப்படையில் மூர்த்தியிடமிருந்து வாங்கினார். அந்த இயந்திரத்தின் ரொக்க விலை ரூ.18,000 மாக இருக்கிறது. ஒப்பந்த விகிதங்களின் படி ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டவுடன் கண்ணன் ரூ.4,000 செலுத்த வேண்டும். மீதித் தொகையை ஒவ்வொரு தவணையிலும் ரூ.4,000 வீதம் 4 தவணைகளில் ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் செலுத்த வேண்டும். ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் செலுத்தப்பட வேண்டிய வட்டியைக் கணக்கிடவும்.

| | |
|---|---|
| ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டவுடன் | ரூ. 4,000 |
| ஒவ்வொன்றிலும் ரூ. 4,000 வீதம் | |
| 4 தவணைகளின் | ரூ. 16,000 |
| மொத்தம் | ரூ. 20,000 |
| ரொக்க விலை | ரூ. 18,000 |
| செலுத்த வேண்டிய வட்டி | ரூ. 2,000 |

இந்தத் தொகையானது ரூ. 2,000த்தை ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் செலுத்தப்படாமலிருக்கின்ற தொகைகளின் விகிதத்தில் கீழ்க்கண்டவாறு பிரிக்கலாம்.

| ஆண்டு | ஆண்டின் இறுதியில் செலுத்தப்படாமலிருக்கும் தொகை | வட்டி பிரிக்கப்படும் விகிதம் | செலுத்த வேண்டிய வட்டி | சொத்துக் கணக்கில் பற்று வைக்கவேண்டியது |
|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| முதல் ஆண்டு | 16,000 | 4 | 800 | 4,000 |
| 2ஆம் ஆண்டு | 12,000 | 3 | 600 | 3,200 |
| 3ஆம் ஆண்டு | 8,000 | 2 | 400 | 3,600 |
| 4ஆம் ஆண்டு | 4,000 | 1 | 200 | 3,800 |
| | | | 2,000 | 18,000 |

ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டவுடன்

இ). சொத்தின் ரொக்க விலை கொடுக்கப்படாத போது நாம் ரொக்க விலையினைக் கண்டுபிடித்தல் மிகவும் அவசியம். அவ்வாறு கண்டு பிடிக்காவிட்டால் சொத்துக் கணக்கானது அச்சொத்தின் உள் மதிப்பினைக் காட்டிலும் அதிகமானதோர் தொகையினைக் காட்டும். ரொக்க விலையினைக் கணக்கிடுவதற்கு கடைசியில் செலுத்திய தவணைத் தொகையிலிருந்து வட்டியைக் கழிக்கும் ஒரு முறையினை அணுக வேண்டும். கடைசி செலுத்துகையில் செலுத்த வேண்டிய வட்டியைக் கணக்கிடவும். வட்டியைக் கீழ்வரும் ஒரு சாதாரணச் சூத்திரத்தின்படி

$$\frac{\text{வட்டி விகிதம்}}{100+\text{வட்டி விகிதம்}}$$

கணக்கிட்ட பின்பு சொத்தின் மதிப்பை கணக்கிடுவதற்காக அவ்வட்டியை கடைசித் தவணைத் தொகையிலிருந்து கழிக்கவும்.

கடைசித் தவணையில் அடங்கியுள்ள வட்டியினைக் கணக்கிட்ட பின்பு அவ்வட்டியை கடைசித் தவணைத் தொகையிலிருந்து கழிப்பதன் மூலம் அக்கடைசி ஆண்டின் தொடக்கத்தில் செலுத்தப்பட வேண்டிய தொகையினை நாம் காணலாம். இத்தொகையினை இறுதியாண்டிற்கு முந்திய ஆண்டின் இறுதியில் செலுத்தப்படாமலிருக்கும் மொத்தத் தொகை கிடைக்கும். இம்மொத்தத் தொகைக்கு வட்டி முன்புள்ள இவ்வாண்டின் தொடக்கத்தில் செலுத்தப் படாமலிருக்கின்ற வரையிலும் நாம் தொடர்ந்து செய்ய வேண்டும்.

**உதாரணம்:**

2003 ஜுன் 1ஆம் தேதியன்று காந்தியிடமிருந்து சாமி என்பவர் வாடகைக் கொள்முதல் முறையின் அடிப்படையில் கார் ஒன்றினை வாங்கினார். மொத்தம் செலுத்த வேண்டிய தொகை ரூ.24,000 ஆகும். ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டவுடன் ரூ.4,000 செலுத்தவும். மீதித் தொகையை ஒவ்வொரு தவணையிலும் ரூ.5,000 வீகிதம் 4 தவணைகளில் செலுத்தவும் ஒப்புக் கொள்ளப்பட்டது. விதிக்கப்படும் வட்டி விகிதம் 10% என ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆண்டு தோறும் செலுத்தப்படும்

ஒவ்வொரு தவணைத் தொகையிலும் அடங்கி உள்ள வட்டியையும் சொத்தின் விலையையும் பிரிக்கவும்.

மேலே கூறப்பட்ட விதியினை இங்கு உபயோகிக்கவும் ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் செலுத்தப்படாமலிருக்கும் தொகையின் மீது 1/11 என்று வட்டியை கணக்கிடவும். கடைசித் தவணைத் தொகையான ரூ.5,000த்தின் மீதான வட்டி ரூ.454 (5000x1/11) இருக்கும். இவ்வாறான வட்டி செலுத்தப்படுமானால் நான்காம் ஆண்டின் தொடக்கத்தில் கொடுக்கப் படாமலிருக்கின்ற தொகை ரூ.4,546 (5,000—454) ஆக இருக்கும். இத் தொகையானது மூன்றாம் ஆண்டின் இறுதியில் அவ்வாண்டுத் தவணை செலுத்திய பின் இருக்கும் தொகையாகும். இந்த மூன்றாம் ஆண்டும் தவணைத் தொகையை செலுத்துவதற்கு முன்பு கொடுக்கப்படாமலிருக்கின்ற தொகை ரூ.9,546 (5,000 + 4,546) ஆக இருக்கும். மூன்றாம் ஆண்டின் வட்டி ரூ.868 (9,546 x 1/11) ஆக இருக்கும்.

மூன்றாம் ஆண்டின் தொடக்கத்தில் செலுத்தப்படாமலிருக்கின்ற தொகை ரூ.8,676 (9,546—868) இத்தொகையானது இரண்டாம் ஆண்டின் இறுதியில் அவ்வாண்டின் தவணைத் தொகையைச் செலுத்திய பின் உள்ள இருப்பு ஆகும்.

இந்த இரண்டாம் ஆண்டுத் தவணையைச் செலுத்துவதற்கு முன்பு செலுத்தப்படாமலிருக்கின்ற தொகை ரூ.13,678 (8,678 + 5,000) இத்தொகையின் இரண்டாம் ஆண்டிற்கான வட்டி ரூ.1,243 (13,678 + 1/11) அடங்கியுள்ளது. எனவே இரண்டாம் ஆண்டின் தொடக்கத்தில் செலுத்தப்படாமலிருக்கின்ற தொகை ரூ.12,435 (ரூ.13,678 – 1,243) ஆகும். இத்தொகையானது முதல் ஆண்டின் இறுதியில் முதல் தவணையாகிய ரூ.5,000த்தைச் செலுத்திய பின்புள்ள தொகை ஆகும். இந்த முதல் தவணையைச் செலுத்துவதற்கு முன்புள்ள தொகையாகிய

ரூ.17,435 (12,435 + 5,000)ல் முதல் ஆண்டிற்கான வட்டியும் அடங்கி உள்ளது.

எனவே வட்டி ரூ.1,585 (17,435 x 1/11) ஆகும். சொத்திற்கான தொகை ரூ.15,850 (17,435—1,585). மொத்தத்தில் தவணைகள் மூலமாக செலுத்தப்பட்ட ரூ.20,000த்தில் ரூ.15,850 முதலாகக் கருத வேண்டும். மீதமுள்ள தொகையான ரூ.4,150யை வட்டிக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். இத்தொகையை தவிர ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டவுடன் நாம் ரூ.4,000 செலுத்தி இருக்கிறோம். எனவே ரொக்க விலை ரூ.19,850 (15,850+4,000) என நாம் கூற முடியும்.

மேற்கண்ட எடுத்துக்காட்டினை கீழ்க்கண்டவாறு அட்டவணை முறையில் அமைக்கலாம்.

| ஆண்டு | ஆண்டின் இறுதியில் செலுத்தப்படாமலிருக்கும் தொகை (தவணைத் தொகையைச் செலுத்திய பின்பு) | செலுத்திய தவணைத் தொகை | ஆண்டின் இறுதியில் செலுத்தப்படாமலிருக்கும் மொத்தத் தொகை (தவணைத் தொகையைச் செலுத்திய பின்பு) | வட்டி 1/11 என்ற விகிதத்தில் | ஒவ்வொரு ஆண்டின் தொடக்கத்திலும் உள்ள சொத்திற்கான தொகை (பின்பு) |
|---|---|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| 4வது ஆண்டு | இல்லை | 5,000 | 5,000 | 454 | 4,546 |
| 3வது ஆண்டு | 4,546 | 5,000 | 9,546 | 868 | 8,678 |
| 2ஆம் ஆண்டு | 8,678 | 5,000 | 13,678 | 1.243 | 12,435 |
| முதல் ஆண்டு | 12,435 | 5,000 | 17,435 | 1,585 | 15,850 |
| | | | | 4,150 | |

மேலும் ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டவுடன் ரூ.4,000 செலுத்தப்பட்டது. எனவே ரொக்க விலை ரூ.19,850 (15,850 + 4,000) ஆகும். நான்கு ஆண்டுகளுக்கான வட்டி முறையே ரூ.1,585 ரூ.1,243 ரூ.868 மற்றும் 454 ஆகும்.

**எடுத்துக்காட்டு: 1**

2002 ஜனவரி 1ஆம் தேதியன்று காந்தி அன் கோ வாடகைக் கொள்முதல் முறையின் அடிப்படையில் பாலன் அன் கோவிடமிருந்து ரூ. 35,775 ரொக்க விலையுள்ள லாரி ஒன்றினைக் கீழ்க்கண்ட நிபந்தனைகளின் பேரில் வாங்கியது.

அ). ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டவுடன் (1.1.2002) ரூ.10,000 செலுத்தப்பட வேண்டும்.

ஆ). மீதத் தொகையை ஒவ்வொரு தவணையிலும் ரூ.10,000 வீதம் 3 தவணைகளில் ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் செலுத்த வேண்டும்.

இ). செலுத்த வேண்டிய வட்டி விகிதம் 8% ஆகும்.

ஈ). ஒவ்வொரு ஆண்டும் நீக்க வேண்டிய தேய்மானம் 10% ஆகும். இரண்டு நபர்களின் ஏடுகளிலும் தேவையான பேரேட்டுக் கணக்குகளை காண்பிக்கவும்.

**செய்முறை குறிப்புகள்:**

வட்டிக் கணக்கிடுதல்

| | |
|---|---|
| லாரியின் ரொக்க விலை | ரூ.35,775 |
| 1.1.2002 செலுத்திய ரொக்கம் | ரூ. 10,000 |
| 1.1.2002 உள்ள மீதத் தொகை | ரூ. 25,775 |

ஆகவே முதல் ஆண்டில் செலுத்த வேண்டிய வட்டித் தொகை ரூ.2,062 (25,775 x 8/100)ஆகும். இரண்டாம் ஆண்டில் மீதமுள்ள தொகை ரூ.17,837 அதாவது 25,775 + 7,938 (10,000—2062=7938) எனவே இரண்டாம் ஆண்டிற்கான

வட்டி = 17,837 x 8/100 — ரூ.1,426.96

மூன்றாம் ஆண்டிற்கான வட்டி = செலுத்த வேண்டிய கடைசித் தொகை மொத்தத் தொகையில் செலுத்தப்படாமலிருக்கின்ற தொகை ரூ.10,000 – 9,263.00 – 736.04

விடை: பாலன் அன் கோ ஏடு

காந்தி அன் கோ க/கு

| ப. | | | | | வ. |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| 1.1.02 | விற்பனை க/கு | 35,775 | 1.1.02 | வங்கி க/கு | 10,000 |
| 31.12.02 | வட்டி க/கு | 2,062 | 31.12.02 | வங்கி க/கு | 10,000 |
| | | | 3.12.02 | இருப்பு கீ/இ | 17,837 |
| | | 37,837 | | | 37,837 |
| 1.1.03 | இருப்பு கீ/கொ | 17,837 | 31.12.03 | வங்கி க/கு | 10,000 |
| 21.2.03 | வட்டி க/கு | 1,427 | 31.12.03 | இருப்பு கீ/இ | 9,264 |
| | | 19,264 | | | 19,264 |
| 1.1.04 | இருப்பு கீ/கொ | 9,264 | 31.12.04 | வங்கி க/கு | 10,000 |
| 31.12.04 | வட்டி க/கு | 736 | | | |
| | | 10,000 | | | 10,000 |

வட்டி க/கு

| ப. | | | | | வ. |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| 31.12.02 | லாபநட்ட க/கு | 2,062 | 31.12.02 | காந்தி அன் கோ க/கு | 2,062 |
| | | 2,062 | | | 2,062 |
| 31.12.03 | லாபநட்ட க/கு | 1,427 | 31.12.03 | காந்தி அன் கோ க/கு | 1,427 |
| | | 1,427 | | | 1,427 |
| 31.12.04 | லாபநட்ட க/கு | 736 | 31.12.04 | காந்தி அன் கோ க/கு | 736 |
| | | 736 | | | 736 |

காந்தி அன் கோ ஏடு

பாலன் அன் கோ க/கு

| ப. | | | | | வ. |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| 1.1.02 | வங்கி க/கு | 10,000 | 1.1.02 | லாரி க/கு | 35,775 |
| 31.12.02 | வங்கி க/கு | 10,000 | 31.12.02 | வட்டி க/கு | 2,062 |
| 31.12.02 | இருப்பு கீ/இ | 17,837 | | | |
| | | 37,837 | | | 37,837 |
| 31.12.03 | வங்கி க/கு | 10,000 | 31.12.03 | இருப்பு கீ/கொ | 17,837 |
| 31.12.03 | இருப்பு கீ/இ | 9,264 | 31.12.03 | வட்டி க/கு | 1,427 |
| | | 19,264 | | | 19,264 |
| 1.1.04 | இருப்பு கீ/கொ | 9,264 | 31.12.04 | வங்கி க/கு | 10,000 |
| 31.12.04 | வட்டி க/கு | 736 | | | |
| | | 10,000 | | | 10,000 |

லாரி க/கு

| ப. | | | | | வ. |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| 1.1.02 | பாலன் அன் கோ க/கு | 35,775 | 31.12.02<br>31.12.02 | தேய்மானம் க/கு<br>இருப்பு கீ/இ | 3,578<br>32,197 |
| | | 35,775 | | | 35,775 |
| 31.12.03 | இருப்பு கீ/கொ | 32,197 | 31.12.03<br>31.12.03 | தேய்மானம் க/கு<br>இருப்பு கீ/இ | 3,578<br>28,619 |
| | | 32,197 | | | 32,197 |
| 31.12.04 | இருப்பு கீ/கொ | 28,619 | 31.12.04 | தேய்மானம் | 3578 |
| | | 28,619 | | இருப்பு கீ/இ | 25041 |

குறிப்பு:

1. தேய்மானம் ஆரம்பச் சொத்து மதிப்பில் ஒவ்வொரு ஆண்டும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அதாவது Straight Line Method
2. காந்தி அன் கோ ஏட்டிலும் வட்டி கணக்கு காண்பிக்கலாம். அதுவும் லாப நட்ட கணக்கிற்கு மாற்றப்படும்.

## 2.4. சரக்குகளை மீண்டும் எடுத்துக் கொள்ளல் (Re-Possession)

வாடகை கொள்முதல் முறையில் வாங்குநர் தவணை கட்டத் தவறினால் சரக்குகளை விற்றவர் மீண்டும் எடுத்துக் கொள்ளலாம். முழுமையாகவோ அல்லது பகுதியாகவோ எடுத்துக் கொள்ளலாம். அதுவரை வாங்குநர் செலுத்திய தொகையையும் திருப்பித் தர வேண்டியதில்லை.

### முதல் முறை

வாங்குநர் அவருடைய ஏடுகளில் ஏற்கனவே சொத்துக் கணக்கினை அச்சொத்தின் முழு ரொக்க விலைக்குமாகப் பற்று வைத்து விற்பனையாளர் கணக்கினை வரவு வைத்திருக்கும் பட்சத்தில் விற்பனையாளரின் சொத்துக் கணக்கிற்கு மாற்றி விட்டு மீதித் தொகையை நீக்கி விட வேண்டும்.

குறிப்பு

**உங்கள் முன்னேற்றத்தை அறிந்து கொள்ள உதவும் வினாக்கள்**

அ) வாடகை கொள்முதல் முறையில், கடைசி தவணை செலுத்தும் வரை, சொத்தின் மீது உள்ள உரிமை .................. மே இருக்கும்.

ஆ) வாடகை கொள்முதல் விலை–ரொக்க விலை = ....................

இ) தவணை செலுத்தாததால் திரும்ப எடுத்துக் கொள்ளப் பட்ட பொருள் விற்பனை யாளர் ஏட்டில் ........... பக்கம் ................ கணக்கில் மாற்றப்படும்.

ஈ) வட்டி விகிதம் கொடுக்கப்படவில்லை எனில், மொத்தவட்டித் தொகை ................, ................ அடிப்படையில் பிரிக்கப்படும்.

உ) விற்ற எல்லாப் பொருளையும் திரும்ப எடுத்தல் ........................ என்றும், குறிப்பிட்ட பொருள்களை மட்டும் திரும்ப எடுத்தல் ........................ என்றும் சொல்லப்படும்.

**இரண்டாவது முறை**

மாறாக உண்மையில் தொகைகள் செலுத்தப்படும் போது மட்டும் வாங்குநர் சொத்துக் கணக்கினை பற்று வைத்திருப்பாரேயானால் சொத்துக் கணக்கிலுள்ள இருப்பு (வாங்குநருக்கு ஒரு நட்டம் ஆகும்) நீக்கப்பட வேண்டும்.

**எடுத்துக்காட்டு: 2**

2001 ஜுலை 1ஆம் தேதியன்று மணி ஒரு இயந்திரத்தை வாடகைக் கொள்முதல் முறையின் அடிப்படையில் வாங்கினார். இயந்திரத்தின் ரொக்க விலை ரூ.8,940.40 ஆகும். நிபந்தனைகளின்படி ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டவுடன் செலுத்த வேண்டியது ரூ.2,000 ஆகும். மீதித் தொகை ஒவ்வொரு தவணையிலும் ரூ.2,000 என ஆண்டு தவணைகளில் செலுத்த வேண்டும். ஒவ்வொரு ஆண்டும் செலுத்த வேண்டிய வட்டி விகிதம் 10% ஆகும். மணி 10 சதவீதம் தேய்மானம் நீக்கினார். அவரால் 2002 டிசம்பர் 31ல் தவணைத் தொகையினைச் செலுத்த முடியவில்லை. ஆகவே இயந்திரத்தை விற்பனையாளரே எடுத்துக் கொண்டார் மணிக்கு ஏற்பட்ட நட்டத்தினை காண்பிக்கவும். இயந்திர க/கு மற்றும் விற்பனையாளர் க/கு ஆகியவற்றைத் தயாரிக்கவும். தொகைகளை முழு ரூபாயின் அளவிலேயே எழுதவும்.

**இயந்திர க/கு**

ப. வ.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2001 | | ரூ. | 2001 டிச 1 | | ரூ. |
| ஜுலை | விற்பனையாளர் க/கு | 8,940.00 | | தேய்மான க/கு (ரூ.8,940க்கு 6 மாதங்களுக்கு 10% | 447.00 |
| | | | | இருப்பு கீ/இ | 8,493.00 |
| | | 8,940.00 | | | 8940.00 |
| 2002 ஜுன் | இருப்பு கீ/கொ | 8,493.00 | | தேய்மான க/கு (ரூ.8,940க்கு 10% | 849.00 |
| | | | | விற்பனையாளர் க/கு (கொடுக்க வேண்டிய தொகை – கொடுக்கப்படவில்லை) | 3,898.00 |
| | | | | இலாப நட்ட க/கு (மீதமுள்ள தொகை) | 3,746.00 |
| | | 8,493.00 | | | 8,493.00 |

இக் கணக்கிலே தேய்மானத்தை நிலைத்த தவணை முறையிலோ அல்லது குறைந்து செல் இருப்பு முறையிலோ கணக்கிட வேண்டுமென சொல்லப்படவில்லை. இங்கே தேய்மானம் குறைந்து செல் இருப்பு முறையில் கணக்கிடப்படுகிறது.

**விற்பனையாளர் க/கு**

ப. வ.

| | | | | |
|---|---|---|---|---|
| 2001 ஜூலை | வங்கி க/கு<br>வங்கி க/கு<br>இருப்பு கீ/இ | ரூ.<br>2,000.00<br>2,000.00<br>5,356.00 | இயந்திர க/கு<br>வட்டி க/கு (ரூ.6,940க்கு 6 மாதங்களுக்கு 12% | ரூ.<br>8,940.00<br>416.00 |
| | | 9,356.00 | | 9,356.00 |
| 2002 ஜூன் | வங்கி க/கு<br>இருப்பு கீ/இ | 2,000.00<br>3,677.00 | இருப்பு கீ/கொ<br>வட்டி க/கு (12 வீதம்) | 5,356.00<br>321.00 |
| | | 5,677.00 | | 5,677.00 |
| 2002 டிச 31 | இயந்திர க/கு (செலுத்த முடியாததால் மாற்றப்படுகிறது) | 3,898.00 | இருப்பு கீ/கொ<br>வட்டி க/கு 221 (12 வீதம்) | 3,677.00<br>221.00 |
| | | 3,898.00 | | 3,898.00 |

2002 டிசம்பர் 31ல் முடிவடையும் அரையாண்டிற்கு செலுத்த வேண்டிய வட்டியான ரூ.221ம் அத்தோடு ரூ.3,898 மணிக்கு நட்டமாகிறது.

**எடுத்துக்காட்டு: 3**

மூர்த்தி அன் கோ கோபால் அன் கோவிடமிருந்து ஒவ்வொன்றும் ரூ.40,000 என நான்கு மோட்டார் வேன்களை கீழ்வரும் நிபந்தனைகளின் பேரில் வாடகைக்கு கொள்முதல் முறையின் அடிப்படையில் வாங்கியது. ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டவுடன் ரூ.40,000 பின்னர் ரூ.40,000 வீதம் 3 தவணைகளில் செலுத்த வேண்டும். மூர்த்தி அன் கோ குறைந்த செல் இருப்பு முறையின் அடிப்படையில் 20 சதவீதம் தேய்மானம் எழுதுகிறது. இரண்டாம் ஆண்டில் இறுதியில் செலுத்தப்பட வேண்டிய தொகையினை மூர்த்தி அன் கோ செலுத்த முடியாததால் மீதி இருப்பினை சரிக்கட்டுவதற்காக கோபால் அன் கோ வருடத்திற்கு 20 சதவீதம்

குறிப்பு

**சரியா தவறா எனச் சொல்லவும்**

1. வாடகை கொள்முதல் முறையில், தவணை தவறும் பட்சத்தில் விற்ற பொருளை திரும்ப எடுத்துக் கொள்ள முடியும்.

2. வட்டிவிகிதம் கொடுக்கப்பட வில்லையெனில், மொத்த வட்டியும் அனைத்து வருடங்களுக்கும் சமமாக பிரிக்கப்படும்.

3. பொருளை திரும்ப எடுக்கும் பொழுது, விற்பனை யாளர் ஏட்டில் விற்பனை திருப்பம் கணக்கு பற்று வைக்கப்படும்.

4. வாடகை கொள்முதல் முறையில் செலுத்தப்படும் தவணையில் வட்டி சேர்ந்தி ருக்கலாம் அல்லது சேராமலும் இருக்கலாம்.

5. வாடகை கொள்முதல் செய்தவர் ஏட்டில், வாடகை கொள்முதல் விலையில் சொத்து கணக்கு பற்று வைக்கப்படும்.

தேய்மானத்தை நீக்கி விட்டு இரண்டு மோட்டார் வேன்களை மூர்த்தி அன் கோவிடமிருந்து எடுத்துக் கொண்டது. மூர்த்தி அன் கோவின் ஏடுகளில் தேவையான கணக்குகளைத் தயாரிக்கவும்.

**மோட்டார் வேன்கள் க/கு**

ப. வ.

| | | ரூ. | | ரூ. |
|---|---|---|---|---|
| முதல் ஆண்டு | வங்கி க/கு | 40,000.00 | தேய்மான க/கு | 32,000.00 |
| | வங்கி க/கு | 40,000.00 | இருப்பு கீ/இ | 46,000.00 |
| | | 80,000.00 | | 80,000.00 |
| 2ம் ஆண்டு | இருப்பு கீ/கொ | 48,000.00 | தேய்மானக் க/கு | 25,600.00 |
| | கோபால் அன் கோ (விற்பனையாளருக்கு கொடுக்க வேண்டிய தொகை) | 48,800.00 | இலாப நட்ட க/கு (மீதமுள்ள தொகை) | 20,000.00 |
| | | | இருப்பு கீ/இ (2 வேன்களுக்கு 2 ஆண்டுகளுக்கு 20 தேய்மானம் போக) | 51,200.00 |
| | | 96,800.00 | | 96,800.00 |
| 3ஆம் ஆண்டு | இயந்திர கீ/கொ | 51,200.00 | | |

ஒவ்வொன்றும் ரூ.40,000 விலையுள்ள நான்கு மோட்டார் வேன்களுக்கு 20 சதவீதம் தேய்மானம் ரூ.32,000 (1,60,000 x 20/100)

உண்மையான விலை ரூ.1,60,000 தேய்மானம் ரூ.32,000 மீதி 1,28,000 குறைந்து செல் இருப்பு முறையில் தேய்மானம்

ரூ.25,600 (1,28,000 x 20/100)

**கோபால் அன் கோ க/கு**

ப. வ.

| | | ரூ. | | ரூ. |
|---|---|---|---|---|
| 2001 ஜூலை | வங்கி க/கு | 40,000.00 | மோட்டார் க/கு | 1,60,000.00 |
| | வங்கி க/கு 40,000 + 12,000 | 52,000.00 | வட்டி க/கு (1,20,000 க்கு 10%) | 12,000.00 |
| | இருப்பு கீ/கொ | 80,000.00 | | |
| | | 1,72,000.00 | | 1,72,000.00 |
| 2002 ஜூன் | மோட்டார் க/கு | 48,800.00 | இருப்பு கீ/கொ | 80,000.00 |
| | இருப்பு கீ/இ | 39,200.00 | வட்டி க/கு | 8,000.00 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | இருப்பு கீ/இ | 88,000.00 | 3ம் ஆண்டு | வட்டி க/கு | 88,000.00 |
| | | | | இருப்பு கீ/கொ | 39,200.00 |

## 2.5. அருஞ்சொற்கள்

**பொருளை திரும்ப எடுத்தல் :**

தவணையை சரியாக செலுத்தாவிட்டால், விற்பனையாளர் விற்ற பொருளை திரும்ப எடுத்துக் கொள்வது.

**வாடகை கொள்முதல் விலை :**

ரொக்க விலை மற்றும் வட்டி சேர்ந்த தொகை

## 2.6. தொகுத்தறிவோம்

பொருளுக்கான விலையை முழுவதுமாக கொடுப்பதற்கு முன்பாகவே, பொருளை அனுபவிப்பதற்காக ஏற்பட்ட ஒரு வசதிதான் வாடகை கொள்முதல் முறை. நடுத்தர மக்கள் மற்றும் சிறு தொழில்முனைவோருக்கு இந்த முறை ஒரு வரப்பிரசாதமாகும். இயந்திரத்தை வாங்கி, அதை பயன்படுத்தி, வரும் லாபத்திலிருந்து தவணையை செலுத்துவதுதான இதன் சிறப்பம்சம். நடுத்தர மக்களின் சேமிப்பு வளர்ந்து, பின் அதை வைத்து பொருளை வாங்குவதற்கு பதிலாக, பொருளை வாங்கி, அதனை அனுபவித்துக் கொண்டே, சேமிப்பை தவணையாக செலுத்தமுடிவதுதான் இதன் சிறப்பு. ஆனால் தவணை முழுமையாக செலுத்தப்படாவிட்டால், விற்பனையாளர் பொருளை திரும்ப எடுத்துக் கொள்ள முடியும். மேலும் இதுவரை செலுத்திய தொகை திரும்ப கிடைக்காது. அது பொருளை இதுவரை பயன்படுத்தியதற்கான வாடகையாக கொள்ளப்படும். கடைசி தவணை (செலுத்தப்படும் வரை பொருள் மீது உள்ள உரிமை) விற்பனையாளரிடமே இருக்கும் என்பது இதன் சட்டபூர்வ அம்சமாகும்.

## 2.7. உங்கள் முன்னேற்றத்தை அறிந்து கொள்ள உதவும் வினாக்களின் விடைகள்:

**கோடிட்ட இடத்தை நிரப்புக:**

(அ) விற்பனைசெய்தவரிடமே (ஆ) வட்டி

(இ) பற்று, பொருள் திரும்ப எடுத்துக்கொண்ட கணக்கு

(ஈ) செலுத்தப்படாத தொகை (உ) மொத்தமாக திரும்ப பெறுதல், பகுதி திரும்ப பெறுதல்

**சரியா / தவறா:**

(1) சரி (2) தவறு (3) தவறு (4) சரி (5) தவறு

## 2.8. மாதிரி வினாக்கள்:

1. வாடகை கொள்முதல் மற்றும் தவணை கொள்முதல் — வேறுபடுத்துக.

2. சிறு குறிப்பு வரைக. அ) பொருளை திரும்ப எடுத்துக் கொள்ளுதல் கணக்கு

ஆ) வாடகை கொள்முதல் விலை.

3. 1, ஜனவரி 2000ல் துர்கா & கம்பெனி, ஆட்டோகார் கம்பெனியிடமிருந்து ஒரு மோட்டார் சைக்கிளை வாடகை கொள்முதல் முறையில் வாங்கியது. முன்பணம் ரூ.2000. மீதி ரூ.3000 வீதம் ஐந்து தவணைகள் ஒவ்வொரு ஆண்டும் 31 டிசம்பரில் செலுத்த வேண்டும். வட்டி விகிதம் 5% ஒரு ஆண்டிற்கு எனக் கொண்டும், ரொக்க விலை ரூ.15,000ம் என வைத்து வாங்குபவர் ஏட்டில் விற்பனையாளர் கணக்கு, மோட்டார் சைக்கிள் கணக்குகளை தயாரிக்கவும். தேய்மானம் குறைந்து செல்முறையில் 20% ஆகும்.

(விடை : மோட்டார் சைக்கிள் கணக்கு இருப்பு ரூ.4,915; வட்டி ரூ.650; ரூ.533; ரூ.409; ரூ.280 மற்றும் ரூ.128).

(4) 1 ஜனவரி, 2002—ல் இராமன் ஒரு இயந்திரத்தை வாடகை கொள்முதல் முறையில் வாங்குகிறார்.

பிற விபரங்கள்:

- — ரொக்க விலை ரூ.10,000
- — முன்பணம் ரூ.4,000
- — மீதி தொகையை 3 தவணைகளில் ரூ.2,000 மற்றும் 5% வட்டி சேர்த்து செலுத்த வேண்டும்.
- — தேய்மானம் ஆண்டிற்கு 10% நிலைத்தவணைமுறையில்
- — 31 டிசம்பரில் கணக்கு முடிக்கப்படுகின்றது.

குறிப்பு பதிவுகளை எழுதி, வாங்குபவர் பேரேட்டு கணக்குகளை தயாரிக்கவும்.

(விடை : இயந்திர இருப்பு ரூ.7,000; வட்டி ரூ.300; ரூ.200; ரூ.100)

(5) 1.1.2003 அன்று 'ஏ' என்பவர் 5 இயந்திரங்களை வாடகை கொள்முதல் முறையில் வாங்கினார். ரொக்கவிலை ஒன்றுக்கு ரூ.55,000. செலுத்தும் முறை: 10% முன்பணம் 25% ரொக்கவிலை ஒவ்வொரு அரை ஆண்டு முடிவிலும் செலுத்தப்பட வேண்டும்.

வாங்கபவரால் 31.12.2003 அன்று செலுத்த வேண்டிய தவணைத்தொகையை செலுத்த இயலவில்லை. பேச்சுவார்த்தைக்கு பின்பு, விற்பனையாளர் இரண்டு இயந்திரத்தை மட்டும் 25% தேய்மான அடிப்படையில் எடுத்துக் கொள்கிறார். மீதி 3 இயந்திரத்தை 'ஏ' தன்னிடம் வைத்துக் கொள்கிறார். 'ஏ' தன் கணக்கை ஒவ்வொரு ஆண்டும் 30 ஜுலை முடிக்கின்றார். அவர் தேய்மானம் 15% இயந்திரத்தின் உண்மை விலையில் எழுதுகின்றார்.

விற்பனையாளர், தான் மீட்ட இயந்திரத்திற்கு ரூ.6,000 செலவு செய்து புதுப்பித்து, ரூ.95,000க்கு விற்கிறார். இருவரது ஏட்டிலும் கணக்குகள் தயாரிக்கவும்.

(விடை : திரும்ப பொருள் எடுத்ததில் நட்டம் ரூ.11,000, விற்பனையாளருக்கு லாபம் ரூ.6,5000)

# பாடம் 3
# தவணைக் கொள்முதல்

கட்டமைப்பு

3.0. அறிமுகம்

3.1. கற்றல் நோக்கங்கள்

3.2. அருஞ்சொற்கள்:

3.3. தொகுப்புரை

3.4. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பயிற்சி வினாக்களின் விடைகள்:

3.5. மாதிரி வினாக்கள்

## 3.0. அறிமுகம்

தவணை முறையில் பொருட்களை வாங்கும்பொழுது நடுத்தர மக்களுக்கும் மற்றும் சிறுதொழில் முனைவோருக்கும், முழு விலையை செலுத்துவதற்கு முன்பாகவே, வாங்கி பொருளை அனுபவிக்க அல்லது பயன்படுத்த முடிகின்றது. ஆனால், முழு தவணையையும் செலுத்த முடியாமல் போகும்பட்சத்தில் விற்ற பொருளை திரும்ப எடுக்கும் அதிகாரம் அல்லது வரவேண்டிய தொகைக்கு நீதிமன்றத்தை அணுகுவது என்ற இரண்டு அடிப்படை விசயம்தான் வாடகை கொள்முதல் மற்றும் தவணை கொள்முதல் என்னும் இரண்டு முறையையும் வேறுபடுத்துகின்றது. பல தவணைகள் செலுத்தியபின்பு, ஒரு சில தவணைகள் செலுத்த முடியாத சூழ்நிலையில் கூட, வாங்கி பொருளையும் இழந்து, இதுவரை செலுத்திய பணத்தையும் இழக்க கூடிய நிலை வாங்குபவருக்கு ஏற்படுகின்றது. இந்த சூழ்நிலையை தவணை கொள்முதல் முறை தவிர்த்து வாங்குபவர் மற்றும் விற்பனையாளர்கள் இருவரும் சட்டபூர்வ நடவடிக்கையில் இறங்கிட உதவுகின்றது.

## 3.1. கற்றல் நோக்கங்கள்

இந்தப்பிரிவை படித்த பின்பு நீங்கள்,

— வாடகை கொள்முதல் முறையை தவணை கொள்முதல் முறையிலிருந்து வேறுபடுத்த முடியும்.

— தவணைக் கொள்முதல் முறையில் வாங்கும்பொழுது வாங்குபவர் விற்பவர் ஏட்டில் பேரேட்டு கணக்குகள் தயாரிக்க இயலும்.

— தவணையை முழுமையாக செலுத்த முடியாமல் போகும்பட்சத்தில் கணக்குகளை முடிக்க இயலும்.

தவணைக் கொள்முதல் முறையில் (Installment System) விற்பனைச் செய்யப்படும் போது சொத்தின் மீதான உரிமை உடனடியாக வாங்குபவருக்கு மாற்றப்படுகிறது. ஆகவே இங்கு செய்யப்படும் பதிவுகளின் தன்மையையும் முறையும் வாடகைக் கொள்முதல் முறையில் செய்யப்பட்ட பதிவுகளினின்றும் மாறுபட்டு உள்ளது.

தவணைக் கொள்முதல் முறையில் ஒரு கொள்முதல் செய்யப்படும் பொழுது வாங்குநர் சொத்தினுடைய ரொக்க விலையை சொத்துக் கணக்கிலும் இந்த நடவடிக்கையின் காரணமாக செலுத்தப்பட வேண்டிய மொத்த வட்டித் தொகையை வட்டி இடைநிலைக் கணக்கிலும் பற்று வைத்து சொத்தின் ரொக்க விலை மற்றும் செலுத்த வேண்டிய வட்டி ஆகிய இரண்டின் மொத்தத்திற்காக விற்பனையாளர் கணக்கினை பற்று வைத்து வங்கிக் கணக்கினை வரவு வைக்க வேண்டும். ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் அவ்வாண்டுத் தவணைத் தொகையில் அடங்கியுள்ள வட்டித் தொகை வட்டி இடைநிலைக் கணக்கிலிருந்து கணக்கு பற்று வைக்கப்படும். அனைத்து தவணைத் தொகைகளும் செலுத்தப்பட்டு விட்ட போது வட்டி இடைநிலைக் கணக்கு தானாகவே முந்து விட்டது. அதே நேரத்தில் ஏடுகளில் சொத்துக் கணக்கு அதனுடைய உள்மதிப்பில் காண்பிக்கவும்.

தவணைக் கொள்முதல் முறையில் ஒரு விற்பனையைச் செய்தவுடன் விற்பனையாளர் அனைத்துத் தவணைகளின் மூலமாக வாங்குநர் செலுத்த வேண்டிய மொத்தத் தொகைக்காக அவருடைய

கணக்கினைப் பற்று வைத்து சொத்தின் ரொக்க விலைக்காக விற்பனைக் கணக்கினை பெற வேண்டிய மொத்த வட்டித் தொகைக்காக வட்டி இடை நிலைக் கணக்கினையும் வரவு வைப்பார். ஒவ்வொரு தவணையும் பெற்றவுடன் வங்கிக் கணக்கினை பற்று வைத்து வாங்குநர் கணக்கினை வரவு வைக்க வேண்டும். ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் கணக்கிலிருந்து வட்டிக் கணக்கிற்கு மாற்ற வேண்டும். இங்கு வட்டி இடை நிலைக் கணக்கு பற்று வைக்கப்பட்டு வட்டிக் கணக்கு வரவு வைக்கப்படுகிறது.

**எடுத்துக்காட்டு: 1**

2000 ஜனவரி 1ஆம் தேதி மோகன் அன் கோ பிரதிகள் எடுக்கும் இயந்திரம் ஒன்றினைத் தவணைக் கொள்முதல் முறையின் அடிப்படையில் தேவன் அன் கோவிடமிருந்து வாங்கியது. அந்த இயந்திரத்தின் ரொக்க விலை ரூ.17,430 ஆகும். இத்தொகை கீழ்க்கண்டவாறு செலுத்தப்பட வேண்டும்.

ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டவுடன் ரூ.5,000 செலுத்தப்பட வேண்டும். மீதத் தொகையினை ஒவ்வொரு ஆண்டின் இறுதியில் ரூ.5,000 என மூன்று ஆண்டுகளின் இறுதியில் செலுத்த வேண்டும். தேவன் அன் கோ 10 சதவீதம் வட்டி விதிக்க ஒப்புக் கொண்டது. மோகன் அன் கோ சொத்தின் மதிப்பிலிருந்து ஆண்டு தோறும் 15 சதவீதம் குறைந்து செல்ல இருப்பு முறையில் தேய்மானம் நீக்க முடிவு செய்தது. இரண்டு நிறுவனங்களின் ஏடுகளிலும் செய்ய வேண்டிய பதிவுகளையும் காண்பிக்கவும்.

தொகைகள் முழு ரூபாயின் மதிப்பிலேயே இருக்க வேண்டும்.

செய்முறை

அ). வட்டிக் கணக்கிடுதலுக்கா

| | |
|---|---|
| ஒப்பந்தத்தின் படி செலுத்த வேண்டிய மொத்தத் தொகை | ரூ.20,000 |
| சொத்தின் ரொக்க விலை | ரூ.17,430 |
| ஆகவே செலுத்த வேண்டிய வட்டி | ரூ.2,570 |

முதல் ஆண்டில் ரூ.12,430 (ரூ.17,430—ரூ.5,000)த்தின் மீதும் 10% வட்டி ரூ.1,243 இரண்டாம் ஆண்டில் ரூ.8,679 (ரூ.12,430—ரூ.3,673)த்தின் மீதும் 10% வட்டி ரூ.867 கடைசி ஆண்டான மூன்றாம் ஆண்டிற்கான வட்டி மீதமுள்ள தொகையாகும்.

(ரூ.2,570— (1,243 + 867) 2,110=ரூ.460

| | |
|---|---|
| ஆ). தேய்மானத்தை கணக்கிடுவதற்காக | ரூ. 17,430 |
| ரொக்க விலை | ரூ. 2,615 |
| | ரூ. 14,815 |
| கழி:2000,15 சதவீதம் தேய்மானம் | ரூ. 2,222 |
| | ரூ. 12,593 |
| கழி: 2001 15% தேய்மானம் | ரூ. 1,889 |
| | ரூ. 10,704 |

**மோகன் அன் கோவின் ஏடுகள் குறிப்பேடு**

| நாள் | விபரம் | பே.ப. எண் | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|---|
| 2000 | | | ரூ. | | ரூ. | |
| ஜன 1 | இயந்திர க/கு ப | | 17,430 | 00 | | |
| | வட்டி இடைநிலை க/கு ப | | 2,570 | 00 | | |
| | தேவன் அன் கோ க/கு | | | | 2,000 | 00 |
| | (தவணைக் கொள்முதல் முறையில் இயந்திரத்தை வாங்கியதற்கான பதிவு) | | | | | |
| | தேவன் அன் கோ க/கு ப | | 5,000 | 00 | | |
| | வங்கி க/கு | | | | 5,000 | 00 |
| | (ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டவுடன் செலுத்திய தொகைக்கான பதிவு) | | | | | |
| | தேவன் அன் கோ க/கு ப | | 5,000 | 00 | | |
| | வங்கி க/கு | | | | 5,000 | 00 |
| | (முதல் ஆண்டின் இறுதியில் செலுத்திய தொகைக்கான பதிவு) | | | | | |
| | வட்டி க/கு | | 1,243 | 00 | | |
| | வட்டி இடைநிலை க/கு | | | | | |
| | (முதல் ஆண்டிற்கான வட்டியை மாற்றியதற்கான பதிவு) | | | | 1,243 | 00 |
| | தேய்மான க/கு ப | | 2,615 | 00 | | |
| | இயந்திர க/கு | | | | 2,615 | 00 |
| | (ரூ.17,430 மீது 15சதவீதம் தேய்மானம் நீக்கியதற்கான பதிவு) | | | | | |
| 2001 டிச | தேவன் அன் கோ க/கு ப | | 5,000 | 00 | | |
| | வங்கி க/கு | | | | 5,000 | 00 |
| | (நியந்தனைகளின் படி 2ஆம் ஆண்டு இறுதியில் தொகை செலுத்தப்பட்டதற்கான பதிவு) | | | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | வட்டி க/கு ப<br>வட்டி இடைநிலை க/கு<br>(இரண்டாம் ஆண்டிற்கான வட்டியை மாற்றியதற்கான பதிவு) | | 867 | 00 | 867 | 00 |
| | தேய்மான க/கு ப<br>இயந்திர க/கு<br>(ரூ.17,430 மீது 15சதவீதம் தேய்மானம் நீக்கியதற்கான பதிவு) | | 2,222 | 00 | 2,222 | 00 |
| 2002 டிச 31 | தேவன் அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>(நிபந்தனைகளின் படி 2ஆம் ஆண்டு இறுதியில் தொகை செலுத்தப்பட்டதற்கான பதிவு) | | 5,000 | 00 | 5,000 | 00 |
| | வட்டி க/கு ப<br>வட்டி இடைநிலை க/கு<br>(இரண்டாம் ஆண்டிற்கான வட்டியை மாற்றியதற்கான பதிவு) | | 460 | 00 | 460 | 00 |
| | தேய்மான க/கு ப<br>இயந்திர க/கு<br>(ரூ.17,430 மீது 15சதவீதம் தேய்மானம் நீக்கியதற்கான பதிவு) | | 1,889 | 00 | 1,889 | 00 |

## மோகன் அன் கோவின் ஏடுகள்
## இயந்திர க/கு

ப. வ.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2000 ஜன 1 | தேவன் அன் கோ க/கு | ரூ.<br>17,430.00 | 2000 டிச 31 | தேய்மான க/கு<br>இருப்பு கீ/இ | ரூ.<br>2,615.00<br>14,815.00 |
| | | 17,430.00 | | | 17,430.00 |
| 20021 ஜன 1 | இருப்பு கீ/கொ | 14,815.00 | 2001 டிச 31 | தேய்மான க/கு<br>இருப்பு கீ/இ | 2,222.00<br>12,593.00 |
| | | 14,815.00 | | | 14,815.00 |
| 2002 ஜன 1 | இருப்பு கீ/கொ | 12,593.00 | 2002 டிச 31 | தேய்மான க/கு<br>இருப்பு கீ/இ | 1,889.00<br>10,704.00 |
| | | 12,593.00 | | | 12,593.00 |
| 2003 ஜன 1 | இருப்பு கீ/கொ | 10,704.00 | | | |
| | | 10,704.00 | | | |

## தேவன் அன் கோ க/கு

ப. வ.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2000 ஜன 1<br>டிச 31 | வங்கி க/கு<br>வங்கி க/கு<br>இருப்பு கீ/கொ | ரூ.<br>5,000.00<br>5,000.00<br>10,000.00 | | இயந்திர க/கு<br>வட்டி இடைநிலைக் க/கு | ரூ.<br>17,430.00<br>2,570.00 |
| | | 20,000.00 | | | 20,000.00 |
| 2001 ஜன 1 | வங்கி க/கு<br>இருப்பு கீ/இ | 5,000.00<br>5,000.00 | | இருப்பு கீ/கொ | 10,000.00 |
| | | 10,000.00 | | | 10,000.00 |
| 2002 டிச 31 | வங்கி க/கு | 5,000.00 | | இருப்பு கீ/கொ | 5,000.00 |
| | | 5,000.00 | | | 5,000.00 |

## வட்டி இடைநிலைக் க/கு

ப. வ.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2000 ஜன 1 | தேவன் அன் கோ க/கு | ரூ. 2,570.00 | 2000 | வட்டி க/கு (மாற்றப்பட்டது) இருப்பு கீ/கொ | ரூ. 1,243.00 1,327.00 |
| | | 2,570.00 | | | 2,570.00 |
| 2001 ஜன 1 | இருப்பு கீ/கொ | 1,327.00 | 2001 டிச 31 | வட்டி க/கு (மாற்றப்பட்டது) இருப்பு கீ/இ | 867.00 460.00 |
| | | 1,327.00 | | | 1,327.00 |
| 2002 ஜன 1 | இருப்பு கீ/கொ | 460.00 | 2002 டிச 31 | வட்டி க/கு (மாற்றப்பட்டது) | 460.00 |
| | | 460.00 | | | 460.00 |

## தேவன் அன் கோவின் ஏடுகள்

### குறிப்பேடு

| நாள் | விபரம் | பே.ப. எண் | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 2000 ஜன 1 | மோகன் அன் கோ க/கு ப<br>விற்பனை க/கு<br>வட்டி இடைநிலைக் க/கு<br>(ரூ.20,000க்கு தவணை கொள்முதல் முறையில் இயந்திரத்தை விற்றதற்கான பதிவு) | | 20,000.00 | <br>17,430.00<br>2,570.00 |
| | வங்கி க/கு ப<br>மோகன் அன் கோ க/கு<br>(ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டவுடன் பெற்ற தொகைக்கான பதிவு) | | 5,000.00 | <br>5,000.00 |
| 2001 டிச 31 | வங்கி க/கு ப<br>மோகன் அன் கோ க/கு<br>(முதல் ஆண்டின் இறுதியில் இட்டவுடன் பெற்ற தொகைக்கான பதிவு) | | 5,000.00 | <br>5,000.00 |
| | வட்டி இடைநிலை க/கு ப<br>வட்டி க/கு<br>(முதல் ஆண்டிற்கான வட்டியை மாற்றியதற்கான பதிவு) | | 1,243.00 | <br>1,243.00 |
| 2001 டிச 31 | வங்கி க/கு ப<br>மோகன் அன் கோ க/கு | | 5,000.00 | <br>5,000.00 |

| | | | |
|---|---|---|---|
| | (2ஆம் ஆண்டின் இறுதியில் இட்டவுடன் பெற்ற தொகைக்கான பதிவு) | | |
| டிச 31 | வட்டி இடைநிலை க/கு ப<br>வட்டி க/கு<br>(2ஆம் ஆண்டிற்கான வட்டியை மாற்றியதற்கான பதிவு) | 867.00 | 867.00 |
| 2002<br>டிச 31 | வங்கி க/கு ப<br>மோகன் அன் கோ க/கு<br>(3ஆம் ஆண்டின் இறுதியில் இட்டவுடன் பெற்ற தொகைக்கான பதிவு) | 5,000.00 | 5,000.00 |
| டிச 31 | வட்டி இடைநிலை க/கு ப<br>வட்டி க/கு<br>(3ஆம் ஆண்டிற்கான வட்டியை மாற்றியதற்கான பதிவு) | 460.00 | 460.00 |

## தேவன் அன் கோவின் ஏடுகள்
## மோகன் அன் கோவின் க/கு

ப. வ.

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 2000 ஜன 1 | விற்பனை க/கு<br>வட்டி இடைநிலை க/கு | 17,430.00<br>2,570.00 | 2000 டிச 31 | வங்கி க/கு<br>வங்கி க/கு<br>இருப்பு கீ/இ | 5,000.00<br>5,000.00<br>10,000.00 |
| | | 20,000.00 | | | 20,000.00 |
| 2001 ஜன 1 | இருப்பு கீ/கொ | 10,000.00 | | வங்கி க/கு<br>இருப்பு கீ/இ | 5,000.00<br>5,000.00 |
| | | 10,000.00 | | | 10,000.00 |
| 2002 ஜன 1 | இருப்பு கீ/கொ | 5,000.00 | 2002 டிச 31 | வங்கி க/கு | 5,000.00 |
| | | 5,000.00 | | | 5,000.00 |

## வட்டி இடைநிலைக் க/கு

ப. 6

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2000 டிச | | ரூ. | 2000 | | ரூ. |
| 1 | வட்டி க/கு (மாற்றப்பட்டது) | 1,243.00 | ஜன 1 | மோகன் அன் கோ க/கு | 2,570.00 |
| | இருப்பு கீ/இ | 1,327.00 | | | |
| | | 2,570.00 | | | 2,570.00 |
| 2001 டிச 1 | வட்டி க/கு (மாற்றப்பட்டது) | 867.00 | 2001 ஜன 1 | இருப்பு கீ/கொ | 1,327.0 |
| | இருப்பு கீ/இ | 460.00 | | | |
| | | 1,327.00 | | | 1,327.00 |
| 2002 டிச 1 | வட்டி க/கு (மாற்றப்பட்டது) | 460.00 | 2002 ஜன 1 | இருப்பு கீ/கொ | 460.00 |
| | | 460.00 | | | 460.00 |

**எடுத்துக்காட்டு: 2**

வாடகைக் கொள்முதல் முறைக்கும் தவணைக் கொள்முதல் முறைக்கும் இடையேயுள்ள வேறுபாடுகளை விளக்குக. மேலும் இயந்திரத்தை வாடகைக் கொள்முதல் முறையிலும் ஒரு மோட்டார் சைக்கிளை தவணைக் கொள்முதல் முறையிலும் வாங்கியதாகக் கருதி செய்ய வேண்டிய பதிவுகளைத் தருக.

**விடை:**

வாடகைக் கொள்முதல் முறைக்கும் தவணைக் கொள்முதல் முறைக்கும் இடையேயுள்ள வேறுபாடுகள் பின்வருமாறு:

| வாடகைக் கொள்முதல் முறை | தவணைக் கொள்முதல் முறை |
|---|---|
| 1. இது விற்பனை செய்தலுக்கான ஒரு நிறைவேற்றப்பட்ட ஒப்பந்தமாகும். | இது ஒரு விற்பனைக்கான ஒப்பந்தமாகும். |
| 2. கடைசித் தவணை செலுத்தப்பட்ட போது தான் சொத்தின் மீதான உரிமை மாற்றப்படுகிறது. | சரக்கினை வாங்கியவரிடம் அளித்தவுடனேயே உரிமை அவருக்கு மாற்றப்படுகிறது. |
| 3. வாங்குநருக்கு உரிமை மாற்றப்படாததால் அவரால் சொத்தினை வாடகைக்கு விடவோ விற்கவோ அல்லது அடமானம் வைக்கவோ உரிமை உண்டு. | வாங்கப்பட்ட சரக்கிற்கு வாங்குநர் உரிமையாளர் ஆகிவிடுவதால் அச்சரக்கினை அவர் விரும்பிய முறையில் உபயோகிக்க அவருக்கு உரிமை கிடையாது. |

| | |
|---|---|
| 4. வாங்குநருக்கு தவணைத் தொகை எதனையும் (கடைசித் தவணை உட்பட) செலுத்தத் தவறிய போது அவருக்கு யாதொரு நஷ்ட ஈடும் அளிக்காமல் சரக்கினை தானே எடுக்துக் கொள்ள விற்பனையாளருக்கு உரிமை உண்டு. | தவணைகள் செலுத்தப்படுவதில் யாதொரு தவறுதல் ஏற்பட்ட பொழுதும் சரக்கினை திரும்ப எடுத்துக் கொள்வதற்கு விற்பனையாளருக்கு உரிமை கிடையாது. |
| 5. விற்பனையாளர் வக்கற்றவராகும் பொழுது விற்பனையாளரின் நொடித்தவர் செலுத்தாட்சியரால் சொத்து எடுத்துக் கொள்ளப்படும். | விற்பனையாளரால் வக்கற்றவராகும் பொழுது வாங்குபவர் எந்த விதத்திலும் இதனால் பாதிக்கப்படுவதில்லை. |
| **வாடகைக் கொள்முதல் முறையில் இயந்திரம் வாங்கியதற்கான பதிவுகள்** | **தவணைக் கொள்முதல் முறையில் மோட்டார் சைக்கிள் வாங்கியதற்கான பதிவுகள்** |
| 1. கொள்முதல் செய்த தேதியன்று<br>இயந்திர க/கு ப<br>(ஒப்பந்தத்தில் கையொப்பம் இட்டவுடன் செலுத்த வேண்டிய தொகைக்கான பதிவு)<br>விற்பனையாளர் க/கு ப<br>வங்கி க/கு<br>(சொத்துக் கணக்கினை அச்சொத்தின் ரொக்க விலையில் அல்லாமல் கொள் முதலின் போது செலுத்தப்பட்ட உடனடிச் செலுத்துகைக்கான தொகைக்கும் பற்று வைக்க வேண்டும்.) | கொமுதல் செய்த தேதியன்று<br>மோட்டார் சைக்கிள் க/கு ப<br>வட்டி இடைநிலைக் க/கு ப<br>வட்டி நிலை க/கு<br>(சொத்தினை வாங்கியதால் ஏற்பட்ட பொறுப்பிற்கான பதிவு)<br>விற்பனையாளர் க/கு ப<br>வங்கி க/கு<br>(வாங்கியவுடன் செலுத்தப்பட்ட உடனடிச் செலுத்துகைக்கான பதிவு)<br>(சொத்தின் ரொக்க விலை சொத்து கணக்கில் பற்று வைக்கப்படுகிறது) |
| 2. முதல் ஆண்டின் இறுதியில் அல்லது தவணை தேதியில் முதல் தவணையைச் செலுத்தும் போது<br>இயந்திர க/கு ப<br>வட்டி க/கு ப<br>விற்பனையாளர் க/கு ப<br>(மொத்தத் தவணைத் தொகையில் அக் காலத்திற்குரிய வட்டி பிரிக்கப்பட்டு மீதித் தொகை சொத்துக் கணக்கில் பற்று வைக்கப்படும்).<br>விற்பனையாளர் க/கு ப<br>வங்கி க/கு<br>(முதல் தவணைத் தொகை செலுத்தியதற்கான பதிவு) | முதல் ஆண்டின் இறுதியில் செலுத்தப்படும் போது அல்லது முதல் தவணையை தவணைத் தேதியில் செலுத்தும் போது<br>விற்பனையாளர் க/கு ப<br>வங்கி க/கு<br>வட்டி க/கு ப<br>வட்டி இடைநிலைக் க/கு<br>(குறிப்பிட்ட காலத்திற்கான வட்டியை மாற்றியதற்கான பதிவு) |

குறிப்பு

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பயிற்சி வினாக்கள்**

**கோடிட்ட இடத்தை நிரப்புக:**

1. தவணை கொள்முதல் முறையில், ஒப்பந்தம் செய்தது முதல், கடைசி தவணை செலுத்தும்வரை, பொருளின் மீது உள்ள உரிமை............. இருக்கும்.

2. முழுமையாக தவணை செலுத்தாத பட்சத்தில், விற்பனையாளர் ............தை அணுக வேண்டும்.

3. தவணை கொள்முதல் விலையில், அசல் விலையோடு...............ம் சேர்ந்திருக்கும்.

**சாயா / தவறா:**

அ. வாடகை கொள்முதல் முறையும் தவணை கொள்முதல் முறையும் ஒன்றே.

ஆ. தவணை கொள்முதல் முறையில், பொருளை விற்பவர், விற்ற பொருளை திரும்ப எடுக்க முடியாது.

இ. ரொக்கவிலை + வட்டி = தவணை கொள்முதல் விலை

| | |
|---|---|
| தேய்மான க/கு ப<br>இயந்திர க/கு<br>(கணக்கில் உள்ள காலத்திற்கான தேய்மானத்தை நீக்கியதற்கான பதிவு) | தேய்மான க/கு ப<br>மோட்டார் சைக்கிள் க/கு<br>(தேய்மானத்தை நீக்கியதற்கான பதிவு) |
| 3. இரண்டாம் தவணையைச் செலுத்தும் போது அல்லது இரண்டாம் ஆண்டின் இறுதியில்<br>இயந்திர க/கு ப<br>வட்டி க/கு ப<br>விற்பனையாளர் க/கு<br>விற்பனையாளருக்கு செலுத்த வேண்டிய இரண்டாம் தவணைத் தொகையை வட்டிக்கும் சொத்திற்கும் இடையே சரியாகப் பிரித்ததற்கான பதிவு) | இரண்டாம் தவணை செலுத்தப்பட்டபோது அல்லது இரண்டாம் ஆண்டின் இறுதியில்<br>விற்பனையாளர் க/கு ப<br>வங்கி க/கு<br>(இரண்டாம் தவணைத் தொகை செலுத்தியதற்கான பதிவு) |
| விற்பனையாளர் க/கு ப<br>வங்கி க/கு<br>(செலுத்தப்பட்ட தொகைக்கான பதிவு) | வட்டி க/கு ப<br>வட்டி இடைநிலை க/கு<br>(இந்த ஆண்டிற்கான வட்டி மாற்றப்பட்டதற்கான பதிவு) |
| தேய்மான க/கு ப<br>இயந்திர க/கு<br>(தேய்மானம் நீக்கப்பட்டதற்கான பதிவு) | தேய்மான க/கு ப<br>மோட்டார் சைக்கிள் க/கு<br>(தேய்மானம் நீக்கப்பட்டதற்கான பதிவு) |

**குறிப்பு:**

கடைசித் தவணை வரையிலும் ஒவ்வொரு மற்றும் கடைசித் தவணைக்கும் இதே போன்ற பகுதிகளைச் செய்ய வேண்டும்.

**எடுத்துக்காட்டு: 3**

1.01.03 அன்று ராஜு இயந்திரம் ஒன்றினை தவணைக் கொள்முதல் முறையில் வாங்கினார். ரூ.15,000 உடனடியாக வழங்கப்பட வேண்டும். மீதித் தொகை ஒவ்வொரு அரை வருடத்தின் இறுதியிலும் ரூ.20,000 என்று நான்கு தவணைகளில் தரப்பட வேண்டும். ஆண்டுக்கு வட்டி விகிதம் 6% விற்பனையாளரின் ஏடுகளில் தேவையான கணக்குகளைத் தருக. ஒவ்வொரு ஆண்டும் 31 டிசம்பரில் கணக்குகள் முடிக்கப்படுகின்றன.

விடை:

இயந்திரத்தின் ரொக்க விலை தரப்படவில்லை. அதை முதலில் கண்டுபிடித்துக் கொள்ள வேண்டும்.

ஆண்டுக்கு வட்டி விகிதம் 6% எனவே அரை ஆண்டுக்கு 3%

| | ரூ. | வட்டி | ரொக்க விலை |
|---|---|---|---|
| 31.12.04 நான்காவது தவணை | 20,000 | | |
| கழிக்க: வட்டி $\frac{3}{103}$ x20,000 | 583 | 583 | 19,417 |
| | 19,417 | | |
| கூட்டுக: 30.06.04 மூன்றாவது தவணை | 20,000 | | |
| | 39,417 | | |
| கழிக்க: வட்டி $\frac{3}{103}$ x39,417 | 1,148 | 1,148 | 18,852 |
| | 38,269 | | |
| கூட்டுக: 30.06.03 இரண்டாவது தவணை | 20,000 | | |
| | 58,268 | | |
| கழிக்க: வட்டி $\frac{3}{103}$ x58,269 | 1,697 | 1,697 | 18,303 |
| | 56,572 | | |
| கூட்டுக: 30.06.02 முதலாவது தவணை | 20,000 | | |
| | 76,572 | | |
| கழிக்க: வட்டி $\frac{3}{103}$ x76,572 | 2,230 | 2,230 | 17,770 |
| | 74,342 | 5,658 | 74,342 |

தவணைத் தொகைகளில் உள்ள ரொக்க விலை ரூ. 74,342

கூட்டுக: முதலில் 1.1.03—ல் தரப்பட்ட தொகை ரூ. 15,000

ரொக்க விலை ரூ. 89,342

## விற்பனையாளர் ஏடு
## ராஜு க/கு

ப. வ.

| 2003 | | ரூ. | 2003 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| ஜன 1 | விற்பனை க/கு | 89,342 | ஜன 1 | வங்கி க/கு | 15,000 |
| | வட்டி இடைநிலை க/கு | 5,658 | ஜுன்30 | வங்கி க/கு | 20,000 |
| | | | டிச 31 | வங்கி க/கு | 20,000 |
| | | | டிச 31 | இருப்பு கீ/இ | 40,000 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | 95,000 | | | 95,000 |
| 2004 ஜன 1 | இருப்பு கீ/கொ | 40,000 | 2004 ஜுன்30 டிச. 31 | வங்கி க/கு வங்கி க/கு | 20,000 20,000 |
| | | 40,000 | | | 40,000 |

### வட்டி இடைநிலை க/கு

ப. வ.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2003 ஜுன் 30 டிச 31 டிச 31 | வட்டி க/கு வட்டி க/கு இருப்பு கீ/இ | ரூ. 2,230 1,697 1,731 | 2003 ஜன 1 | ராஜு க/கு | ரூ. 5,658 |
| | | 5,658 | | | 5,658 |
| 2004 ஜுன் 30 டிச 31 | வட்டி க/கு வட்டி க/கு | 1,148 583 | ஜன 1 | இருப்பு கீ/கொ | 1,731 |
| | | 1,731 | | | 1,731 |

### வட்டி க/கு

ப. வ.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2000 ஜன 1 | லாப நட்ட க/கு | ரூ. 3,428 | 2003 ஜுன்30 டிச 31 | வட்டி இடைநிலை க/கு வட்டி இடைநிலை க/கு | ரூ. 1,697 1,731 |
| | | 3,428 | | | 3,428 |
| 2004 டிச 31 | லாப நட்ட க/கு | 1,731 | 2001 ஜுன்30 டிச 31 | வட்டி இடைநிலை க/கு வட்டி இடைநிலை க/கு | 1,148 583 |
| | | 1,731 | | | 1,731 |

## 3.2. அருஞ்சொற்கள்:

**தவணை :**
வாங்கிய பொருளுக்காக மாதம் / ஆண்டுக்கு ஒருமுறை தொடர்ந்து செலுத்துவது.

தவணை கொள்முதல் விலை : ரொக்கவிலையும் வட்டியும் சேர்ந்தது.

**முன்பணம் :**
ஒப்பந்தம் செய்தவுடன், வாங்குபவர் தரும் முதல் தவணை.

## 3.3. தொகுப்புரை

விற்ற பொருளை திரும்ப எடுக்கும் உரிமை என்ற ஒரு அம்சம்தான் தவணை கொள்முதல் முறையை வாடகை கொள்முதல் முறையிலிருந்து பிரிக்கின்றது. ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு தொழில்வளர்ச்சி அவசியம். அத்தகைய தொழில் வளர்ச்சிக்கு, தவணை கொள்முதல் முறை உதவுகின்றது. தொழில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் பொழுது, தொழில் முனைவோர் வாங்கிய இயந்திரத்தை இழக்காமல், தொழில் தொடர்ந்து நடைபெற இம்முறை பெரிதும் உதவுகின்றது. இன்றைய நவீன உலகில், அனைவருக்கும் வாடகை கொள்முதல், மற்றும் தவணை கொள்முதல் முறை இரண்டும் ஒரு வரப்பிரசாதமாகும்.

## 3.4. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் பயிற்சி வினாக்களின் விடைகள்:

**கோடிட்ட இடத்தை நிரப்புக:**

(1) வாங்குபவரிடம் (2) நீதிமன்றத்தை (3) வட்டியும்

**சரியா / தவறா:**

(அ) தவறு (ஆ) சரி (இ) சரி

## 3.5. மாதிரி வினாக்கள்

1. தவணைக் கொள்முதல் முறை பற்றி சிறுகுறிப்பு எழுதுக.

2. எலக்ரிக் நிறுவனத்திடமிருந்து முருகன் என்பவர் ஒரு இயந்திரத்தை ரொக்கவிலை ரூ.7,450 என தவணை கொள்முதல் முறையில் வாங்குகிறார். முன்பணம் ரூ.2000ம் செலுத்த வேண்டும். மீதித் தொகையை மூன்று ஆண்டு தவணையாக ரூ.2000ம் வீதம் செலுத்த வேண்டும். தேய்மானம் 5% குறைந்து செல் தவணை முறையில் எழுத வேண்டும். முருகன் மற்றும் எலக்ரிக் நிறுவனம் ஆகிய இரு ஏடுகளிலும் குறிப்பேடு பதிவுகளை எழுதவும்.

(விடை : வட்டி ரூ.272.50; ரூ.186.18; ரூ.91.32)

3. வேலன் ரூ.17,430 ரொக்க விலை என ஒரு இயந்திரத்தை தேவகி & கம்பெனியிடமிருந்து தவணை கொள்முதல் விலையில் வாங்குகிறார். முன்பணம் ரூ.5000. மேலும் ஆண்டுக்கு ரூ.5000 வீதம் மூன்று ஆண்டுகள் செலுத்த வேண்டும். வட்டி விகிதம் ஆண்டுக்கு 10% ஆகும். வேலன் 15% குறைந்துசெல் முறையில் தேய்மானம் எழுதுகிறார். வேலனால் கடைசி தவணையை செலுத்தமுடியவில்லை. வேலன் மற்றும் தேவகி கம்பெனி ஆகிய இருவரது ஏட்டிலும் பேரேட்டு கணக்குகள் தயாரிக்கவும்.

(விடை : வட்டி ரூ.1243; ரூ.867; ரூ.860)

# பாடம் — 4

# உரிமைத் தொகைக் கணக்குகள்

கட்டமைப்பு



## 4.0. அறிமுகம்

இன்றைய உலகில், தங்களது வாடிக்கையாளர்களை தக்கவைத்துக் கொள்ள அனைத்து நிறுவனமும் ஏதாவது ஒருமுறையில் தங்களை தனிப்படுத்தி காட்டிக்கொள்ள அவசியமாகின்றது. அதற்காக, அவர்கள் வியாபார குறியீடு, பதிப்புரிமை, தனியுரிமை சான்றிதழ் போன்றவைகளை உருவாக்க வேண்டியுள்ளது. அப்படி உருவாக்கி, மக்களிடம் பெரும் செல்வாக்கு பெற்றுள்ள அத்தகைய உரிமைகளை தாங்கள் மட்டுமில்லாமல், பிறரையும் அதை பயன்படுத்தி லாபம் ஈட்ட அனுமதிக்கலாம். அப்படி அனுமதிக்கும் பொழுது, அதை பயன்படுத்துபவர் தரும் தொகையை உரிமைத் தொகை என்று சொல்வர். ஒரு நிறுவனம் தான் வைத்துள்ள பல உரிமைகளை இவ்வாறு, முழுமையாக பயன்படுத்தி மறைமுகமாக அதிகலாபம் ஈட்ட முடிகின்றது. இன்று பல நிறுவனங்கள் பிறருடைய உரிமைகளை பயன்படுத்தி, பொருட்களை

பிறருடைய உரிமைகளை பயன்படுத்தி, பொருட்களை சந்தைப்படுத்துகின்றன. எனவே உரிமைகளை வைத்துள்ள உரிமையாளர்கள் மற்றும் அதை பயன்படுத்துபவர்கள் என இருவரது ஏட்டில் இது சம்பந்தமான கணக்குகள் பதிந்து, தயாரிக்க வேண்டியுள்ளது.

## 4.1. கற்றல் நோக்கங்கள்

இந்த பிரிவைப் படித்த பின்பு நீங்கள்,

— குறைந்தபட்ச வாடகை, குறை உற்பத்தி, குறை உற்பத்தி மீட்பு மற்றும் உரிமை தொகை போன்ற பதங்களுக்கு விளக்கம் சொல்ல முடியும்.

— பல்வேறு வகையான குறை உற்பத்தி மீட்புகளை வெளிக்கொணர முடியும்.

— குத்தகை சொந்தக்காரர் மற்றும் குத்தகைகாரர் இருவரது ஏட்டிலும் கணக்குகள் தயாரிக்க இயலும்.

கனிவளங்களின் மீது ஒருவருக்குள்ள சிறப்பான உரிமையின் காரணமாக உரிமைத்தொகை உருவாகிறது (Royalty). அதாவது, ஒரு நபர் பிறிதொரு நபரால் அளிக்கப்பட்ட சிறப்பான உரிமைக்கு பிரதிபலனாகச் செலுத்தும் தொகையே உரிமைத் தொகையாகும். இவ்வாறு கனிவளங்களை சுரங்கத்திலிருந்து வெட்டி எடுத்தலுக்காக அச்சுரங்கத்தின் சொந்தக்காரருக்கும், பொருட்களை உற்பத்தி செய்து விற்றதலுக்காக அப்பொருளின் காப்புரிமையை வைத்திருப்பவருக்கும், புத்தகங்களை வெளியிடுதலுக்காக அப்புத்தகத்தின் ஆசிரியருக்கும் உரிமைத் தொகைகள் வழங்கப்படுகின்றன. எனினும், ஒரு சுரங்கம் அல்லது ஒரு புத்தகத்தின் காப்புரிமை அல்லது பதிப்புரிமையின் கொள்முதல் விலை முழுவதையும் செலுத்தும்போது அத்தொகையினை உரிமைத் தொகை எனச் சொல்வதில்லை.

ஒரு சுரங்கம் அல்லது எண்ணைக் கிணற்றில் ஒவ்வொரு ஆண்டும் எடுக்கப்பெற்ற கனிவளத்தின் மொத்த அளவைக் கணக்கில் கொண்டு உரிமைத் தொகை செலுத்தப்படும். இதேபோல் ஒரு காப்புரிமையின் சொந்தகாரருக்கு உற்பத்தி செய்யப்பட்டு விற்கப்பட்ட பொருட்களின் எண்ணிக்கையின் அடிப்படையில் உரிமைத் தொகை செலுத்தப்படும். ஒரு ஆசிரியருக்கு அவருடைய புத்தகத்தின் மொத்த விற்பனைத் தொகையில் ஒரு குறிப்பிட்ட சதவீதம் உரிமைத் தொகையாகச் செலுத்தப்படும்.

இவ்வாறு செலுத்தப்படும் *உரிமைத் தொகையானது வாடகையை ஒத்திருக்கிறது. உரிமைத் தொகைக் கணக்கானது ஒரு பெயரளவுக் கணக்காகும். இது ஒரு பெயரளவுக் கணக்காளரால், உரிமைத் தொகையினைச் செலுத்துகின்றவருடைய ஏடுகளில் இது பற்று வைக்கப்படும். உரிமைத் தொகை இலாப நட்டக் கணக்கு அல்லது உற்பத்திக் கணக்கிற்கு அவ்வுரிமைத் தொகையின் தன்மை (மறைமுகச் செலவு அல்லது நேரடிச் செலவு) யைப் பொறுத்து மாற்றப்படுகின்றது. இவ்வாறு மாற்றப்பட்டு இக்கணக்கு முடிக்கப்படுகிறது.

### குத்தகைவிடுபவரும் குத்தகைதாரரும் (Lessor and Lessee)

ஒரு சுரங்கத்தின் சொந்தக்காரர் மற்றொரு நபருக்கு அச்சுரங்கத்தை குத்தகைக்கு விடுவாரேயானால், அச்சொந்தக்காரர், குத்தகை விடுபவர் எனப்படுவர். யாருக்கு அக்குத்தகை கொடுக்கப்பட்டதோ அந்நபரை குத்தகைகாரர் என்கிறோம். அக்குத்தகைதாரர் அச்சுரங்கத்தை மற்றொரு நபருக்கு கீழ்க் குத்தகைக்கு விடலாம்.

## 4.2. குறைந்த அளவு குத்தகை (Minimum Rent)

உற்பத்தியின் அளவு என்னவாக இருப்பினும் ஒரு குறைந்த அளவு குத்தகையை குத்தகைக்காரர் செலுத்த வேண்டுமென நிர்ணயிக்கும் ஒரு

* இதனை உரிமை ஊதியம் எனவும் கூறலாம்.

சரத்து வழக்கமாக குத்தகையில் இடம் பெற்றிருக்கும். இத்தொகையினைப் பெறுகின்ற ஒரு நிலம் அல்லது சுரங்கம் அல்லது காப்புரிமை அல்லது பதிப்புரிமையின் சொந்தக்காரருக்கு இத்தொகை ஒப்புறுதி செய்யப்படுகிறது. குத்தகையில் உள்ள மற்றொரு சரத்தின் மூலம் குத்தகைகாரரும் பொதுவாகப் பயன்பெறுகிறார். அதாவது, சில ஆண்டுகளில் ஏற்படும் குறைபாட்டை அக்குத்தகைகாரர் குறைந்த அளவு குத்தகைத் தொகையினைவிட உரிமைத் தொகை அதிகமாய் இருக்கும்போது மீட்டு கொள்ளலாம். உதாரணமாக கீழ்க்கண்ட நிபந்தனைகளுடன் இராமன் அவருடைய சுரங்கத்தைக் கோபாலுக்கு குத்தகை விடுகிறார் என வைத்துக்கொள்வோம்.

1. ஒரு ஆண்டில் செலுத்த வேண்டிய குறைந்த அளவுத் தொகை* ரூ. 1000
2. எடுக்கப்பெற்ற கனிவளத்தின் ஒவ்வொரு டன்னுக்கும் ரூ1. வீதம் உரிமைத் தொகை செலுத்த வேண்டும்.
3. முதலாவது மற்றும் இரண்டாவது ஆண்டுகளுக்கான உண்மையான உற்பத்தி முறையே 700 மற்றும் 1,200 டன்கள் ஆகும்.

முதல் ஆண்டில், குறைந்த அளவு குத்தகைக்கு ஆண்டுக்கு ரூ.1,000 என நிர்ணயிக்கப்பட்டு விட்டபடியால் கோபால் ரூ. 700 (ஒவ்வொரு டன்னுக்கும் உரிமைத் தொகை ரூ.1 வீதம் (1x700) யைச் செலுத்தக் கூடாது. அவர் செலுத்த வேண்டிய தொகை ரூ. 1,000 ஆகும். இங்கு உற்பத்திக்கான உண்மையான மதிப்பு ரூ 700 ஆகும். ஆனால் கோபால் சுரங்கத்தின் சொந்தக்காரரான இராமனுக்கு ரூ. 1000 செலுத்துகிறார். இங்கு குறைவாயுள்ள ரூ. 300ஐ குறை உற்பத்தி என்கிறோம். இவ்வாறு குத்தகையின் தொடக்க ஆண்டுகளில் உண்மையான உற்பத்தி சரியாக இல்லாதபோது குறைந்த அளவுக் குத்தகை செலுத்தப்படுகிறது.

---

* இதனைக் குறைந்த பட்சத்தொகை அல்லது தெண்டக்குத்தகை அல்லது குறைந்த அளவு வாடகை எனவும் கூறலாம்.

இரண்டாம் ஆண்டில் உண்மையான உரிமைத்தொகை ரூ.1,200 (ஒவ்வொரு டன்னுக்கும் உரிமைத் தொகை ரூ.1 வீதம் (1 x 1200 ஆகும்) அடுத்து வரும் ஆண்டுகளில் உரிமைத்தொகைகள் குறைந்த் அளவுக்குத் தொகையைக் காட்டிலும் அதிகமாயிருந்தால், ஏற்பட்ட குறை உற்பத்தியை அவற்றிலிருந்து மீட்டுக்கொள்ளலாம் என ஒப்பந்தத்தில் சொல்லப்பட்டிருக்கும். நாம் எடுத்துக்கொண்ட மேற்கண்ட உதாரணத்தில் இவ்வாறான சரத்து ஒன்று இருப்பதாக வைத்துக் கொள்வோம். இப்போது கோபால் தனக்கு ஏற்பட்ட குறை உற்பத்தியான ரூ.300ஐ இரண்டாம் ஆண்டு உரிமைத் தொகையாகிய ரூ.1,200 லிருந்து மீட்டுக் கொள்ள முடியுமா? இராமன் ரூ 900 (1,200 – 300) கோபாலிடமிருந்து ஏற்றுக்கொள்வாரா? இராமன் ஏற்றுக் கொள்ள மாட்டார். ஏனென்றால் குறைந்த அளவு குத்தகை ரூ. 1,000 இதற்கு அதிகம் உள்ள உரிமைத் தொகையிலிருந்தே கோபால் அக்குறை உற்பத்தியினை மீட்டுக்கொள்ள அனுமதிக்கப்படுவார். ரூ.200 (1,200– 1,000) யைக் குறைத்த பின் இராமனுக்கு ரூ.1,000 செலுத்தப்படும். இன்னும் ரூ. 100 மீட்கப்படாத குறை உற்பத்தியாகவே இருக்கிறது. இத்தொகை என்னவாகும்? குத்தகையின் சரத்துகளைப் பொறுத்து இதனுடைய முடிவு அமையும்.

## 4.3. குறை உற்பத்தி (Short Working)

உண்மையான உரிமைத் தொகையானது குறைந்த அளவு குத்தகையை விடக் குறைவாக இருக்கும்போது இங்கு ஏற்படும் வேறுபாடே குறை உற்பத்தியாகும். குறை உற்பத்தியினை பின்வரும் ஆண்டுகளில் உரிமைத் தொகைகளில் உரிமைத்தொகைகள் குறைந்த அளவு வாடகையைவிட அதிகமாயிருந்தால் (இது மீட்டுக்கொள்வதற்கான சரக்குகள் பெரும்பாலும் குத்தகையில அடங்கி இருக்கும். அவ்வாறு மீட்டுக்கொள்வதற்கான சரத்துக்கள் பெரும்பாலும் குத்தகையில் அடங்கி இருக்கும். அவ்வாறு மீட்டுக்கொள்வதற்கான உரிமையானது ஒரு

குறிப்பிட்ட ஆண்டுகளுக்கு மட்டுமே உண்டு என வரையறுக்கப்படலாம். சில சமயங்களில் அக்குத்தகையின் காலம் முழுவதிலும் அவ்வுரிமை இருக்கலாம்.

தொடக்கத்தில் சில ஆண்டுகளில் (உதாரணமாக 2 அல்லது 3 ஆண்டுகளில்) ஏற்படும் நட்டத்தை மட்டும் ஈடுகட்ட குத்தகை விடுபவர் உறுதியளிக்கும் பொழுது மீட்பதற்கான உரிமை வரையறுக்கப்பட்டது அல்லது நிலையானது எனக் கூறலாம்.

எந்த ஒரு ஆண்டில் நட்டத்தையும் அடுத்த (வருகின்ற) 2 அல்லது 3 ஆண்டுகளில் ஈடுகட்டுவதற்கு குத்தகை விடுவர் உறுதியளித்தபோது, மீட்பதற்கான உரிமையானது மாறக்கூடிய ஒன்றாகும். இவ்வுரிமையை குறை உற்பத்தி ஏற்பட்ட எந்த ஒரு ஆண்டிலும் உபயோகப்படத்திக் கொள்ளலாம்.

| |
|---|
| இக்குறிப்பிட்ட காலத்திற்குப்பின் குறை உற்பத்தியினை மீட்க முடியாது. இவ்வாறு மீட்க முடியாத குறை உற்பத்தியினை இலாப நட்டக் கணக்கில் பற்று வைத்து நீக்கிட வேண்டும். இக்கருத்தை மாணவர்கள் மனதில் கொள்ள வேண்டும். |

குறை உற்பத்தியினை மீட்கும் வரையிலும், மற்றும் மீட்கப்படலாம் என எதிர்பார்க்கும் வரையிலும் குறைந்த உற்பத்தி ஒரு பெயரளவுச் சொத்தாகும். இதனை இருப்புநிலைக் குறிப்பில் காண்பிக்க வேண்டும். இதனை உரிமைத் தொகை குறைவு எனவும் கூறலாம்.

## வேலை தடைபடுதல் (Stoppage of Work)

வேலை நிறுத்தம் அல்லது கதவடைப்பு அல்லது விபத்தின் காரணமாக வேலை தடைபடுவது சம்பந்தமாக சில சரத்துக்கள் குத்தகையில் சேர்க்கப்பட்டிருக்கும், வேலை தடைப்படுதலை கணக்கில் எடுத்துக்கொள்ள மூன்று முறைகள் உள்ளன.

1) வேலை தடைபடும்போது அவ்வாண்டிற்காக செலுத்த வேண்டிய பொறுப்பு அவ்வாண்டில் ஈட்டப்பட்ட உரிமைத் தொகையினால் தீர்க்கப்படும்

(அல்லது)

2) வேலை தடைபடும்போது, தடைப்பட்ட காலத்தின் அளவிற்கேற்ப தொகையைக் குறைத்து குறைந்த அளவு குத்தகைத் தொகை கணக்கிடப்படுகிறது.

(அல்லது)

3) வேலை தடைபடும்போது குறைந்த அளவு குத்தகைத் தொகையை 70% ஆக அல்லது வேறு வகையில் குறைத்துக் கொள்ளலாம்.

உதாரணமாக, ஒரு சுரங்கத்தில் வேலை நிறுத்தம், காரணமாய் 3 மாதங்கள் வேலை நடக்கவில்லை என வைத்துக்கொள்வோம். செலுத்த வேண்டிய குறைந்த குத்தகை ரூ. 1,000 எனவும் உண்மையான உரிமைத் தொகை ரூ. 800 ஆகவும் இருக்கிறது. மேற்கண்ட மூன்று முறைகளிலும் சுரங்கத்தின சொந்தகாரருக்கு எவ்வாறு பணம் செலுத்தப்படுகிறது என்பதனை நாம் கீழ்க்கண்டவாறு கண்டுபிடிக்கலாம். முதல் முறையின் படி ரூ. 800யைச் செலுத்தி பொறுப்பு முழுவதையும் தீர்த்து விடலாம்.

(அல்லது)

2—வது முறையின்படி ரூ. 750 (ரூ.1,000x3/12 = ரூ. 1000 – 250) செலுத்தப்பட வேண்டும். 3வது முறையின்படி ரூ. 700 (ரூ1000 x 70/100) செலுத்தப்பட வேண்டும்.

மேற்கண்டவைகளை, மனதிற்கொண்டு குத்தகைகாரர் (குத்தகை எடுத்தவர்) ஏடுகளிலும், குத்தகை விடுபவர் (சுரங்கத்தின் சொந்தகாரர்) ஏடுகளிலும் கணக்கின் பதிவுகள் எவ்வாறு செய்யப்படுகின்றன என்பதனைக் காண்போம்.

**குத்தகைகாரர் ஏட்டில் செய்ய வேண்டிய பதிவுகள்**

அ) குறைந்த அளவு குத்தகை உரிமைத் தொகைக்கு சமமாக இருக்கும்போது

உரிமைத் தொகை க/கு ப

நிலக்கிழார் க/கு

(நிலக்கிழாருக்கு உண்மையில் செலுத்த வேண்டிய உரிமைத் தொகைக்கான பதிவு)

நிலக்கிழார் க/கு ப

வங்கி க/கு

(உரிமைத் தொகையினை செலுத்தியதற்கான பதிவு)

இலாப நட்ட க/கு ப

உரிமைத் தொகை க/கு

(உரிமைத் தொகை கணக்கினை லாப நட்டக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு)

ஆ) குறைந்த அளவு குத்தகையைவிட உரிமைத் தொகை குறைவாயிருக்கும் போது

குறைந்த அளவு குத்தகைக் க/கு ப

நிலக் கிழார் க/கு

(ஒப்பந்தத்தின்படி செலுத்தவேண்டிய குறைந்த அளவு குத்தகைக்கான பதிவு)

உரிமைத் தொகை க/கு ப

குறை உற்பத்திக் க/கு ப

குறைந்த அளவு குத்தகைக் க/கு

(உண்மையான உரிமைத் தொகைக்கும், குறைந்த அளவு குத்தகையைக் காட்டிலும் உரிமைத் தொகை குறைவாயிருப்பதால் ஏற்பட்ட குறை உற்பத்திக்கமான பதிவு)

நிலக்கிழார் க/கு ப

வங்கிக்கு க/கு

(குறைந்த அளவு குத்தகை செலுத்தியதற்கான பதிவு)

இலாப நட்டக் க/கு ப

உரிமைத் தொகைக் க/கு

(உரிமைத் தொகைக் கணக்கிற்கான இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு)

இ) குறைந்த அளவு குத்தகையைவிட உரிமைத் தொகை அதிகமாயிருக்கும் போது அந்த உபரித் தொகையிலிருந்து குறை உற்பத்தியை மீட்ட பொது

உரிமைத் தொகை க/கு ப

நிலக்கிழார் க/கு

(நிலக்கிழாருக்கு செலுத்த வேண்டிய உரிமைத் தொகைக்கான பதிவு)

நிலக்கிழார் க/கு ப

குறை உற்பத்திக் க/கு

வங்கி க/கு

(குறைந்த அளவு குத்தகையைச் செலுத்தியதற்கும், உரிமைத் தொகையின் உபரியிலிருந்து குறை உற்பத்தியை மீட்பதற்கான பதிவு)

இலாப நட்டக் க/கு ப

உரிமைத் தொகைக் க/கு

(உரிமைத் தொகைக் கணக்கினை இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு)

**குறிப்பு:**

உரிமைத் தொகைக் க/கு ஒரு செலவாகையால் அது இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றப்படுகிறது. குறை உற்பத்திக் கணக்கு ஒரு நட்டம் என கருதப்படுகிறது. குறைந்த அளவு குத்தகைக் கணக்கு தானாகவே முடிந்து விடுகிறது.

ஈ) குத்தகையின்படி குறை உற்பத்தியை மீட்க முடியாதபோது அக்குறை உற்பத்திக் கணக்கை முடித்தலுக்கான பதிவு

இலாப நட்டக் க/கு ப

குறை உற்பத்திக் க/கு

(மீட்க முடியாத குறை உற்பத்தியினை இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு)

**எடுத்துக்காட்டு 1**

1998 ஜனவரி 1ல் இராமன் அன்கோ சுண்ணாம்புக்கல் எடுப்பதற்காக கோபால் அன்கோவிடமிருந்து ஒரு சுரங்கத்தை கீழ்க்கண்ட நிபந்தனைகளுடன் குத்தகைக்கு எடுத்தது.

1. ஆண்டுதோறும் செலுத்தவேண்டிய குறைந்த அளவு குத்தகை ரூ. 1,000
2. குத்தகையின் தொடக்கத்திலிருந்து 5 ஆண்டுகளுக்குள் குறை உற்பத்தியை மீட்க உரிமையுண்டு.
3. குத்தகையின் காலம் 10 ஆண்டுகளாகும்.
4. எடுக்கப்பெற்ற சுண்ணாம்புக் கல்லின் ஒவ்வொரு டன்னுக்கும் 50 பைசா வீதம் உரிமைத் தொகை செலுத்த வேண்டும்.
5. ஐந்து ஆண்டுகளில் எடுக்கப் பெற்றவைகள் முறையை 800, 1,500, 2,000, 3,400, 4000 டன்களாகும்.

இராமனின் ஏடுகளில் செய்ய வேண்டிய குறிப்பேடு பதிவுகளை செய்து, குறைந்த அளவு குத்தகைக்கு க/கு நிலக்கிழார் க/கு, குறை உற்பத்திக் க/கு உரிமைத்தொகைக் க/கு ஆகியவற்றைத் தயாரிக்கவும்.

குறிப்புகள்

1) கொடுக்கப்பட்டிருக்கும்பொது கணக்கினைச் செய்ய முயற்சிக்கும் முன் கணக்கினைக் சரியான முறையில் படித்துக் கீழ்க்கண்டவாறான ஒரு பட்டியலைத் தயாரிக்குமாறு மாணவர்களை கோரப்படுகிறார்கள்.

| ஆண்டு | உற்பத்தி (டன்கள்) | உண்மையான உரிமைத் தொகை | குறைந்த அளவு குத்தகை | குறை உற்பத்தி | | | செலுத்த தொகை |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | ஏற்பட்டது | மீட்டது | நீக்கியது | |
| 1998 | 800 | 400 | 1000 | 600 | — | — | 1000 |
| 1999 | 1500 | 750 | 1000 | 250 | — | — | 1000 |
| 2000 | 2000 | 1000 | 1000 | — | — | — | 1000 |
| 2001 | 3400 | 1700 | 1000 | — | 700 | — | 1000 |
| 2002 | 4000 | 2000 | 1000 | — | 150 | — | 1850 |

2) உண்மையான உரிமைத் தொகை குறைந்த அளவுக் குத்தகையை விட குறைவாக உள்ளதா அல்லது அதிகமாக உள்ளதா எனப் பார்க்கலாம். உரிமைத் தொகை குறைந்த அளவு குத்தகையைவிட குறைவாயிருந்தால் பிரிவு (ஆ)வில் உள்ள பதிவுகளைச் செய்யவும் அது குறைந்த அளவு குத்தகைக்கு சமமாய் இருக்கும்போது, பிரிவு (உ) வில் உள்ள பதிவுகளைச் செய்யவும், குறை உற்பத்தியை மீட்டுவதற்காக அதிகமுள்ள உரிமைத் தொகையினை உபயோகிக்கும்போது, பிரிவு (இ) உள்ள பதிவுகளைச் செய்யவும்.

3) மீட்க முடியாத குறை உற்பத்தியை நீக்குவதற்காக பிரிவு (ஈ) யில் கொடுக்கப்பட்டிருக்கும் பதிவுகளைச் செய்யவும்.

விடை

| நாள் | விபரம் | பே.ப. எண் | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | பை. | ரூ. | பை. |
| 1998 | குறைந்த அளவு குத்தகை க/கு ப<br>கோபால் அன் கோ க/கு<br>(கோபால் அன் கோவிற்கு செலுத்தவேண்டிய குறைந்த அளவு குத்தகைக்கான பதிவு) | | 1,000 | 00 | 1,000 | 00 |
| | உரிமைத் தொகை க/கு ப<br>குறை உற்பத்திக் க/கு ப<br>குறைந்த அளவு குத்தகை க/கு<br>(உண்மையான உரிமைத் தொகைக்கும் ஏற்பட்ட குறை உற்பத்திக்குமான பதிவு) | | 400<br>800 | 00<br>00 | 1,000 | 00 |
| | கோபால் அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>(குறைந்த அளவு குத்தகை செலுத்தியதற்கான பதிவு) | | 1000 | 00 | 1000 | 00 |
| | இலாப நட்டக் க/கு ப<br>உரிமைத் தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கை இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 400 | 00 | 400 | 00 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1999 டிச 31 | குறைந்த அளவு குத்தகை க/கு ப<br>கோபால் அன் கோ க/கு<br>(கோபால் அன் கோவிற்கு செலுத்த வேண்டிய குறைந்த அளவு குத்தகைக்கான பதிவு) | | 1000 | 00 | 1000 | 00 |
| | உரிமைத் தொகை க/கு ப<br>குறை உற்பத்திக் க/கு ப<br>குறைந்த அளவு குத்தகைக் க/கு<br>(உண்மையான உரிமைத் தொகைக்கும் ஏற்பட்ட குறை உற்பத்திக்குமான பதிவு) | | 750<br>250 | 00<br>00 | 1000 | 00 |
| | இலாப நட்டக் க/கு ப<br>உரிமைத் தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கை இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 750 | 00 | 750 | 00 |
| 2000 டிச. 31 | உரிமைத் தொகை க/கு ப<br>கோபால் அன் கோ க/கு<br>(செலுத்தவேண்டிய உண்மையான உரிமைத் தொகைக்கான பதிவு) | | 1,000 | 00 | 1,000 | 00 |
| 2000 டிச.3 1 | கோபால் அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>(குறைந்த அளவு குத்தகை செலுத்தப்பட்டதற்கான பதிவு) | | 1,000 | 00 | 1,000 | 00 |
| | இலாப நட்டக் க/கு ப<br>உரிமைத் தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை இலாப நட்ட கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 1,000 | 00 | 1,000 | 00 |
| 2001 டிச.3 1 | உரிமைத் தொகைக் க/கு ப<br>கோபால் அன் கோ க/கு<br>(கோபால் அன் கோவிற்குச் செலுத்தவேண்டிய உண்மையான உரிமைத் தொகைக்கான பதிவு) | | 1,700 | 00 | 1,700 | 00 |
| | கோபால் அன் கோ க/கு ப<br>குறை உற்பத்திக் க/கு<br>வங்கி க/கு<br>(குறைந்த அளவு குத்தகைக்கு மேல் அதிகமாயுள்ள உரிமைத் தொகையிலிருந்து குறை உற்பத்தியை மீட்பதற்கான பதிவு) | | 1,700 | 00 | 700<br>1,000 | 00<br>00 |
| | இலாப நட்டக் க/கு ப<br>உரிமைத் தொகைக் க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை இலாப நட்ட கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 1,000 | 00 | 1,000 | 00 |
| 2002 டிச.3 1 | உரிமைத் தொகைக் க/கு ப<br>கோபால் அன் கோ க/கு<br>(கோபால் அன் கோவிற்குச் செலுத்த வேண்டிய உண்மையான உரிமைத் தொகைக்கான பதிவு) | | 2,000 | 00 | 2,00 0 | 00 |
| | கோபால் அன் கோ க/கு ப<br>குறை உற்பத்திக் க/கு<br>வங்கி க/கு<br>(குறை உற்பத்தியை மீட்ட பின்பு உள்ள மீதித் தொகை முழுவதையும் செலுத்தியதற்கான பதிவு) | | 2,000 | 00 | 150<br>1,850 | 00<br>00 |
| | இலாப நட்டக் க/கு ப<br>உரிமைத் தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை இலாப நட்ட கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 2,000 | 00 | 2,00 | 00 |

குறை உற்பத்தி உள்ள ஆண்டுகளுக்கு மட்டுமே குறைந்த அளவு க/கு குத்தகை ஆரம்பிக்கப்படுகிறது. 2000லிருந்து குறை உற்பத்தி கிடையாது.

ப குறைந்த அளவு குத்தகை க/கு வ

| 1998 | | ரூ. | 1998 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| டிச31 | கோபால் அன் கோ க/கு | 1000 | டிச31 | உரிமைத் தொகைக் க/கு (800 டன்னுக்கு 50 பை வீதம்) குறை உற்பத்திக் க/கு | 400 600 |
| | | 1000 | | | 1000 |
| 1999 டிச31 | கோபால் அன் கோ க/கு | 1000 | | உரிமைத் தொகைக் க/கு குறை உற்பத்திக் க/கு | 750 250 |
| | | 1000 | | | 1000 |

ப உரிமைத் தொகை க/கு வ

| 1998 | | ரூ. | 1998 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| டிச31 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 400 | டிச31 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 400 |
| 1999 டிச31 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 750 | 1999 டிச31 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 750 |
| 2000 டிச31 | கோபால் அன் கோ | 1000 | 2000 டிச31 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 1000 |
| 2001 டிச31 | கோபால் அன் கோ | 1700 | 2001 டிச31 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 1700 |
| 2002 டிச31 | கோபால் அன் கோ | 2000 | 2002 டிச31 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 2000 |

ப கோபால் அன் கோ க/கு வ

| 1998 | | ரூ. | 1998 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| டிச31 | வங்கி க/கு | 100 | டிச31 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 1000 |
| | | 1000 | | | 1000 |
| 1999 டிச31 | வங்கி க/கு | 1000. | 1999 டிச31 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 1000 |
| | | 1000 | | | 1000 |
| 2000 டிச31 | வங்கி க/கு | 1000 | 2000 டிச31 | உரிமைத் தொகை க/கு | 1000 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | 1000 | | | 1000 |
| 2001 டிச31 | குறை உற்பத்தி க/கு<br>வங்கி க/கு | 1000<br>700 | 2001 டிச31 | உரிமைத் தொகை க/கு | 1700 |
| | | 1700 | | | 1700 |
| 2002 டிச31 | வங்கி க/கு<br>குறை உற்பத்தி க/கு | 1850<br>150 | 2002 டிச31 | உரிமைத் தொகை க/கு | 2000 |
| | | 2000 | | | 2000 |

ப குறை உற்பத்தி க/கு வ

| 1998 | | ரூ. | 1998 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| டிச31 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 600 | டிச31 | இருப்பு கீ/இ | 600 |
| | | 600 | | | 600 |
| 1999 ஜன1<br>டிச31 | இருப்பு கீ/கொ<br>குறைந்த அளவு குத்தகை க/கு | 600<br>250 | 1999 டிச31 | இருப்பு கீ/இ | 850 |
| | | 850 | | | 850 |
| 2000 ஜன1 | இருப்பு கீ/கொ | 850 | 2000 டிச31 | இருப்பு கீ/இ | 850 |
| | | 850 | | | 850 |
| 2001 ஜன1 | இருப்பு கீ/கொ | 850 | 2001 டிச31 | கோபால் அன் கோ க/கு<br>இருப்பு கீ/இ | 700<br>150 |
| | | 850 | | | 850 |
| 2002 ஜன1 | இருப்பு கீ/கொ | 150 | 2002 டிச31 | கோபால் அன் கோ க/கு | 150 |
| | | 150 | | | 150 |

உரிமைப் தொகையினைப் பெறுகின்றவருடைய ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவுகளைக் காண்பிக்கும்படி நீங்கள் கேட்கப்பட்டிருந்தால் கீழ்க்கண்ட பதிவுகளைச் செய்யவேண்டும்.

குறிப்பு

## கோபால் அன் கோவின் குறிப்பேட்டுப் பதிவுகள்

| நாள் | விபரம் | பே.ப.எண் | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | பை. | ரூ. | பை. |
| 1998 டிச31 | இராமன் அன்கோ க/கு ப<br>பெறும் உரிமைத் தொகை க/கு<br>*உரிமைத் தொகை இடைநிலைக் க/கு<br>(பெறும் உண்மையான உரிமைத் தொகைக்கும் குறைவான பதிவு) | | 1000 | 00 | 400<br>600 | 00<br>00 |
| | வங்கி க/கு ப<br>இராமன் அன்கோ க/கு<br>(குறைந்த அளவு குத்தகைப்பெற்றதற்கான பதிவு) | | 1000 | 00 | 1000 | 00 |
| | பெறும் உரிமைத் தொகை க/கு ப<br>இலாப நட்ட க/கு<br>(பெறும் உரிமைத் தொகை கணக்கினை மாற்றியதற்கான பதிவு) | | 400 | 00 | 400 | 00 |

குத்தகைக்காரர் கணக்கினைப் பற்று வைக்க வேண்டும். ஏனெனில் அவரிடமிருந்து தொகை பெற வேண்டியுள்ளது.

பெறும் உரிமைத் தொகைக் கணக்கினை உண்மையான உரிமைத் தொகைக்காக வரவு வைக்க வேண்டும். உரிமைத் தொகை இடைநிலைக் கணக்கை ஏதேனும் குறை இருந்தால் அதற்காக வரவு வைக்க வேண்டும். குறை சரிகட்டப்பட்டால், உரிமைத் தொகை இடைநிலைக் கணக்கினைப் பற்று வைக்க வேண்டும்.

வழக்கம்போல், பெற்ற தொகையைப் பதிவு செய்தபின், பெறும் உரிமைத் தொகைக் கணக்கை இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றி அக்கணக்கின் முடிக்கவும்.

| நாள் | விபரம் | பே.ப.எண் | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | பை. | ரூ. | பை. |
| 1999 டிச 31 | இராமன் அன்கோ க/கு ப<br>பெறும் உரிமைத் தொகை க/கு<br>உரிமைத் தொகை இடைநிலை க/கு<br>(உண்மையில் பெறும் உரிமைத் தொகைக்கும் குறைவான பதிவு) | | 1,000 | 00 | 750<br>250 | 00<br>00 |

* உரிமைத் தொகை இடைநிலைக் க/கு அல்லது குறை உற்பத்தி இடைநிலை க/கு

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | வங்கி க/கு ப<br>இராமன் அன்கோ க/கு<br>(பெற்ற குறைந்த அளவு உரிமைத் தொகைக்கான பதிவு) | | 1,000 | 00 | 1,000 | 00 |
| | பெறும் உரிமைத் தொகை க/கு ப<br>இலாப நட்ட க/கு<br>(பெறும் உரிமைத் தொகை கணக்கினை மாற்றியதற்கான பதிவு) | | 750 | 00 | 750 | 00 |
| 2000 டிச. | இராமன் அன்கோ க/கு ப<br>பெறும் உரிமைத் தொகை க/கு<br>(உண்மையில் பெறும் உரிமைத் தொகைக்கான பதிவு) | | 1,000 | 00 | 1,000 | 00 |
| | வங்கி க/கு ப<br>இராமன் அன்கோ க/கு<br>(உரிமைத் தொகையினை பெற்றதற்கான பதிவு) | | 1,000 | 00 | 1,000 | 00 |
| | பெறும் உரிமைத் தொகை க/கு ப<br>இலாப நட்டக் க/கு | | 1,000 | 00 | 1,000 | 00 |
| 2001 | இராமன் அன்கோ க/கு ப<br>உரிமை தொகை இடை நிலை க/கு ப<br>பெறும் உரிமைத் தொகை க/கு<br>(குறைபாடு சரி செய்யப்பட்டு மீதித் தொகையை பெறுதலுக்கான பதிவு) | | 1,000<br>700 | 00 | 1,700 | 00 |
| | வங்கி க/கு ப<br>இராமன் அன்கோ க/கு<br>(குறைந்த அளவு குத்தகையைப் பெற்றதற்கான பதிவு) | | 1,000 | 00 | 1,000 | 00 |
| | பெறும் உரிமைத் தொகை க/கு ப<br>இலாப நட்டக் க/கு<br>(கணக்கினை மாற்றியதற்கான பதிவு) | | 1,700 | 00 | 1,700 | 00 |
| 2002 | இராமன் அன்கோ க/கு ப<br>உரிமை தொகை இடை நிலை க/கு ப<br>பெறும் உரிமைத் தொகை க/கு<br>(குறைபாடு சரி செய்யப்பட்டு மீதித் தொகையை பெறுதலுக்கான பதிவு) | | 1,850<br>150 | 00 | 2,000 | 00 |
| | வங்கி க/கு ப<br>இராமன் அன்கோ க/கு<br>(தொகையினை பெற்றதற்கான பதிவு) | | 1,850 | 00 | 1,850 | 00 |
| | பெறும் உரிமைத் தொகை க/கு ப<br>இலாப நட்டக் க/கு<br>(பெறும் உரிமை தொகைக் கணக்கினை மாற்றியதற்கான பதிவு) | | 2,000 | 00 | 2,000 | 00 |

### எடுத்துக்காட்டு 2

பாலன் அன் கோ நிலக்கரி எடுப்பதற்காக மாறன் அன் கோவிடமிருந்து கீழ்க்கண்ட நிபந்தனைகளுடன் ஒரு சுரங்கத்தை குத்தகைக்கு எடுத்தது.

1) எடுக்கப்பெற்ற ஒவ்வொருவருடன் நிலக்கரிக்கு உரிமைத் தொகையாக ரூ.1 கொடுக்க வேண்டும்.

2) ஒவ்வொரு ஆண்டும் குறைந்த அளவு குத்தகையாக ரூ.2000 செலுத்த வேண்டும்.

3. ஆண்டின் தொடக்கத்திலிருந்து 3 ஆண்டுகளுக்குள் குறை உற்பத்தியை மீட்டுக் கொள்ளலாம்.

4. முதல் 5 ஆண்டுகளில் எடுக்கப்பெற்ற நிலக்கரியின் அளவு கீழ்க்கண்டவாறு இருந்தது.

முதல் ஆண்டு 600 டன்கள்

2ஆம் ஆண்டு 1800 டன்கள்

3ஆம் ஆண்டு 3000 டன்கள்

4ஆம் ஆண்டு 3600 டன்கள்

5ஆம் ஆண்டு 1600 டன்கள்

பாலன் அன் கோவின் ஏடுகளில் செய்ய வேண்டிய பதிவுகளைக் காண்பிக்கவும்.

விடை

**பாலன் அன் கோவின் ஏடுகள்**

| நாள் | விபரம் | பே.ப.எண் | பற்று ரூ. | பற்று பை. | வரவு ரூ. | வரவு பை. |
|---|---|---|---|---|---|---|
| முதல் ஆண்டு | குறைந்த அளவு குத்தகை க/கு ப<br>மாறன் அன் கோ க/கு<br>(முதல் ஆண்டிற்கு செலுத்தவேண்டிய குறைந்த அளவு குத்தகைக்கான பதிவு) | | 2,000 | 00 | 2,000 | 00 |
| | உரிமைத் தொகை க/கு ப<br>குறை உற்பத்தி க/கு ப<br>குறைந்த அளவு குத்தகைக் க/கு<br>(முதல் ஆண்டிற்கான உண்மையான உரிமைத் தொகைக்கும், ஏற்பட்ட குறை உற்பத்திக்குமான பதிவு) | | 600<br>1,400 | 00<br>00 | 2,000 | 00 |
| | மாறன் அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>(குறைந்த அளவு குத்தகையை செலுத்தியதற்கான பதிவு) | | 2,000 | 00 | 2,000 | 00 |
| 2 ஆம் ஆண்டு | குறைந்த அளவு குத்தகை க/கு ப<br>மாறன் அன் கோ க/கு<br>(செலுத்த வேண்டிய குறைந்த அளவு குத்தகைக்கான பதிவு) | | 2,000 | 00 | 2,000 | 00 |
| | உரிமைத் தொகைக் க/கு ப<br>குறை உற்பத்தி க/கு ப<br>குறைந்த அளவு குத்தகைக் க/கு<br>(உண்மையான உரிமைத் தொகைக்கும், ஏற்பட்ட குறை உற்பத்திக்குமான பதிவு) | | 1,800<br>200 | 00<br>00 | 2,000 | 00 |
| | மாறன் அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>(குறைந்த அளவு குத்தகையை செலுத்தியதற்கான பதிவு) | | 2,000 | 00 | 2,000 | 00 |
| | லாப நட்ட க/கு ப<br>உரிமை தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை இலாப நட்ட கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 1,800 | 00 | 1,800 | 00 |

குறிப்பு

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | லாப நட்ட க/கு ப<br>உரிமை தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை இலாப நட்ட கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 1,800 | 00 | 1,800 | 00 |
| 3ஆம் ஆண்டு | உரிமைத் தொகை க/கு ப<br>மாறன் அன் கோ க/கு<br>(உண்மையான செலுத்தவேண்டிய உரிமைத் தொகைக்கான பதிவு) | | 3,000 | 00 | 3,000 | 00 |
| | மாறன் அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>குறை உற்பத்தி க/கு<br>(குறைந்த அளவு குத்தகையை விட அதிகமாயுள்ள தொகையிலிருந்து குறை உற்பத்தி க/கு மீட்கப்பட்டது) | | 3,000 | 00 | 2,000<br>1,000 | 00<br>00 |
| | இலாப நட்ட க/கு ப<br>குறை உற்பத்தி க/கு<br>(மூன்றாம் ஆண்டின் இறுதியில் உள்ள மீட்க முடியாத குறை உற்பத்தி இலாப நட்டக் கணக்கில் பற்று வைக்கப்பட்ட பதிவு) | | 600 | 00 | 600 | 00 |
| | லாப நட்ட க/கு ப<br>உரிமைத் தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை இலாப நட்ட கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 3,000 | 00 | 3,000 | 00 |
| 4ஆம் ஆண்டு | உரிமைத் தொகை க/கு ப<br>மாறன் அன் கோ க/கு<br>(உண்மையான செலுத்தவேண்டிய உரிமைத் தொகைக்கான பதிவு) | | 3,600 | 00 | 3,600 | 00 |
| | மாறன் அன்கோ க/கு ப<br>வங்கி க/கு<br>(உரிமைத் தொகை செலுத்தியதற்கான பதிவு) | | 3,600 | 00 | 3,600 | 00 |
| | லாப நட்ட க/கு ப<br>உரிமை தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை இலாப நட்ட கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 3,600 | 00 | 3,600 | 00 |
| 5ம் ஆண்டு | குறைந்த அளவு குத்தகை க/கு ப<br>மாறன் அன் கோ க/கு<br>(செலுத்த வேண்டிய குறைந்த அளவு குத்தகைக்கான பதிவு) | | 2,000 | 00 | 2,000 | 00 |
| | உரிமைத் தொகை க/கு ப<br>குறை உற்பத்தி க/கு ப<br>குறைந்த அளவு குத்தகைக் க/கு<br>(5ஆம் ஆண்டிற்கான உண்மையான உரிமைத் தொகைக்கும், ஏற்பட்ட குறை உறபத்திக்குமான பதிவு) | | 1,600<br>400 | 00<br>00 | 2,000 | 00 |
| | மாறன் அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>(குறைந்த அளவு குத்தகையை செலுத்தியதற்கான பதிவு) | | 2,000 | 00 | 2,000 | 00 |
| | லாப நட்ட க/கு ப<br>உரிமைத் தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை மாற்றியதற்கான பதிவு) | | 1,600 | 00 | 1,600 | 00 |
| | லாப நட்ட க/கு ப<br>குறை உற்பத்தி க/கு<br>(மீட்க முடியாத குறை உற்பத்தி நீக்கப்பட்டதற்கான பதிவு) | | 400 | 00 | 400 | 00 |

**எடுத்துக்காட்டு: 3**

மோகன் என்னும் ஒரு விஞ்ஞானி புகைப்படக் கருவிகள் தயாரித்தலுக்கான உரிமையைப் பெற்றிருந்தார். 2002 ஜனவரி 1ல் அக்கருவியை உற்பத்தி செய்து விற்பனை செய்தலுக்கான ஒவ்வொரு புகைப்பட கருவிக்கும் உரிமைத் தொகையாக ரூ. 5 கொடுக்க வேண்டுமென்ற நிபந்தனைகளுடன் மூர்த்திக்கு அவர் அனுமதியளித்தார். மேலும் மூர்த்தி குறைந்த அளவு குத்தகையாக முதல் மாதத்தில் ரூ. 1000மும் இரண்டாவது மாதத்தில் ரூ. 1200ம் மூன்றாவது மாதத்தில் ரூ. 1500ம் அதன் பின் மாதந்தோறும் ரூ. 2000மும், செலுத்த வேண்டும். ஒவ்வொரு மாதத்தின் குறை உற்பத்தியையும், குறை உற்பத்தி ஏற்பட்ட மாதத்திற்கு அடுத்து வருகின்ற ஒரு மாதத்திற்குள் மீட்டுக் கொள்ளலாம் என்று மூர்த்திக்கு மோகன் அனுமதியளித்தார். முதல் 5 மாதங்களில் விற்கப்பட்ட கருவிகளின் எண்ணிக்கை கீழ்க்கண்டவாறு இருந்தது.

| மாதங்கள் | ஜனவரி | பிப்ரவரி | மார்ச் | ஏப்ரல் | மே |
|---|---|---|---|---|---|
| புகைப்படக் கருவிகள் | 150 | 250 | 300 | 350 | 500 |

ஒவ்வொரு மாதத்தின் இறுதியிலும் கணக்குகள் முடிக்கப்படுவதாக வைத்துக்கொண்டு மூர்த்தியின் ஏடுகளின் செய்ய வேண்டிய பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

**விடை**

**மூர்த்தியின் ஏடுகள்**

ப **குறைந்த அளவு குத்தகை க/கு** வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2002 | | ரூ. | 1998 | | ரூ. |
| ஜன1 | மோகன் க/கு | 1000 | ஜன1 | உரிமைத் தொகைக் க/கு | 750 |
| | | | | குறை உற்பத்திக் க/கு | 250 |
| | | 1000 | | | 1000 |
| ஏப்30 | மோகன் க/கு | 2000 | | உரிமைத் தொகைக் க/கு | 1750 |
| | | | | குறை உற்பத்திக் க/கு | 250 |
| | | 2000 | | | 2000 |

ப மோகன் க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2002 ஜன1 | வங்கி க/கு | ரூ. 1,000 | 2002 ஜன30 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | ரூ. 1,000 |
| | | 1,000 | | | 1,000 |
| பிப்28 | வங்கி க/கு<br>குறை உற்பத்திக் க/கு | 1,200<br>50 | ஏப்30 | உரிமைத் தொகைக் க/கு | 1,250 |
| | | 2,000 | | | 2,000 |
| மார்ச்31 | வங்கி க/கு | 1,500 | | உரிமை தொகைக் க/கு | 1,500 |
| | | 1,500 | | | 1,500 |
| ஏப்30 | வங்கி க/கு | 2,000 | | குறைந்த அளவுக் குத்தகைக் க/கு | 2,000 |
| | | 2000 | | | 2,000 |
| மே31 | வங்கி க/கு<br>குறை உற்பத்திக் க/கு | 2,250<br>250 | | உரிமைத் தொகைக் க/கு | 2,500 |
| | | 2,500 | | | 2,500 |

ப உரிமைத் தொகை க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2002 ஜன1 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | ரூ. 750 | 2002 ஜன31 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | ரூ. 750 |
| | | 750 | | | 750 |
| பிப்28 | கோபால் அன் கோ | 1,250 | பிப்28 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 1,250 |
| | | 1,250 | | | 1,250 |
| மார்ச்31 | மோகன் க/கு | 1,500 | மா31 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 1,500 |
| | | 1,500 | | | 1,500 |
| ஏப்30 | குறைந்த அளவைக் குத்தகைக் க/கு | 1,750 | ஏப்30 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 1,750 |
| | | 1,750 | | | 1,750 |
| மே31 | மோகன் க/கு | 2,500 | மே 31 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 2,500 |
| | | 2,500 | | | 2,500 |

ப குறை உற்பத்திக் க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2002 ஜன1 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | ரூ. 250 | 2002 ஜன31 | இருப்பு கீ/இ (மாற்றியது) | ரூ. 250 |
| | | 250 | | | 250 |
| பிப்28 | இருப்பு கீ/கொ | 250 | பிப்28 | மோகன் க/கு<br>லாப நட்டக் க/கு | 50<br>200 |
| | | 250 | | | 250 |
| ஏப்30 | குறைந்த அளவுக் குத்தகைக் க/கு | 250 | ஏப்30 | இருப்பு கீ/இ | 250 |
| | | 250 | | | 250 |
| மே1 | இருப்பு கீ/கொ | 250 | மே31 | மோகன் க/கு | 250 |
| | | 250 | | | 250 |

கொடுக்கப்பட்டுள்ள நிபந்தனைகளின்படி குறை உறப்த்தியில் உள்ள தொகையை (2002 ஐனவரி) மாதத்திற்கான ரூ.200) எதிர் காலத்தில் மீட்க முடியாது. எனவே ரூ. மீட்க முடியாத குறை உற்பத்தி என இலாப நட்டக் கணக்கில் பற்று வைக்கப்பட்டு நீக்கப்படுகிறது.

**எடுத்துக்காட்டு: 4**

மணி அன் கோ. பேனாக்கள் உற்பத்தி செய்து விற்பதற்காக 1996, ஐனவரி 1ல் காந்த அன் கோவிடமிருந்து 20 வருடங்களுக்கான குத்தகை ஒன்றினை கீழ்க்கண்ட நிபந்தனைகளுடன் பெற்றது.

1) ஒவ்வொரு ஆண்டிற்கும் குறைந்த அளவு குத்தகையாக ரூ. 3,000 செலுத்த வேண்டுமென ஒப்புக்கொள்ளப்பட்டது.
2) ஒவ்வொரு ஆண்டிலும் உரிமைத் தொகையைவிட அதிகமாயுள்ள (உபரி) குறைந்த அளவு குத்தகை தொகையை அந்த ஆண்டிற்கு அடுத்து வருகின்ற 4 ஆண்டுகளுக்குள் மீட்டுக் கொள்ள முடியும்.
3) ஏற்கனவே குறிப்பிட்ட குறைந்த அளவு குத்தகைக்குப்பட்டு, ஒவ்வொரு ஆண்டும் மொத்த விற்பனை விற்பனைத் தொகையில் 5% உரிமைத் தொகையைச் செலுத்த வேண்டும்.
4) விபத்து, அல்லது வேலை நிறுத்தத்தின் காரணமாக ஏதாவது ஒரு ஆண்டில் குறைந்த அளவு குத்தகையை விட குறைந்த உரிமைத் தொகை இருக்குமானால், அக்குத்தகைக்தாரர் தான் செலுத்த வேண்டிய குறைந்த அளவு குத்தகையை வேலை நடக்காத காலத்திற்காக விகிதாச்சாரப்படி குறைத்துக் கொள்ளலாம்.

| ஆண்டு | உற்பத்தியான மேனாக்களின் எண்ணிக்கை | ஒவ்வொரு பேனாவின் விற்பனைத் தொகை ரூ. |
|---|---|---|
| 1996 | 1,200 | 20 |
| 1997 | 1,600 | 20 |
| 1998 | 2,400 | 20 |
| 1999 | 4,000 | 20 |
| 2000 | 1,800 | 20 |
| 2001 | 3,600 | 20 |
| 2002 | 5,400 | 20 |

2000 வேலை நிறுத்தத்தின் காரணமாக 4 மாதங்கள் வேலை முழுமையாக நிறுத்தப்பட்டது.

மணி அன் கோவின் ஏடுகளின் செய்ய வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தரவும், மேலும் அனைத்து ஆண்டுகளுக்கான பேரேட்டுக் கணக்குகளையும் காணபிக்கவும்.

விடை:

| நாள் | விபரம் | பே.ப.எண் | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | பை. | ரூ. | பை. |
| டிச 31 | குறைந்த அளவு குத்தகை க/கு ப<br>காந்தி அன் கோ க/கு<br>(செலுத்தவேண்டிய குறைந்த அளவு குத்தகைக்கான பதிவு) | | 3,000 | 00 | 3,000 | 00 |
| | உரிமைத் தொகை க/கு ப<br>குறை உற்பத்தி க/கு ப<br>குறைந்த அளவு குத்தகைக் க/கு<br>(உண்மையான உரிமைத் தொகைக்கும், ஏற்பட்ட குறை உற்பத்திக்குமான பதிவு) | | 1,200<br>1,800 | 00<br>00 | 3,000 | 00 |
| | காந்தி அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>(குறைந்த அளவு குத்தகையை செலுத்தியதற்கான பதிவு) | | 3,000 | 00 | 3,000 | 00 |
| | லாப நட்டக் க/கு ப<br>உரிமைத் தொகை க/கு | | 3,000 | 00 | 3,000 | 00 |
| 1997 டிச 31 | குறைந்த அளவு குத்தகை க/கு ப<br>காந்தி அன் கோ க/கு<br>(செலுத்த வேண்டிய குறைந்த அளவு குத்தகைக்கான பதிவு) | | 3,000 | 00 | 3,000 | 00 |
| | உரிமைத் தொகைக் க/கு ப<br>குறை உற்பத்தி க/கு ப<br>குறைந்த அளவு குத்தகைக் க/கு<br>(உண்மையான உரிமைத் தொகைக்கும், ஏற்பட்ட குறை உற்பத்திக்குமான பதிவு) | | 1,600<br>1,400 | 00<br>00 | 3,000 | 00 |
| | காந்தி அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>(குறைந்த அளவு குத்தகையை செலுத்தியதற்கான பதிவு) | | 3,000 | 00 | 3,000 | 00 |
| | லாப நட்ட க/கு ப<br>உரிமை தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை மாற்றியதற்கான பதிவு) | | 1,600 | 00 | 1,600 | 00 |

குறிப்பு

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1998<br>டிச<br>31 | குறைந்த அளவு குத்தகைக் க/கு ப<br>மாறன் அன் கோ க/கு<br>(செலுத்தவேண்டிய குறைந்த அளவு குத்தகைக்கான பதிவு) | | 3,000 | 00 | 3,000 | 00 |
| | உரிமைத் தொகை க/கு ப<br>குறை உற்பத்திக் க/கு ப<br>குறைந்த அளவு குத்தகை க/கு<br>(உண்மையான உரிமைத் தொகைக்கும், ஏற்பட்ட குறை உற்பத்திக்குமான பதிவு) | | 2,400<br>600 | 00<br>00 | 3,000 | 00 |
| | காந்தி அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>(குறைந்த அளவு குத்தகை செலுத்தப்பட்டதற்கான பதிவு) | | 3,000 | 00 | 3,000 | 00 |
| | லாப நட்ட க/கு ப<br>உரிமைத் தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை மாற்றியதற்கான பதிவு) | | 2,400 | 00 | 2,400 | 00 |
| 1999 | உரிமைத் தொகை க/கு ப<br>காந்தி அன் கோ க/கு<br>(உண்மையில் செலுத்தவேண்டிய உரிமைத் தொகைக்கான பதிவு) | | 4,000 | 00 | 4,000 | 00 |
| | காந்தி அன்கோ க/கு ப<br>வங்கி க/கு<br>குறை உற்பத்தி க/கு<br>(உபரியாயுள்ள குறைந்த அளவு குத்தகையில் குறை உறபத்தி சரியாக்கப்பட்டது) | | 4,000 | 00 | 3,000<br>1,000 | 00<br>00 |
| | லாப நட்ட க/கு ப<br>உரிமை தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை இலாப நட்ட கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 4,000 | 00 | 4,000 | 00 |
| 2000<br>டிச<br>31 | குறைந்த அளவு குத்தகை க/கு ப<br>காந்தி அன் கோ க/கு<br>(8 மாதங்களுக்காக செலுத்த வேண்டிய குறைந்த அளவுக்கு குத்தகை) (3000÷12x8=2000) கான பதிவு) | | 2,000 | 00 | 2,000 | 00 |
| | உரிமைத் தொகை க/கு ப<br>குறை உற்பத்தி க/கு ப<br>குறைந்த அளவு குத்தகைக் க/கு<br>(உண்மையான உரிமைத் தொகைக்கும், ஏற்பட்ட குறை உறபத்திக்குமான பதிவு) | | 1,800<br>200 | 00<br>00 | 2,000 | 00 |
| | காந்தி அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>(குறைந்த அளவு குத்தகையை செலுத்தியதற்கான பதிவு) | | 2,000 | 00 | 2,000 | 00 |
| | லாப நட்ட க/கு ப<br>உரிமைத் தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை லாப நட்டக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 1,800 | 00 | 1,800 | 00 |
| | லாப நட்ட க/கு ப<br>குறை உற்பத்தி க/கு<br>(முதல் ஆண்டில் ஏற்பட்ட குறை உற்பத்தியை இப்போது மீட்டதற்கான பதிவு) | | 800 | 00 | 800 | 00 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 2001 டிச 31 | உரிமைத் தொகை க/கு ப<br>காந்தி அன் கோ க/கு<br>(உண்மையில் செலுத்த வேண்டிய உரிமைத் தொகைக்கான பதிவு) | | 3,600 | 00 | 3,600 | 00 |
| | காந்தி அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>குறை உற்பத்தி க/கு<br>(உபரியாயுள்ள குறைந்த அளவு குத்தகையில் குறை உற்பத்தி சரிபார்க்கப்பட்டது) | | 3,600 | 00 | 3,000<br>600 | 00<br>00 |
| | இலாபநட்டக் க/கு ப<br>உரிமைத் தொகை க/கு<br>(உரிமைத் தொகைக் கணக்கினை இலாப நட்டக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 3,600 | 00 | 3,600 | 00 |
| | இலாபநட்ட க/கு ப<br>குறை உற்பத்தி க/கு<br>(இரண்டாம் ஆண்டில் ஏற்பட்ட குறை உற்பத்தியை இப்போது மீட்டதற்கான பதிவு) | | 800 | 00 | 800 | 00 |
| 2002 டிச 31 | உரிமைத் தொகை க/கு ப<br>காந்தி அன் கோ க/கு<br>(செலுத்த வேண்டிய உண்மையான உரிமைத் தொகைக்கான பதிவு) | | 5,400 | 00 | 5,400 | 00 |
| | காந்தி அன் கோ க/கு ப<br>வங்கி க/கு<br>குறை உற்பத்தி க/கு<br>(குறை உற்பத்தியை மீட்பதற்கான பதிவு) | | 5,400 | 00 | 4,600<br>800 | 00<br>00 |
| | இலாப நட்ட க/கு ப<br>உரிமைத் தொகை க/கு<br>(உரிமைத் தொகை கணக்கினை இலாபநட்டக் கணக்கிற்கு மாற்றியதற்கான பதிவு) | | 5,400 | 00 | 5,400 | 00 |

## மணி அன் கோவின் ஏடுகள்

ப குறைந்த அளவு குத்தகை க/கு

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 1996 முதல் ஆண்டு | காந்தி அன் கோ க/கு | 3,000 | 1996 முதல் ஆண்டு | உரிமைத் தொகை க/கு<br>குறை உற்பத்திக் க/கு | 1,200<br>1,800 |
| | | 3,000 | | | 3,000 |
| 1997 | காந்தி அன் கோ க/கு | 3,000 | 1997 | உரிமைத் தொகை க/கு<br>குறை உற்பத்திக் க/கு | 1,600<br>1,400 |
| | | 3,000 | | | 3,000 |
| 1998 | காந்தி அன் கோ க/கு | 3,000 | | உரிமைத் தொகை க/கு<br>குறை உற்பத்திக் க/கு | 2,400<br>600 |
| | | 3,000 | | | 3,000 |
| 1999 | காந்தி அன் கோ க/கு | 2,000 | | உரிமைத் தொகை க/கு<br>குறை உற்பத்திக் க/கு | 1,800<br>200 |
| | | 2,000 | | | 2,000 |

ப — காந்தி அன் கோ க/கு — வ

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 1996 முதல் ஆண்டு | வங்கி க/கு | 3,000 | 1996 முதல் ஆண்டு | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 3,000 |
| | | 3,000 | | | 3,000 |
| 1997 | வங்கி க/கு | 3,000 | 1997 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 3,000 |
| | | 3,000 | | | 3,000 |
| 1998 | வங்கி க/கு | 3,000 | 1998 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 3,000 |
| | | 3,000 | | | 3,000 |
| 1999 | வங்கி க/கு<br>குறை உற்பத்திக் க/கு | 3,000<br>1,000 | 1999 | உரிமைத் தொகைக் க/கு | 4,000 |
| | | 4,000 | | | 4,000 |
| 2000 | வங்கி க/கு | 2000 | 2000 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 2,000 |
| | | 2,000 | | | 2,000 |
| 2001 | வங்கி க/கு<br>குறை உற்பத்திக் க/கு | 3,000<br>600 | 2001 | உரிமைத் தொகைக் க/கு | 3,600 |
| | | 3,600 | | | 3,600 |
| 2002 | வங்கி க/கு<br>குறை உற்பத்திக் க/கு | 3,600<br>800 | 2002 | உரிமைத் தொகைக் க/கு | 4,400 |
| | | 4,400 | | | 4,400 |

ப — உரிமைத் தொகை க/கு — வ

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 1996 முதல் ஆண்டு | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 1,200 | 1996 முதல் ஆண்டு | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 1,200 |
| | | 1,200 | | | 1,200 |
| 1997 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 1,600 | 1997 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 1,600 |
| | | 1,600 | | | 1,600 |
| 1998 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 2,400 | 1998 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 2,400 |
| | | 2,400 | | | 2,400 |
| 1999 | காந்தி அன் கோ க/கு | 4,000 | 1999 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 4,000 |
| | | 4,000 | | | 4,000 |
| 2000 | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 1,800 | 2000 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 1,800 |
| | | 1,800 | | | 1,800 |
| 2001 | காந்தி அன் கோ க/கு | 3,600 | 2001 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 3,600 |
| | | 3,600 | | | 3,600 |
| 2002 | காந்தி அன் கே க/கு | 4,400 | 2002 | இலாப நட்டக் க/கு (மாற்றியது) | 4,400 |

ப குறை உற்பத்திக் க/கு வ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1996 | | ரூ. | 1996 | | ரூ. |
| | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 1,800 | | இருப்பு கீ/இ | 1,800 |
| | | 1,800 | | | 1,800 |
| 1997 | இருப்பு கீ/இ | 1,800 | 1997 | இருப்பு கீ/இ | 3,200 |
| | குறைந்த அளவு குத்தகைக் க/கு | 1,400 | | | |
| | | 3,200 | | | 3,200 |
| 1998 | இருப்பு கீ/கொ | 3,200 | 1998 | இருப்பு கீ/இ | 3,800 |
| | குறைந்த அளவுக் குத்தகைக் க/கு | 600 | | | |
| | | 3,800 | | | 3,800 |
| 1999 | இருப்பு கீ/கொ | 3,800 | 1999 | காந்தி அன்கோ க/கு | 1,000 |
| | குறைந்த அளவுக் குத்தகைக் க/கு | | | இருப்பு கீ/இ | 2,800 |
| | | 3,800 | | | 3,800 |
| 2000 | இருப்பு கீ/கொ | 2,800 | 2000 | இலாபநட்ட க/கு | 800 |
| | குறைந்த அளவுக் | 200 | | இருப்பு கீ/இ | 2,200 |
| | | 3,000 | | | 3,000 |
| 2001 | இருப்பு கீ/கொ | 2,200 | 2001 | காந்தி அன் கோ | 600 |
| | | | | இலாபநட்ட க/கு | 800 |
| | | | | இருப்பு கீ/இ | 800 |
| | | 2,200 | | | 2,200 |
| 2002 | இருப்பு கீ/கொ | 800 | 2002 | காந்தி அன்கோ கோ | 800 |
| | | 800 | | | 800 |

## 4.4. பெறும் உரிமைத் தொகை மற்றும் செலுத்தும் உரிமைத் தொகை (Royalties Recievable and Royalities Payable)

ஒரு சுரங்கத்தினை உபயோகிப்பதற்கான குத்தகை ஒன்றினை மோகன் என்பவர் இராமனிடமிருந்து பெற்றால், மோகன் சுரங்கத்தின் ஒரு

பகுதியை மணி என்பவருக்கு கீழ்க்குத்தகைக்கு (Sub-lease) அளித்தார். இந்த ஏற்பாட்டினால் மூன்று நபர்கள் இணைக்கப்படுகிறார்கள்.

1. நிழக்கிழார் (குத்தகை விடுபவர்) இராமன்
2. குத்தகைக்காரர் (குத்தகை எடுப்பவர்) மோகன்
3. கீழ்க்குத்தகைதாரர் மணி

இராமனைப் பொறுத்தவரையில் மோகன் ஒரு குத்தகைதாரர் மணியைப் பொறுத்த மட்டில் மோகன் ஒரு நிழக்கிழார் அல்லது சொத்துக்காரருடைய நிலையில் இருக்கிறார். இந்த ஒப்பந்தப்படி மோகன் அவருடைய ஏடுகளில் இரண்டு பதிவுகளைச் செய்ய வேண்டியுள்ளது.

முதலாவதாக ஒரு குத்தகைதாரர் என்ற நிலையில்

— செலுத்தும் உரிமைத் தொகைக் கணக்கும்

இரண்டாவதாக நிழக்கிழார் என்ற நிலையில்

— பெறும் உரிமைத் தொகைக் கணக்கும்

தயாரிக்க வேண்டியுள்ளது

உண்மையான சொத்துக்காரருக்கு வேண்டிய மொத்த உரிமை தொகையை செலுத்தும் உரிமைத் தொகைக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். குத்தகைகாரர் மற்றும் கீழ்க் குத்தகைகாரர் ஆகியோருடைய மொத்த உற்பத்திக்ககு அக்குத்தகைகாரருக்கும் நிலக்கிழாருக்கும் இடையேயுள்ள ஒப்பந்தத்தின் படியான வீதப்படி கணக்கிட்டு செலுத்த வேண்டிய மொத்த தொகை கண்டுபிடிக்கப்படுகிறது. நிலக்கிழாருக்கும் குத்தகைகாரருக்குமிடையே ஒப்பந்தத்தின்படியான வீதப்படி கீழ்க் குத்தகைகாரரின் உற்பத்திக்கான உரிமைத் தொகையினை கணக்கில் வரவு வைக்க வேண்டும். இக்கணக்கில் உள்ள வித்தியாசத்தை உற்பத்திக் கணக்கிற்கு மாற்றிவிட வேண்டும்.

குத்தகைகாரருக்கும் கீழ்க்குத்தகைதாரருக்கும் இடையேயுள்ள ஒப்பந்தத்தின்படியான வீதப்படி கீழ்க்குத்தகைதாரரின் உற்பத்திக்கான உரிமைத் தொகையை கணக்கிட்டு அவ்வாறு ஈட்டிய உரிமைத் தொகையினை பெறும் உரிமைத் தொகை கணக்கில் வரவு வைக்க வேண்டும். நிலக்கிழாருக்கும் குத்தகைக்காரருக்கும் இடையேயுள்ள

ஒப்பந்தப்படியான வீதப்படி கீழ்க்குத்தகைதாரரின் உற்பத்திக்கு அவர் செலுத்த வேண்டிய உரிமைத் தொகையினை கணக்கிட்டு அத்தொகையை பெறும் உரிமைத் தொகைக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். இக்கணக்கில் உள்ள வித்தியாசம் இலாபநட்டக் கணக்கிற்கு மாற்றப்பட்டுள்ளது.

வழக்கம் போல் மீட்கக்கூடிய குறை உற்பத்திக் கணக்கு தயாரிக்கப்படும் அனுமதிக்க கூடிய குறை உற்ப்த்தி கணக்கு (குத்தகைக்காரருக்கும் கீழ்க் குத்தகைதாரருக்கும் இடையே ஏற்பட்ட குறை உற்பத்தி) அப்பற்றாக்குறை நீக்க வரவு வைக்கப்படுகிறது. குறை உற்பத்தி சரி செய்யப்படும் பொழுது இக்கணக்கு பற்று வைக்கப்படுகிறது.

**எடுத்துக்காட்டு 5**

1996 ஜனவரி 1ல் பாலன் என்பவர் இராஜன் என்பவரிடம் ஒரு சுரங்கத்தை 40 வருடங்களுக்கு குத்தகை எடுத்தார். எடுக்கப்பெறும் ஒவ்வொரு டன் கனிவளத்திற்கும் 75 வைசாக்கள் வீதம் உரிமைத் தொகை செலுத்த வேண்டுவெனவும் முடிவாகிறது. மேலும் ஏற்படும் குறை உற்பத்தியினை அதிகமாகக் கிடைக்கும் அதி உரிமைத் தொகையிலிருந்து இக்குத்தகைக் காலம் முழுவதும் மீட்டுக் கொள்ளலாம்.

1992 ஜீலை 1ல் பாலன் சுரங்கத்தின் ஒரு பகுதியை கோபால் என்பவருக்கு 30 ஆண்டுகளுக்கு செலுத்த வேண்டுமெனவும், ஒவ்வொரு டன்னுக்கும் ரூ.1 குத்தகைத் தொகை தர வேண்டும் எனவும், ஒரு வரடத்திற்கு குறைந்த அளவுக் குத்தகையாக ரூ1500 செலுத்த வேண்டுமெனவும் முடிவாகிறது. குத்தகையின் மூலம் 4 வருடங்களில் மட்டுமே ஏற்பட்ட குறை உற்பத்தியை மீட்டுக் கொள்ளலாம்.

**உற்பத்தியின் அளவுகள் கீழ்க்கண்டவாறு இருந்தன**

| ஆண்டு | பாலனின் உற்பத்தி | கோபாலின் உற்பத்தி | மொத்த உற்பத்தி |
|---|---|---|---|
| 1996 | 400 டன்கள் | இல்லை | 400 டன்கள் |
| 1997 | 1,200 டன்கள் | 400 டன்கள் | 1,600 டன்கள் |

| | | | |
|---|---|---|---|
| 1998 | 4,000 டன்கள் | 1,200 டன்கள் | 5,200 டன்கள் |
| 1999 | 5,400 டன்கள் | 2,600 டன்கள் | 8,000 டன்கள் |
| 2000 | 7,200 டன்கள் | 3,200 டன்கள் | 10,400 டன்கள் |

பாலனின் ஏடுகளில் கணக்குகளைத் தயாரிக்கவும்.

**விடை**

**பாலனின் ஏடுகள்**

ப **செலுத்து உரிமைத் தொகை க/கு** வ

| 1996 | | ரூ. | 1996 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| டிச 31 | இராஜன் க/கு | 300 | டிச 31 | உற்பத்திக் க/கு | 300 |
| | | 300 | | | 300 |
| 1997 | | | 1997 | | |
| டிச 31 | இராஜன் க/கு | 1,200 | டிச 31 | பெறும் உரிமைத் தொகை க/கு<br>உற்பத்திக் க/கு | 300<br>900 |
| | | 1,200 | | | 1,200 |
| 1998 | | | 1998 | | |
| டிச 31 | இராஜன் க/கு | 3,900 | டிச 31 | பெறும் உரிமைத் தொகை க/கு<br>உற்பத்திக் க/கு | 900<br>3,000 |
| | | 3,900 | | | 3,900 |
| 1999 | | | 1999 | | |
| டிச 31 | இராஜன் க/கு | 6,000 | டிச 31 | பெறும் உரிமைத் தொகை க/கு<br>உற்பத்தி க/கு | 1,950<br>4,050 |
| | | 6,000 | | | 6,000 |
| 2000 | | | 2000 | | |
| டிச 31 | இராஜன் க/கு | 7,800 | டிச 31 | பெறும் உரிமைத் தொகை க/கு<br>உற்பத்தி க/கு | 2,400<br>5,400 |
| | | 7,800 | | | |

ப **குறை உற்பத்தி க/கு** வ

| 1996 | | ரூ. | 1996 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| டிச 31 | இராஜன் க/கு | 1,700 | டிச 31 | இருப்பு கீ/இ | 1,700 |
| | | 1,700 | | | 1,700 |
| 1997 | | | | | |
| ஜன.1 | இருப்பு கீ/கொ | 1,700 | | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1998 | | | 1997 | | |
| ஜன.1 | இராஜன் க/கு | 800 | டிச 31 | இருப்பு கீ/இ | 2,500 |
| | | 2,500 | | | 2,500 |
| 1991 | | | 1998 | | |
| ஜன 1 | இருப்பு கீ/கொ | 2,500 | டிச 31 | இராஜன் க/கு<br>இருப்பு கீ/இ | 1,900<br>600 |
| | | 2,500 | | | 2,500 |
| 2000 | | | 1999 | | |
| ஜன 1 | இருப்பு கீ/கொ | 600 | டிச 31 | இராஜன் க/கு | 600 |
| | | 600 | | | 600 |

ப இராஜன் க/கு வ

| 1996 | | ரூ. | 1996 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| டிச31 | வங்கி க/கு | 2,000 | டிச 31 | செலுத்தும் உரிமைத் தொகை க/கு | 300 |
| | | | | குறை உற்பத்தி க/கு | 1,700 |
| | | 2,000 | | | 2,000 |
| 1997 | | | 1997 | | |
| டிச31 | வங்கி க/கு | 2,000 | டிச 31 | செலுத்தும் உரிமைத் தொகை க/கு | 1,200 |
| | | | | குறை உற்பத்தி க/கு | 800 |
| | | 2,000 | | | 2,000 |
| 1998 | குறை உற்பத்தி க/கு | 1,900 | 1998 | | |
| டிச1 | வங்கி க/கு | 2,000 | டிச 31 | செலுத்தும் உரிமைத் தொகை க/கு | 3,900 |
| | | 3,900 | | | 3,900 |
| 1999 | குறை உற்பத்தி க/கு | 600 | 1999 | | |
| டிச31 | வங்கி க/கு | 5,400 | டிச 31 | செலுத்தும் உரிமைத் தொகை க/கு | 6,000 |
| | | 2,500 | | | 2,500 |
| 2000 | | | 2000 | | |
| டிச31 | வங்கி க/கு | 7,800 | டிச 31 | செலுத்தும் உரிமைத் தொகை க/கு | 7,800 |
| | | 7,800 | | | 7,800 |

ப பெறும் உரிமைத் தொகை க/கு வ

| 1997 | | ரூ | 1997 | | ரூ |
|---|---|---|---|---|---|
| டிச31 | செலுத்தும் உரிமைத் தொகை க/கு (டன்னுக்கு 75 பைசா வீதம் 400 டன்களுக்கு) இலாபநட்ட க/கு | 300<br>100 | டிச 31 | கோபால் க/கு | 400 |
| | | 400 | | | 400 |
| 1998 டிச31 | செலுத்தும் உரிமைத் தொகை க/கு | 900 | 1998 டிச 31 | கோபால் க/கு | 1,200 |
| | இலாபநட்ட க/கு | 300 | | | |
| | | 1,200 | | | 1,200 |
| 1999 டிச31 | செலுத்தும் உரிமைத் தொகை க/கு | 1,950 | 1999 டிச 31 | கோபால் க/கு | |
| | இலாபநட்ட க/கு | 650 | | | 6,000 |
| | | 2,600 | | | 2,500 |
| 2000 டிச31 | செலுத்தும் உரிமைத் தொகை க/கு | 2,400 | 2000 டிச 31 | கோபால் க/கு | 3,200 |
| | இலாபநட்ட க/கு | 800 | | | |
| | | 3,200 | | | 3,200 |

ப அனுமதிக்கக்கூடிய குறை உற்பத்தி க/கு வ

| 1997 | | ரூ. | 1997 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| டிச 31 | இருப்பு கீ/இ | 1,100 | டிச 31 | கோபால் க/கு | 1,100 |
| | | 1,100 | | | 1,100 |
| '1998 | இருப்பு கீ/இ | 1,400 | 1998 | இருப்பு கீ/கொ | 1,100 |
| ஜன.1 | | | டிச 31 | கோபால் க/கு | 300 |
| | | 1,400 | | | 1,400 |
| 1999 டிச 31 | கோபால் க/கு (மீட்கப்பட்டது) | 1,100 | 1998 டிச 31 | இருப்பு கீ/கொ | 1,400 |
| | இருப்பு கீ/இ | 300 | | | |
| | | 1,400 | | | 1,400 |
| 2000 டிச31 | கோபால் க/கு (மீட்கப்பட்டது) | 300 | 2000 டிச 31 | இருப்பு கீ/கொ | 300 |
| | | 300 | | | 300 |

ப கோபால் க/கு வ

| 1997 | | ரூ | 1997 | | ரூ |
|---|---|---|---|---|---|
| டிச31 | பெறும் உரிமைத் தொகை க/கு<br>இடைநிலைக் க/கு | 400<br>1,100 | டிச 31 | வங்கி க/கு | 1,500 |
| | | 1,500 | | | 1,500 |
| 1998 டிச31 | பெறும் உரிமைத் தொகை க/கு | 1,200 | 1998 டிச 31 | வங்கிக் க/கு | 1,500 |
| | உரிமை தொகை இடைநிலைக் க/கு | 300 | | | |
| | | 1,500 | | | 1,500 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1999 டிச31 | பெறும் உரிமைத் தொகை க/கு | 2,600 | 1999 டிச 31 | உரிமைத் தொகை<br>இடைநிலைக் க/கு<br>வங்கிக் க/கு | 1,100<br>1,500 |
| | | 2,600 | | | 2,600 |
| 2000 டிச31 | பெறும் உரிமைத் தொகை க/கு | 3.200 | 2000 டிச 31 | உரிமைத் தொகை<br>இடைநிலைக் க/கு<br>வங்கிக் க/கு | 300<br>2,900 |
| | | 3,200 | | | 3,200 |

**எடுத்துக்காட்டு: 6**

1.1.2003 அன்று பவன் என்பவர் தன்னிடமிருந்து புதுவித ஸ்டவ் அடுப்பு தயாரிக்கும், விற்கும் உரிமையை டொமஸ்டிக் லிமிடெட் எனும் கம்பெனிக்கு வழங்கினார். அதே தேதியில் அக்கம்பெனி இதே நோக்கத்திற்காக ஹோம்லி லிமிடெட் எனும் கம்பெனிக்கு கீழ்க்குத்தகை தந்தது.

பவனோடு செய்த கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தின்படி டொமஸ்டிக் லிமிடெட் ஒவ்வொரு ஸ்டவ் உற்பத்திக்கும் ரூ. 10 உரிமைத் தொகை தர வேண்டும். குறைந்த அளவு குத்தகை ஆண்டுக்கு ரூ. 75,000. கீழ்க்குத்தகையைப் பொறுத்தவரை விற்கப்பட்ட ஒவ்வொரு ஸ்டவ்விற்கும் ரூ. 15 பெற வேண்டும். அதற்கான குறைந்த அளவு குத்தகை ஆண்டுக்கு ரூ. 30,000 இரண்டு ஒப்பந்தங்களிலும், எந்த ஆண்டின் குறைந்த உற்பத்தியையும் அடுத்த இரண்டு ஆண்டுகளிலும் மீட்டுக் கொள்ளலாம் என்றுள்ளது.

**ஸ்டவ் உற்பத்தி, விற்பனை பற்றிய விபரங்கள்**

| | டொமஸ்டிக் லிமிடெட் | | ஹோம்லி லிமிடெட் | |
|---|---|---|---|---|
| ஆண்டு | விற்பனை | 31 டிசம்பரில் சரக்கிருப்பு | உற்பத்தி | 31 டிசம்பரில் சரக்கிருப்பு |
| 2003 | 3,000 | 500 | 2,000 | 440 |
| 2004 | 5,000 | 1,500 | 3,000 | 500 |
| 2005 | 4,900 | 2,000 | 2,400 | 100 |

மூன்று ஆண்டுகளுக்கான உரிமைத் தொகை மற்றும் குறை உற்பத்தி தொகை கணக்குகளை டொமஸ்டிக் லிமிடெட் ஏடுகளில் காண்பிக்கவும். ஒவ்வொரு ஆண்டும் கணக்குகள் 31 டிசம்பரில் முடிக்கப்படுகின்றன.

விடை

டொமஸ்டிக் லிமிடெட்டின் உற்பத்தி

ஆண்டு = விற்பனை + இறுதி சரக்கிருப்பு − ஆரம்ப சரக்கிருப்பு = உற்பத்தி

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 2003 | = | 3,000 | + | 500 | − | 0 | = | 3,500 |
| 2004 | = | 5,000 | + | 1,500 | − | 500 | = | 6,000 |
| 2005 | = | 4,900 | + | 2,000 | − | 1,500 | = | 5,400 |

ஹோம்லி லிமிடெட்டின் விற்பனை

| ஆண்டு | = | உற்பத்தி | + | ஆரம்பச் சரக்கிருப்பு | — | இறுதிச் சரக்கிருப்பு | = | விற்பனை |
|---|---|---|---|---|---|---|---|---|
| 2003 | = | 2,000 | + | 0 | — | 400 | = | 1,560 |
| 2004 | = | 3,000 | + | 440 | — | 500 | = | 2,940 |
| 2005 | = | 2,400 | + | 500 | — | 100 | = | 2,800 |

மொத்த உற்பத்தி

| ஆண்டு | = | டொமஸ்டிக் | + | ஹோம்லி | | |
|---|---|---|---|---|---|---|
| 2003 | = | 3,500 | + | 2,000 | = | 5,500 |
| 2004 | = | 6,000 | + | 3,000 | = | 9,000 |
| 2005 | = | 5,400 | + | 2,400 | = | 7,800 |

குறிப்பு

**உங்கள் முன்னேற்றத்தை பரிசோதிக்க உதவும் வினாக்கள்**

**I. சரியா / தவறா**

அ. பிறருடைய உரிமையை பயன்படுத்த கொடுக்கும் விலை தான் குறை உற்பத்தியாகும்.

ஆ. குறைந்தபட்ச வாடகை என்பது குத்தகைதாரர் உரிமையாளருக்கு தர வேண்டிய குறைந்தபட்ச தொகையாகும்.

இ. உண்மை உரிமை தொகை − குறைந்தபட்ச வாடகை = குறை உற்பத்தி

ஈ. உண்மை உரிமை தொகையை விட அதிகமாக கொடுத்த தொகையை மீட்பது குறை உற்பத்தி மீட்பு.

உ. குத்தகைதாரர் ஏட்டில், மீட்கப்படாத குறை உற்பத்தி தொகை லாப நட்ட கணக்கில் வரவு பக்கம் எழுதப்படும்.

## பெறும் உரிமைத் தொகை

| ஆண்டு | ஹோம்லி லிமிடெட் விற்பனை | உரிமைத் தொகை | குறைந்த அளவு குத்தகை | குறை உற்பத்தி | குறை உற்பத்தி மீட்பு | பெற்ற தொகை | குறை உறப்த்தி மீட்க்பபடாதது | குறை உற்பத்தி எடுத்து செல்லப்பட்டது |
|---|---|---|---|---|---|---|---|---|
| | எண்ணிக்கை | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| 2003 | 1,560 | 23,400 | 30,000 | 6,600 | — | 30,000 | — | 6,600 |
| 2004 | 2,940 | 44,100 | 30,000 | — | 6,600 | 37,500 | — | — |
| 2005 | 2,800 | 42,000 | 30,000 | — | — | 42,000 | — | — |

## செலுத்தும் உரிமைத் தொகை

| ஆண்டு | மொத்த உற்பத்தி | உரிமைத் தொகை | குறைந்த அளவு குத்தகை | குறை உற்பத்தி | குறை உற்பத்தி மீட்பு | செலுத்திய தொகை | குறை உறப்த்தி மீட்க்பபடாதது | குறை உற்பத்தி எடுத்து செல்லப்பட்டது |
|---|---|---|---|---|---|---|---|---|
| | எண்ணிக்கை | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. | ரூ. |
| 2003 | 5,560 | 55,000 | 75,000 | 20,000 | — | 75,000 | — | 20,000 |
| 2004 | 9.000 | 90,000 | 75,000 | — | 15,000 | 75,000 | — | 5,000 |
| 2005 | 7,800 | 78,000 | 75,000 | — | 3,000 | 75,000 | 2,000 | — |

## டொமஸ்டிக் லிமிடெட் ஏடு

ப     செலுத்து உரிமைத் தொகை க/கு     வ

| 2003 | | ரூ. | 2003 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| டிச 31 | பவன் க/கு | 55,000 | டிச 31 | பெறும் உரிமைத் தொகை க/கு (2000 x ரூ.10)<br>உற்பத்தி க/கு (3,500x ரூ.10) | 20,000<br>35,000 |
| | | 55,000 | | | 55,000 |
| 2004 | | | 2004 | | |
| டிச 31 | பவன் க/கு | 90,000 | டிச 31 | பெறும் உரிமைத் தொகை க/கு (3000 x ரூ.10)<br>உற்பத்தி க/கு (6,000x ரூ.10) | 30,000<br>60,000 |
| | | 90,000 | | | 90,000 |
| 2005 டிச 31 | பவன் க/கு | 78,000 | 2005 டிச 31 | பெறும் உரிமைத் தொகை க/கு (2,400 x ரூ.10)<br>உற்பத்தி க/கு (5,400x ரூ.10) | 24,000<br>54,000 |
| | | 78,000 | | | 78,000 |

குறிப்பு

II. கோடிட்ட இடத்தை நிரப்புக:

1. ..........மற்றும் ............ என்பது குறை உற்பத்தியை மீட்கும் இரண்டு வகைகளாகும்.

2. குறைந்தபட்ச வாடகை ரூ.10,000. உண்மை உரிமைத் தொகை ரூ.8000. குறை உற்பத்தி ரூ. ..................

3. குறைந்தபட்ச வாடகை .................... எனவும் அழைக்கப்படும்.

4. பிறருடைய உரிமையை பயன்படுத்துவதற்கு கொடுக்கும் விலைதான் ..............

5. குத்தகைதாரர் ஏட்டில் மீட்கப்படாத குறை உற்பத்தி ............... பக்கம் ............. கணக்கில் எழுதப்படும்.

ப மீட்கக்கூடிய குறை உற்பத்தி க/கு வ

| 2003 | | ரூ. | 2003 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| டிச 31 | பவன் க/கு | 20,000 | டிச 31 | இருப்பு கீ/இ | 20,000 |
| | | 20,000 | | | 20,000 |
| 2004 | இருப்பு கீ/கொ | 20,000 | 2004 | பவன் க/கு<br>டிச 31 இருப்பு கீ/இ | 15,000<br>5,000 |
| | | 20,000 | | | 20,000 |
| 2005<br>ஜன 1 | இருப்பு கீ/கொ | 5,000 | 2005<br>டிச 31 | பவன் க/கு<br>லாப நட்ட க/கு | 3,000<br>2,000 |
| | | 5,000 | | | 5,000 |

ப அனுமதிக்கக்கூடிய குறை உற்பத்தி க/கு வ

| 2003 | | ரூ. | 2003 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| டிச 31 | இருப்பு கீ/இ | 6,600 | டிச 31 | ஹோம்லி லிமிடெட் க/கு | 6,600 |
| | | 6,600 | | | 6,600 |
| 2004<br>டிச 31 | ஹோம்லி லிமிடெட் க/கு | 6,600 | 2004<br>ஜன 1 | இருப்பு கீ/கொ | 6,600 |
| | | 6,600 | | | 6,600 |

## 4.5. அருஞ்சொற்கள்

**குறைஉற்பத்தி மீட்பு:**

உண்மை உரிமைத் தொகையைவிட அதிகமாக செலுத்திய தொகையை மீட்பதற்கான உரிமை.

**குத்தகைதாரர்:**

பிறருடைய உரிமையை பயன்படுத்துபவர்.

**குறைந்தபட்ச வாடகை :**

இந்த தொகைக்கு குறைவாக உரிமைதாரர் வாடகையை ஒத்துக் கொள்ளமாட்டார்.

## 4.6. தொகுத்தறிவோம்

ஒருநாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு தொழில்வளர்ச்சி முக்கியம். இந்த தொழில் வளர்ச்சிக்கு அடிப்படையானது சந்தையியலாகும். இதற்கு உறுதுணையாக இருப்பது, காப்புரிமை, வியாபார குறியீடு மற்றும் பல தனிச் சிறப்புரிமைகளாகும். இந்த உரிமைகளை தான் பயன்படுத்துவது

மட்டுமில்லாமல் பிறரையும் பயன்படுத்த அனுமதித்து, அதன் மூலம் வியாபார வளர்ச்சிக்கு உதவுவதே இந்த உரிமைத் தொகையாகும். இதில் உரிமையாளருக்கு தொடர்ச்சியாக குறைந்தபட்ச வாடகை கிடைக்கின்றது. மேலும் குத்தகைக்கு எடுத்த வாடகை தாரருக்கும் பாதிப்பில்லாமல், அவர்கள் அதிகம் செலுத்திய உரிமைத் தொகையை, பின்னால் மீட்பதற்கும் வழிவகைகள் உள்ளது. அப்படி மீட்பதற்கு நிலை மற்றும் மீதவை என இரு வகைமுறைகள் உள்ளன. அரசாங்கமும் தன்னுடைய நிலமான சில சுரங்கள்கள், மலைகளை இந்த உரிமைத்தொகை மூலம் பிற தனியார்கள் பயன்படுத்த அனுமதித்து நாட்டின் வளர்ச்சிக்கு உதவுகின்றன.

## 4.7. உங்கள் முன்னேற்றத்தை பரிசோதிக்க உதவும் வினாக்களின் விடைகள்:

**சரியா / தவறா:**

(அ) தவறு (ஆ) சரி (இ) தவறு (ஈ) சரி (உ) தவறு

**கோடிட்ட இடத்தை நிரப்புக.**

(1) நிலை மற்றும் மிதவை (2) ரூ.2000 (3) பாறை வாடகை

(4) உரிமைதொகை (5) பற்று பக்கம், லாப நட்ட கணக்கில்

## 4.8. மாதிரி வினாக்கள்

1. குறைஉற்பத்தியை மீட்பதற்கான பல்வேறு முறைகள் பற்றி எழுதுக.

2. சிறுகுறிப்பு எழுதுக.

அ. குறைந்தபட்ச வாடகை ஆ. குறைஉற்பத்தி அனாமத்து கணக்கு

இ. மீட்கப்படாத குறைஉற்பத்தி

3. ஒரு நிறுமம் 1.1.97 அன்று ரூ.20,000 குறைந்தபட்ச வாடகை என்ற அடிப்படையிலும், 1 டன்னுக்கு ரூ.1.50 உரிமைத்தொகை என்றும் ஒரு சுரங்கத்தை குத்தகைக்கு எடுத்தது. ஒப்பந்தப்படி குறைஉற்பத்தியை முதல் நான்கு வருடங்களுக்குள் மீட்கலாம். நான்கு வருட உற்பத்த முறையே

9,000, 12,000, 16,000 மற்றும் 20,000 டன்களாகும். நிறுமத்தின் ஏட்டில் பதிவுகளும் கணக்குகளும் தயாரிக்கவும்.

4. ஒரு சுரங்கக்கம்பெனி, நரேன் என்பவரிடமிருந்து உரிமைத் தொகை டன்னுக்கு ரூ.3 என்றும், குறைந்தபட்ச வாடகை ரூ.4,000 என்றும் ஒரு சுரங்கத்தை குத்தகைக்கு எடுத்துள்ளார். முதல் 5 வருடத்திற்குள் குறை உற்பத்தியை மீட்டுக் கொள்ள வேண்டும். ஏதாவது தொழிலாளர் போராட்டம் அல்லது பிரச்சனைகள் வந்தால், அந்த பிரச்சனை ஏற்பட்ட காலத்திற்கு தகுத்தாற்போல் விகிதாசாரப்படி குறைந்தபட்ச வாடகை குறைத்துக் கொள்ளப்படும்.

முதல் ஏழு வருட உற்பத்தி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| வருடம் | டன்கள் |
|---|---|
| 1995 | 0 |
| 1996 | 1300 |
| 1997 | 3700 |
| 1998 | 4500 |
| 1999 | 7000 |
| 2000 | 2400 (ஸ்டிரைக் 4 மாதத்திற்கு) |
| 2001 | 6000 |

குறைந்தபட்ச வாடகை க/கு மற்றும் குறை உற்பத்தி கணக்குகள் தயாரிக்கவும்.

(5) உரிமையாளர் : இன்ஜினியர் சுரேஷ்

குத்தகைதாரர் : டொமஸ்டிக் அப்ளையன்சஸ் கம்பெனி

பொருள் : பிரஷர் குக்கர்

உரிமை தொகை : 1 குக்கருக்கு ரூ.4 வீதம்

குறைந்தபட்ச வாடகை : ரூ.20,000 ஆண்டுக்கு

குறைஉற்பத்தி மீட்பு : குறைஉற்பத்தி ஏற்பட்ட ஆண்டிலிருந்து இரண்டு வருடங்களுக்குள்

குக்கர் விற்பனை : 2006 – 4000
2007 – 4500
2008 – 5400
2009 – 6500

டொமஸ்டிக் அப்ளையன்சஸ் ஏட்டில் பேரேட்டு கணக்குகள் தருக.

# பாடம் 5

# நொடிப்பு நிலை கணக்குகள்

கட்டமைப்பு



## 5.0. அறிமுகம்:

கணிதத்திற்கு சைபரையும், விஞ்ஞானத்திற்கு சக்கரத்தையும் ஒரு சிறப்பம்சமாகவும், வளர்ச்சிக்கு காரணகர்த்தவாகவும் கூறுவர். அதுபோல் தொழில்வளர்ச்சிக்கு வரையறு பொறுப்பை சொல்லலாம். கண்டுபிடித்தவர் யார் என்று தெரியாவிட்டாலும் இன்றைய தொழில் அசுர வளர்ச்சிக்கும், பொருளாதார வளர்ச்சிக்கும் அடிப்படை காரணியாக விளங்குவது வரையறு பொறுப்பாகும். இதுவே இன்றைய மூலதன சேகரிப்பிற்கு அடிப்படை. அதே சமயம் சில தொழில் முறையில், அதாவது தனியார் வணிகம் மற்றும் கூட்டுவணிகத்தில் பொறுப்பு வரையறாப் பொறுப்பாகும். தனியார் அல்லது கூட்டாளிகளின் யோசனைகள் சில சமயம் தோல்வியுற்று நிறுவனத்தின் சொத்து மதிப்பை விட பொறுப்புகள் அதிகமாகி அதன் காரணமாக நொடிப்பு நிலை என்ற நிலையை அடையக் கூடும். இதுவே இன்றைய

முதலீட்டாளர்களை இத்தகை தனியார், கூட்டு வணிகத்திலிருந்து நிறுமங்கள் என்று சொல்லப்படும் வரையறு பொறுப்புள்ள கம்பெனிகளில் முதலீடு செய்ய தூண்டுகிறது. இந்த நொடிப்புநிலை சமயத்தில் நொடிப்பு நிலையடைந்தவர்கள் மற்றும் அவர்களுக்கு கடன் கொடுத்தவர்கள் என இரண்டு பக்கமும் பாதிப்பில்லாமலும், பராபட்சமில்லாமலும் முடிவெடுக்க சட்ட பூர்வமாக இயற்றப்பட்ட சட்டங்கள் உதவுகின்றன.

## 5.1. கற்றல் நோக்கங்கள்

இந்தப் பிரிவை படித்த பின்பு நீங்கள்,

— நொடிப்பு நிலை மற்றும் இதன் விளைவுகள் பற்றி விவரிக்க இயலும்.

— இருப்பு நிலமை பட்டியல் மற்றும் இருப்புநிலைக்குறிப்பிற்கு இடையேயான வித்தியாசத்தை குறிப்பிட முடியும்.

— இருப்பு பட்டியல் தயாரித்து பற்றாக்குறை தொகையை கணக்கிட முடியும்.

— பற்றாக்குறைக்கான காரணத்தை நியாயப்படுத்த முடியும்.

ஒரு நபர் தன்னுடைய கடனீந்தோருக்கு கடன் தொகைகளை முழுமையாகச் செலுத்த முடியாத போது (அதாவது குறைவான சொத்துக்களும் அதிகமான பொறுப்புகளும் இருக்கும் போது) கடனீந்தோர்களால் கொடுமைப்படுத்தபடுகிறார். கடனீந்தோர்கள் அந்நபரை பணம் செலுத்துமாறு கட்டாயப்படுத்துகின்றனர். அப்போது கடனீந்தோர்கள் நெருக்குதலிலிருந்து தன்னை விடுவிப்பதற்காக நொடிப்பு நிலைச் (Insolvency) சட்டத்தைப் பயன்படுத்தும் பொருட்டு தன்னை ஒரு நொடித்தவர் என அறிவிக்குமாறு அவர் நீதிமன்றத்தில் ஒரு மனு அளிக்கிறார். இதற்கு மாறாக நொடித்தவரின் கடனீந்தோர்களும் இவ்வாறான ஒரு வேண்டுகோள் விடுக்கலாம். இவ்வாறு சொத்துக்களை காட்டிலும் அதிகமான பொறுப்புடையவரம் சட்டத்தின் பாதுகாப்பினை பெற்றவருமான ஒருவரை நொடித்தவர் என்கிறோம். அதாவது தன்னுடைய

கடன் தொகைகளை முழுமையாகச் செலுத்த முடியாமல் நீதி மன்றத்தில் சட்டப்படி நொடித்தவர் என அறிவிக்கப்பட்டு தன்னுடைய கடன்களைச் செலுத்துவதற்காக தன் சொத்துக்களை ஒப்படைத்த ஒரு நபரை நொடித்தவர் என்கிறோம்.

ஒரு நபர் (அல்லது) கூட்டு நிறுவனம் அல்லது இந்து குடும்பம் ஒரு நொடித்தவரால் இருக்கலாம். ஒரு கம்பெனியும் நொடிப்படைந்தாயிருக்கலாம். ஆனால் இக்கம்பெனி கம்பெனிச் சட்டத்தினால் கட்டுப்படுத்தப்படுகிறது. எனவே தனிநபர் அல்லது ஒரு கூட்டு நிறுவனம் அல்லது ஒரு கூட்டு இந்துக் குடும்பம் ஆகியவற்றின் நொடிப்பு நிலையை பற்றியே இங்கு விவரிக்கிறோம்.

கீழ்க்கண்ட நிலையிருக்கும் போது ஒரு கடனாளி நொடிப்பு நிலைக் கோரிக்கையினை எழுப்பலாம்.

அ) அவருடைய கடன்களை அவரால் செலுத்த முடியாத போதும் மற்றும்

ஆ) அவருடைய கடன் தொகை குறைந்தபட்சம் ரூ. 500 ஆக இருக்கும் போது அல்லது அவர் கைதாகி இருக்கும் போது அல்லர் சிறையிருக்கும் போது

இவர்களின் நொடிப்பு நிலையானது இருண்டு நொடிப்பு நிலைக் சட்டங்களினால் கட்டுப்படுத்தப்படுகிறது. அவைகளாவன

1. இராஜதானி நொடிப்பு நிலைச் சட்டம் 1919 (இச்சட்டம் பம்பாய், கல்கத்தா மற்றும் சென்னை நகரங்களுக்குப் பொருந்தும்)
2. மகாண நொடிப்பு நிலைச் சட்டம் 1920 இந்தியாவின் மற்ற பகுதிகளுக்குப் பொருந்தும்

இந்த இரு சட்டங்களிலும் சில பகுதிகளிலுள்ள சில விவரங்களைத் தவிர சரத்துக்கள் அனைத்தும் ஒரெ மாதிரியாக உள்ளன். ஒரு நொடித்தவர் பம்பாயில் குடியிருந்தாரேயானால் அவர் இராஜதானி நகரங்கள் நொடிப்பு நிலைச் சட்டத்திற்குட்பட்டவர். அந்த நொடித்தவர் மதுரையில் குடியிருந்தாரேயானால் அவர் மகாண நொடிப்பு நிலைச் சட்டத்திற்குட்பட்டவர்

ஆவார். நொடிப்பு நிலை சம்பந்தமான ஒரு செயலினை ஒரு நபர் செய்யும் பொழுது அவரை நொடித்தவர் என்கிறோம்.

அ) ரூ. 500 அல்லது அதற்குமேற்பட்ட கடன் ஒன்றினைத் தீர்க்கமறுத்தல்

ஆ) ஒரு நபர் தன்னுடைய கடனீந்தோர்களை ஏமாற்றும் நோக்கத்தோடு தன் இருப்பிடத்திலிருந்து புறப்பட்டுச் சென்று இந்தியாவிற்கு அப்பால் தங்கி விடுதல்.

இ) கடன் தொகை செலுத்தப்படாமல் நிறுத்தி வைக்கப்படுகிறது என ஒரு கடனீந்தோரிடம் அறிவித்தல்.

ஆனால் சரக்கு விற்பனை சட்டத்தின் படி நொடிப்புநிலை சம்பந்தமான ஒரு செயலினை ஒரு நபர் செய்தாலும் செய்யாவிட்டாலும் அவர் தன்னுடைய கடன்களைச் செலுத்த மறுத்தலே அவரை ஒரு நொடித்தவர் என்கிறோம். ஆனால் இந்தப் பாடத்தில் விற்பனைச் சட்டத்தில் நொடித்தவர் சம்பந்தமாக கொடுக்கப்பட்டுள்ள இந்த விளக்கத்தினை நாம் பயன்படுத்தவில்லை.

ஒரு கடனாளியோ அல்லது அவருடைய கடனீந்தோரே ஒரு நொடிப்பு நிலை மனுவினை ஒரு நீதிமன்றத்தில் முதலில் தாக்கல் செய்ய வேண்டுமென நாம் முன்பே படித்தோம். நீதிமன்றம் சம்பந்தப்பட்ட நபர்களை விசாரித்தபின்பு அந்த மனுவை நிராகரிக்கலாம் அல்லது ஏற்றுக் கொண்டு நொடிப்புநிலை அறிவிப்பு கொடுக்கப்பட்டவுடன் அந்தக் கடனாளி ஒரு நொடித்தவர் எனப்படுகிறார்.

நொடித்தவரின் சொத்து முழுவதையும் எடுத்து அதனை விற்றுப் பணமாக்கி அவ்விற்பனைத் தொகையில் தீர்வுச் செலவுகள் போக மீதமுள்ள தொகையினை பல்வேறு கடனீந்தோர்களிடையே அவர்களுடைய கோரிக்கைகளுக்கேற்ப பகிர்ந்தளித்தலுக்காக நீதிமன்றமானது நொடித்தவர் எனப்படுகிறார்.

நொடித்தவரின் சொத்து முழுவதையும் எடுத்து அதனை விற்றுப் பணமாக்கிப் அவ்விற்பனைத் தொகையில் தீர்வுச் செலவுகள் போக

மீதமுள்ள தொகையினை பல்வேறு கடனீந்தோர்களிடையே அவர்களுடைய கோரிக்கைகளுக்கேற்ப பகிர்ந்தளித்தலுக்காக நீதிமன்றமானது நொடித்தவர் சொத்தாட்சி அலுவலர் (Official Assigned) இராஜதானி நகரங்கள் நொடிப்பு நிலைச் சட்டத்தின்படி அல்லது நொடித்தவர் சொத்தாட்சியர் (Official Recievier) மாநில நொடிப்பு நிலை சட்டத்தின்படி ஒரு அதிகாரியை நியமிக்கிறது. இப்பத்திரம் அளிக்கப்பட்டவுடன் நொடித்தவர் தான் செலுத்தாத கடன்களிலிருந்து விடுவிக்கப்படுகிறார். இதன்படி அவர் புதியதோர் வாழ்வினைத் தொடங்க முடிகிறது. இவ்வாறு நொடித்தவர் தான் பொறுப்புகள் முழுவதையும் செலுத்தாமல் பொறுப்புகளிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்வதே நொடிப்பு நிலை பிரகடனப்படுத்தலின் நோக்கமாகும்.

## 5.2. கணக்குகள்

ஒரு நபரை ஒரு நொடித்தவர் என அறிவித்த பொழுது அந்நொடித்தவர் தன்னடைய பற்றாக்குறையினைக் காண்பிக்கும் நிலைமை விவரம் (statement of affairs) என்னும் ஒரு அட்டவணையையும் அப்பற்றாக்குறைக் கணக்கினையும் சமர்ப்பிக்க வேண்டும்.

### 1. நிலைமை விவரம்

**பொறுப்புகள் பகுதி**

பட்டியல் ‘A’ பற்றிய — இதில் நொடித்தவரின்* பிணையில்லாக் கடனீந்தோர்கள் விவரங்கள் அடங்கும்

பட்டியல் ‘B’ — இதில் நொடித்தவரின்** முழுப்பிணைக் கடனீந்தோர்கள் பற்றிய விவரங்களும் அக்கடனீந்தோர்களிடமுள்ள

---

குறிப்பு

* கூலி, சம்பளம், வாடகை ஆகியவற்றில் முன்னுரிமை என கோரப்படாத தொகைகள் செலுத்த வேண்டிய உண்டியல் மற்றும் கழிவு செய்த பின் மறுக்கப்பட்ட வரவுக்குரிய உண்டியல் அடங்கும்

** (உம்) ஒரு கடனீந்தோர் தன்னுடைய கடன் தொகையான ரூ. 70,000க்கு ரூ. 1,00,000 மதிப்புள்ள பிணையங்கள் வைத்துள்ளார்.

பற்றிய விவரங்களும் அக்கடனீந்தோர்களிடமுள்ள பிணையங்களின் மதிப்பு மற்றும் அப்பிணையங்களிலிருந்து கிடைக்கும் உபரித் தொகை ஆகியன அடங்கும்.

பட்டியல் 'C' இதில் ***பகுதிப்பிணைக் கடனீந்தோர்கள் பற்றிய விவரங்களும் அவர்களிடமிருந்து பிணையங்களின் மதிப்பு மற்றும் செலுத்தப்பட வேண்டிய மீதிக் கடன் தொகை ஆகியன அடங்கும்.

பட்டியல் 'D' இதில் முழுமையாகச் செலுத்த வேண்டிய ****முன்னுரிமை கடனீந்தோர்கள் பற்றிய விவரங்கள் அடங்கும்.

| சட்டம் | அரசு அல்லது உள்ளாட்சி நிறுவனத்திற்கு தரவேண்டிய தொகை | சம்பளம் | கூலி | வாடகை |
|---|---|---|---|---|
| 1. இராஜதானி நகரங்கள் நொடிப்பு நிலைச்சட்டம் | முழுத்தொகை | ஒவ்வொருவருக்கும் 4 மாதங்களுக்கான சம்பளம் அல்லது ரூ300 ஆகிய இரண்டில் குறைவான ஒரு தொகை | ஒவ்வொருவருக்கும் 4 மாதங்களுக்கான கூலி அல்லது ரூ.100 ஆகிய இரண்டில் குறைவான ஒரு தொகை | 1 மாத வாடகை தொகைக்கு உச்சவரம்பு கிடையாது |
| 2. மாநில நொடிப்பு | முழுத்தொகை | ஒவ்வொருவருக்கும் ரூ.20 வீதம் | ஒவ்வொருவருக்கும் ரூ. 20 வீதம் | இல்லை |

பட்டியல் 'E' இதில் நொடித்தவரின் அனைத்து அசையா மற்றும் அசையும் #சொத்துக்கள் மற்றும் ஆஸ்திகளின் விபரம்

---

*** (உம்) ஒரு கடனீந்தோர் தன்னடைய கடன் தொகையான ரூ9,000க்கு ரூ.5,000 மதிப்புள்ள பிணையங்களை மட்டும் வைத்துள்ளார்.

**** நொடிப்பு நிலைச்சட்டம் சரக்குகளின் காரணமாக மற்றைய கடனீந்தோர்களைக் காட்டிலும் முன்னுரிமை உடையவர்களுக்கே முன்னுரிமை கடனீந்தோர்கள் ஆவர்.

இவைகளின் ஏட்டு மதிப்பு மற்றும் தீர்வு மதிப்பு ஆகியன அடங்கும்.

பட்டியல் 'F' இதில் ஏட்டுக் கடன்களை அல்லது $கடனாளிகள் பற்றிய அறிக்கை மற்றும் அவர்களிடமிருந்து எதிர் பார்க்கப்படும் தொகை ஆகியன அடங்கும்.

பட்டியல் 'G' இதில் வரவுக்குரிய உண்டியல்கள் மற்றும் கடன் உறுதிப்பத்திரங்கள் ஆகியவற்றின் ஏட்டு மதிப்பு மற்றும் தீர்வு மதிப்பு ஆகியன அடங்கும்.

பட்டியல் 'G' க்கு அடுத்து கடனீந்தோர்களிடமிருந்து பிணையங்களிலிருந்து கிடைக்க உபரித் தொகை சொத்துக்களோடு சேர்க்கப்படும். மொத்த பகுதியின் மொத்தத் தொகையிலிருந்து பட்டியல் B-யின் படியான முன்னுரிமை கடனீந்தோர்களின் தொகை கழிக்கப்படும். இங்குள்ள மீதத் தொகையை மற்றைய கடனீந்தோர்களிடையே பகிரப்பட வேண்டிய சொத்தாகும்.

பட்டியல் 'H' இதில் மொத்தப் பொறுப்புகளுக்கும் விற்றுப் பணமாக்கப்படும் சொத்துக்களும் இடையேயுள்ள பற்றாக்குறை காண்பிக்கப்படும்.

---

# நொடித்தவரின் ஏட்டுக் கடன்கள் மற்றும் வரவுக்குரிய உண்டியல் தவிர மற்றும் சொத்துகளனைத்தும் அடங்கும், கடனீந்தோர்களுக்கு பிணையங்களாக அடகு வைக்கப்பட்ட சொத்துக்களை இங்கு சேர்க்ககூடாது.

$ கடன்களில் நல்லவை ஐயக்கடன் மற்றும் வராக்கடன் ஆகியவை தனித்தனியே காண்பிக்கப்பட வேண்டும்.

## மாதிரி நிலைமை விவரம்

| மொத்த பொறுப்புகள் | பொறுப்புகள் | எதிர்பார்க்கப் படும் அளவு | சொத்துக்கள் | ஏட்டு மதிப்பு | எதிர்பார்க்கப் படும் தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | ரூ. | ரூ. |
| | பிணையில்லாக் கடனீந்தோர் பட்டியல் ஏ யின் படி<br><br>முழு பிணைக் கடனீந்தோர் பட்டியல் பி—யின் படி<br><br>கழிக்க: பிணையங்களின் மதிப்பு<br><br>உபரித் தொகை எதிர்ப்புறத்திற்கு மாற்றப்பட்டது<br><br>பகுதி பிணைக் கடனீந்தோர் பட்டியல் சி யின்படி<br><br>கழிக்க: பிணையங்களின் மதிப்பு<br><br>முன்னுரிமை கடனீந்தோர் பட்டியல் டி யின்படி எதிர்புறத்தின்படி கழிக்கப்பட்டது. | | சொத்துக்கள் பட்டியல் இயின்படி<br><br>ஏட்டுக் கடன்கள் பட்டியல் எஃப் படி<br><br>உண்டியல்கள் பட்டியல் ஜி யின்படி<br><br>கூட்டுக: எதிர்புறத்திலிருந்து உபரித் தொகை<br><br>கழிக்க: எதிர்ப்புறமுள்ள முன்னுரிமைக் கடனீந்தோர்<br><br>பற்றாக்குறை பட்டியல் எச் ன்படி | | |
| | | | | | |

### மாதிரி பற்றாக்குறை க/கு (பட்டியல் — எச்)

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பொறுப்புகளிலும் மிஞ்சிய சொத்துக்கள் | | நிகர நட்டம் | |
| நிகர லாபம் | | வராக்கடன் — பட்டியல் எஃப் ன் படி | |
| இதர இனங்களிலிருந்து வருமானம் அல்லது ஆதாயம் | | இதர இனங்கள் வழி செலவு அல்லது நட்டம் | |
| நிலைமை விபரத்தின்படி பற்றாக்குறை | | தீர்வில் நட்டம் | |

## 5.3. பற்றாக்குறை கணக்கு

ஒரு நிலைமை விவரம் பற்றாக்குறை தொகையினை காண்பிக்கிறது என நாம் கண்டோம்.

இந்தப் பற்றாக்குறை கணக்கு பட்டியல் 'H' ல் அடங்கி உள்ளது இக்கணக்கு நிலைமை விவரத்தில் காணப்படும் பற்றாக்குறைத் தொகை எங்ஙனம் ஏற்பட்டது என்பதைத் தெளிவாக விளக்குகிறது.

**விளக்கம்**

நொடித்தவரிடமிருந்து வரவேண்டிய ஒரு கடனுக்கு பிணையமாக அந்த நொடித்தவரின் சொத்தின் மீது கோருரிமை அல்லது அதனை அடமானமாக பெற்றுள்ள ஒரு நபரை முழுப்பிணைக் கடனீந்தோர் என்கிறோம்.

பகுதிப்பிணை கடனீந்தோர்கள் தங்களுடைய கடன்களுக்காக சில பிணையங்களை வைத்துள்ளனர். ஆனால் நொடித்தவரிடமிருந்து பெற வேண்டிய முழுக்கடன் தொகைக்கு இப்பிணையங்கள் போதுமானவையல்ல.

ஒரு பிணையில்லாக் கடனீந்தோர்க்கு நொடித்தவரின் பொதுவான சொத்துக்களில் மட்டுமே கோருரிமை உள்ளது.

ஒரு பிணைக் கடனீந்தோர்க்கு பொதுக் கோருரிமை தவிர நொடித்தவருடைய ஒரு குறிப்பிட்ட சொத்தின் மீது கோருரிமை உள்ளது. பற்றாக்குறை கணக்கு என்பது உண்மையில் நொடித்தவரின் முதல் கணக்கு ஆகும். ஆனால் முதல் கணக்கில் உள்ள பகுதிகள் இங்கு எதிர்மாறாக இருக்கும்.

**எடுத்துக்காட்டு : 1**

கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து 2002 டிசம்பர் 31ஆம் தேதியிலான ஒரு நிலைமை விவரம் மற்றும் பற்றாக்குறைக் கணக்க அகியவற்றைத் தயாரிக்கவும்.

| | |
|---|---|
| சரக்கிருப்பு விற்றுப் பெற்றது | 666 |
| மனைத்துணைப் பொருட்களும் பொருந்தியவைகளும் | 282 |
| பங்குகளின் மீதான முதலீட்டுகள் ஏட்டு மதிப்பு பெறப்பட்டது | |
| வரா மற்றும் ஐயக்கடன்கள் | 600 |

2000 ஜனவரி 1ல் கல்கத்தாவிலுள்ள இலாமன் ரூ. 6,350 ஐ முதலாகக் கொண்டு அவருடைய வியாபாரத்தை தொடங்கினார். 2000 மற்றும் 2001 ஆண்டுகளில் அவருக்கு கிடைத்த இலாபம் ரூ. 5,554. 2002ல் அவருக்கு ஏற்பட்ட நட்டம் ரூ. 500. 2002 டிசம்பர் 31 தேதி வரையிலான அவருடைய மொத்த எடுப்பு ரூ. 9,000

| | | | |
|---|---|---|---|
| ரொக்கம் | 230 | பிணையில்லாக் கடனீந்தோர்கள் | |
| வியாபார சரக்கிருப்பு | 1000 | (அவருடைய மனைவி கமலாவின் ரூ. 1000 | 13,000 |
| கடனாளிகள் நல்லவை | 7,000 | பிணைக் கடனீந்தோர்கள் | 2,500 |
| கடனாளிகள் ஐயக்கடன் | 1,800 | பிணைக் கடனீந்தோர்களிடமுள்ள | 3,500 |
| கடனாளிகள் வராதவை மணைத்துணைப் | 1,500 | முன்னுரிமை கோரிக்கைகள்" | |
| பொருந்தியவைகளும் | 564 | வாடகை வரிகள் மற்றும் | |
| பங்குகளின் மீதான முதலீடுகள் | 500 | கட்டணங்கள் முதலியன | 190 |

விடை

## கல்கத்தா இராமனின் நிலைமை விபரம் 2002 டிசம்பர் 31ல் உள்ளபடி

| மொத்த பொறுப்புகள் | பொறுப்புகள் | எதிர்பார்க்கப் படும் அளவு | சொத்துக்களும் ஆஸ்திகளும் | ஏட்டு மதிப்பு | எதிர்பார்க்கப் படும் தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | ரூ. | ரூ. |
| 13,000 | பிணையில்லாக் கடனீந்தோர்கள் (பட்டியல் எ யின் படி) | 13,000 | சொத்துக்கள் (பட்டியல் இன் படி) ரொக்கம் | 230 | 230 |
| 2,500 | முழுப்பிணைக் கடனீந்தோர் பட்டியல் பியின்படி ரூ. 2,500 பிணையங்களில் நிர்ணயிக்கப்பட்ட மதிப்பு ரூ. 3,500 எதிர்புறத்திற்கு மாற்றிய உபரித் தொகை ரூ. 1,000 | | வியாபாரச் சரக்கிருப்பு | 1,000 | 666 |
| | | | மனைத்துணைப் பொருட்களும் பொருந்தியவைகளும் | | |
| | | | பங்குகளின் மீதான முதலீடுகள்: | 564 | 282 |
| | | | ஏட்டுக் கடன்: பட்டியல் எப்.ன்படி | 500 | 500 |
| | | | நல்லவைகள் | | |
| | | | ஐயக்கடன்கள் | 7,000 | 7,000 |
| | பகுதி பிணைக் கடனீந்தோர்கள் | | வராக்கடன் | 1,800 | |
| | | | | 1,500 | 600 |
| | | | | | 9,278 |
| 190 | (பட்டியல் சி – யின்படி முன்னுரிமை கடனீந்தோர்கள்: வாடகை கட்டணங்கள் மற்றும் வரிகள் முதலியன அட்டவணை டியின்படி ரூ. 190 கழி: எதிர்புறத்தில் குறைந்தது 190 | | கூட்டுக: எதிர்பறமுள்ள உபரித்தொகை | | 1,000 |
| | | | | 12,594 | 10,278 |
| | | | கழி: எதிர்புறமுள்ள முன்னுரிமை கடனீந்தோர்கள் | | 190 |
| | | | | | 10,088 |
| | | | பற்றாக்குறை (பட்டியல் எச்.ன்படி) | | 2,912 |
| 15,960 | | 13,000 | | | 13,000 |

பற்றாக்குறை கணக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| | ரூ. | | | ரூ. |
| பொறுப்புகளினும் மிகுதியான சொத்துக்கள் 1.1.2000இல் | 6,350 | எடுப்புகள் | | 9,000 |
| 2000 மற்றும் 2001 நிகர லாபம் | 5,554 | 2002 நட்டம் | | 2,500 |
| பற்றாக்குறை | 2,912 | தீர்வில் ஏற்பட்ட நட்டம் | | |
| | | சரக்கிருப்பு | 234 | |
| | | ஏட்டுக் கடன்கள் | 2,700 | |
| | | மனைத்துணைப்பொருட்கள் | 282 | |
| | | | | 3,316 |
| | 14,816 | | | 14,816 |

**எடுத்துக்காட்டு : 2**

2002 ஜீன் ஆம் தேதியன்று சென்னையிலுள்ள சுப்பு என்பவரின் ஏடுகளின் படி அவருடைய சொத்துக்களும் பொறுப்புகளும் முறையே ரூ. 28,000 மற்றும் ரூ. 22,000 மாக இருந்தன. அவர் நீதிமன்றத்தில் ஒரு நொடிப்பு நிலைக்கான மனு ஒன்றினைச் சமர்பித்தார். அப்போது ஏற்பட்ட பற்றாக்குறை ரூ. 15,000 என மதிக்கப்பட்டது. பற்றாக்குறையை மதிப்பிட்ட பின்பு கீழ்வருபவைகள் ஏடுகளில் எழுதப்படவில்லை என கண்டுபிடிக்கப்பட்டன.

2003 ஜனவரி 10ல்லிருந்து அவருடைய முதல் மீது 6மு வீதம் வட்டி கணக்கிடப்பட வேண்டும். ரூ. 5,000க்கான உண்டியல்களை அவர் கழிவு செய்தால் ஏற்பட்ட நிகழ்வடையாப் பொறுப்பு ரூ. 1,250

| | ரூ. |
|---|---|
| கூலியாகக் கொடுக்க வேண்டிய தொகை | 300 |
| சம்பளமாகக் கொடுக்க வேண்டிய தொகை | 200 |
| வாடகையாகக் கொடுக்க வேண்டிய தொகை | 100 |
| வாடகை மற்றும் வரிக்காக கொடுக்க வேண்டிய தொகை | 150 |
| | 750 |

குறிப்பு

சுப்புவின் நிலைமை மற்றும் பற்றாக்குறைக் கணக்கு ஆகியவற்றைத் தயாரிக்கவும்.

| | ரூ. |
|---|---|
| 1. 2002 ஜீன் 30 ஆம் தேதியன்று சுப்புவின் முதல் | 6,000 |
| அதாவது சொத்துக்கள் | 28,000 |
| கழி: பொறுப்புகள் | 22,000 |
| | 6,000 |

2. பொறுப்புகளின் ஏட்டு மதிப்பிற்கும் (ரூ.22,000) மதிக்கப்பட்ட பற்றாக்குறைத் தொகைக்கும் (ரூ. 15,000) இடையேயுள்ள வேறுபாடானது (ரூ.7,000) சொத்துக்களை விற்று பெறலாம் என எதிர்பார்க்கப்படும் தொகையாகும்.

3. முதல் மீது வட்டி கணக்கிட முடியாது.

**சென்னை சுப்புவின் ஏடுகளில் பற்றாக்குறைக் கணக்கு**

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| பொறுப்புகளினும் மிகுதியான சொத்துக்கள் | 6,000 | தீர்வில் ஏற்பட்ட நட்டம் (ரூ.28,000 — ரூ.7,000) | 21,000 |
| பற்றாக்குறை | 17,000 | கழிவு செய்த உண்டியல்கள் மீதான நிகழ்வாடையாப் பொறுப்பு | 1,250 |
| | | முன்னுரிமை கடனீந்தோர்கள் | 750 |
| | 23,000 | | 23,000 |

**சென்னை சுப்புவின் நிலைமை விவரம்**

**2002 ஜீன் 30 ஆம் தேதியன்று**

| மொத்த பொறுப்புகள் | பொறுப்புகள் | எதிர்பார்க்கப் படும் பொறுப்பின் அளவு | சொத்துக்களும் ஆஸ்திகளும் | ஏட்டு மதிப்பு | எதிர்பார்க்கப் படும் தொகை |
|---|---|---|---|---|---|
| ரூ. | | ரூ. | | ரூ. | ரூ. |
| 27,000 | பிணையில்லாக் கடனீந்தோர்கள் (பட்டியல் எ யின் படி) முழுப்பிணைக் கடனீந்தோர் பட்டியல் பியின்படி | 23,250 | சொத்துக்கள் பட்டியல் இன்படி கடனாளிகள் பட்டியல் எப்— யின்படி வரவுக்குரிய உண்டியல்கள் (பட்டியல் ஜி— யின்படி கூட்டு எதிர்ப்புறத்திலுள்ள உபரித் தொகை | 28,000 | 7,000 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 750 | பகுதிப்பிணைப் கடனீந்தோர்கள் (பட்டியல் சி—யின்படி) முன்னுரிமைக் கடனீந்தோர்கள் (பட்டியல் டி—யின்படி) 750 கழி: எதிர்புறத்தில் குறைந்தது 750 | | கழி: எதிர்ப்புறத்திலுள்ள முன்னுரிமை கடனீந்தோர்கள் பற்றாக்குறை பட்டியல் எச்—ல் விளக்கியுள்ளவாறு | | 7000 750 6,250 17,000 |
| 27,750 | | 23,250 | | 28,000 | 23,250 |

பொறுப்புகள் ரூ.22,000 + ஏடுகளில் பதிவு செய்யப்படாத நிகழ்வடையாப் பொறுப்புகள் ரூ. 1,250 = ரூ. 23,250 + கழிவு செய்யப்பட்டு ஆனால் மறுக்கப்படாத காசோலைகள் மதிப்பு ரூ. 3,750

எடுத்துக்காட்டு : 3

அ. ஒரு நிலைமை விவரத்திற்கும் இருப்பு நிலைக் குறிப்பிற்குமுள்ள வேறுபாடு என்ன?

ஆ. ஒரு நிறுவனத்தின் நொடிப்பிற்கும் ஒரு தனிநபரின் நொடிப்பிற்கும் வேறுபாடு உள்ளதா?

**அ) இருப்புநிலைக் குறிப்பிற்கும் நிலைமை விவரத்திற்குமுள்ள வேறுபாடுகள்**

1. ஒரு இருப்புநிலைக் குறிப்பானது வணிகம் செய்து பொருள் ஈட்டும் ஒரு நிறுவனத்தின் சொத்துக்களும் பொறுப்புகளும் அடங்கிய ஒரு பட்டியல் ஆகும். ஒரு நிலைமை விவரம் என்பது கலைக்கப்பட்டு பொருள் ஈட்ட முடியாத நிலையிலுள்ள ஒரு நிறுவனத்தின் சொத்துக்களும் பொறுப்புகளும் அடங்கிய ஒரு பட்டியல் ஆகும்.
2. வழக்கமாக பொறுப்புக்களைக் காட்டிலும் அதிகமாயுள்ள சொத்துக்களை உடைய நிறுவனத்தின் மூலதனத்தை ஒரு இருப்புநிலைக் குறிப்பு தெரிவிக்கிறது. ஒரு நிலைமை விவரமானது நிறுவனத்தின் நிதி நிலையில் ஏற்பட்ட நெருக்கடியையும் அந்நிறுவனத்திலுள்ள

1. சொத்துக்களைக் காட்டிலும் அதிகமாயுள்ள பொறுப்புகளைக் குறிக்கின்ற பற்றாக்குறைத் தொகையையும் காண்பிக்கிறது.
3. ஒரு தொழில் நடக்கின்ற நிறுவனத்தின் சொத்துக்கள் இருப்புநிலைக் குறிப்பில் ஏட்டு மதிப்பில் காண்பிக்கப்படுகின்றன. அதே நேரத்தில் ஒரு நிலைமை விவரத்தில் இச்சொத்துக்கள் ஏட்டு மதிப்பிலும் காண்பிக்கப்படுகிறது.
4. இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் ஏட்டு மதிப்பில் காண்பிக்கப்படுகின்றன. ஆனால் நிலைமை விவரத்தில் அப்பொறுப்புக்களின் ஏட்டு மதிப்புகளும் அதே நேரத்தில் எதிர்ப்பார்க்கப்படும் பொறுப்புகளின் மதிப்புகளும் கொடுக்கப்படுகின்றன.
5. இருப்புநிலைக் குறிப்பு விவரத்தில் தயாரிக்கப்படும் பொழுது சொத்துக்கள் விரைவில் ரொக்கமாகக் கூடிய முறை அல்லது நிலைத்த முறையில் வழக்கமாக வரிசைப்படுகின்றன.

ஒரு நிலைமை விவரத்தில் சொத்துக்கள் கீழ்க்கண்டவாறான மூவகைப் பட்டியல்களில் காண்பிக்கப்படுகின்றன. அவைகளாவன

பட்டியல் Eயில் (அ) கடனாளிகள் (ஆ) வரவுக்குரிய உண்டியல்கள் (இ) முழுவதும் அல்லது பகுதிப்பிணைக் கடனீந்தோர்களுக்கு பிணையமாக கொடுக்கப்பட்ட மற்றைய சொத்துக்கள் ஆகியவற்றைத்தவிர அனைத்துச் சொத்துக்களும் அடங்கியுள்ளன.

பட்டியல் Fல் கீழ்வரும் பிரிவுகளுடன் கடனாளிகள் மட்டும் அடங்கியுள்ளன.

அ) நல்லவை

ஆ) ஐயக்கடன்

இ) வராக்கடன்

பட்டியல் G யில் வரவுக்குரிய உண்டியல்கள் அடங்கியுள்ளன.

6. வழக்கமாக இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகளை அவைகளைத் தீர்க்க வேண்டிய வரிசைப்படி எழுத வேண்டும்.

நிலைமை விவரத்தில் பொறுப்பகள் நான்க பட்டியல்களில் காண்பிக்கப்படுகின்றன. அவைகளாவன பட்டியல் ஏயில் பிணையில்லாப் பொறுப்புகளனைத்தும் அடங்கும். பட்டியல் ஏயில் பிணையில்லாப் பொறுப்புக்களனைத்தும் அடங்கும். பட்டியல் பி—யில் முழுப்பிணைப்புள்ள பொறுப்புகளனைத்தும் அடங்குமி. பட்டியல் சி—யில் பகுதியிளையுள்ள பொறுப்புக்களனைத்தும் அடங்கும்.

பட்டியல் Dயில் அடங்கியுள்ள பொறுப்புகள் பிணையில்லாப் பொறுப்புகளாயிருப்பினும் நொடிப்பு நிலைச் சட்டத்திலுள்ள சரத்துக்களின் காரணமாக இப்பொறுப்புக்கள் மற்றைய பிணையில்லாக் கடனீந்தோர்களுக்கு தொகை செலுத்துவதற்கு முன்பே செலுத்தப்படுகிறது.

7. இருப்புநிலைக் குறிப்பில் சேர்த்து வைக்கப்பட்ட அனைத்து இலாபங்கள் அல்லது நட்டங்கள் மற்றும் புலனாக அல்லரு பெருமளவு சொத்துக்கள் ஆகியன காண்பிக்கப்படும். ஆனால் நிலைமை விவரத்தில் இவ்வாறான விவரங்கள் காண்பிக்கப்படுவதில்லை.

ஒரு நிலைமை விவரத்திற்கும் ஒரு இருப்புநிலைக் குறிப்பிற்கும் இடையேயுள்ள ஒரேயொரு ஒற்றுமை என்னவென்றால் இவையிரண்டிலும் பொறுப்புகள் இடப்புறத்திலும் சொத்துக்கள் வலப்புறத்திலும் காண்பிக்கப்படுகின்றது.

## 5.4. ஒரு தனிநபரின் நொடிப்பிற்கும் ஒரு கூட்டு நிறுவனத்தின் நொடிப்பிற்குமுள்ள வேறுபாடு

உதாரணமாக திரு. கணேசனின் வியாபாரச் சொத்துக்களை ரூ. 50,000மும் சொந்தச் சொத்துக்களை ரூ.5,000மும் இருந்தன என வைத்துக் கொள்வோம். அவருடைய வியாபாரக் கடன்கள் ரூ.60,000மும் சொந்தக் கடன்கள் ரூ.4000மும் இருந்தன. இங்கு அவருடைய சொத்துக்கள் ரூ. 55,000மும் மொத்தக் கடனீந்தோர்கள் கடனாகிய ரூ.64,000க்காக உண்மையில் பகிர்நதளிக்கப்படும். இங்கு கவனிக்க

வேண்டியது என்னவென்றால் கணேசனுக்குத் தனியாகக் கடனீந்தோர்கள் தங்களுடைய முழுத்தொகையாகிய ரூ.4,000த்தையும் கோர முடியாது. இவ்வாறு தனி நபரைப் பொறுத்த வரையில் சொந்த சொத்துக்கள் மற்றும் பொறுப்பபுகளுக்குமிடையே வேறுபாடு எதும் காட்டப்படுவதில்லை.

ஆனால் கூட்டு நிறுவனத்தில் நிறுவனத்தின் சொத்துக்களும் மற்றும் கூட்டாளிகள் சொந்தச் சொத்துக்களுக்கிடேயும் நிறுவனத்தின் பொறுப்புகளுக்கும் மற்றும் கூட்டாளிகளின் சொந்தப் பொறுப்புகளுக்குமிடையேயுள்ள ஒரு வேறுபாடு பொறுப்புகளைச் செலுத்தவே முதலில் பயன்படுத்த வேண்டும். செலுத்திய பின் உபரி ஏதேனுமிருந்தால் அதனைக் கொண்டு நிறுவனத்தின் பொறுப்புகளைச் செலுத்தலாம். இதே போல் நிறுவனத்தின் பொறுப்புகளைச் செலுத்தவே நிறுவனத்தின் சொத்துக்களை முதலில் பயன்படுத்த வேண்டும். நிறுவனத்தில் ஏதேனும் உபரி இருந்தால் ஒரு கூட்டாளி உபரியில் தன்னுடைய பங்கினை எடுத்து தன்னுடைய சொந்தக் கடனை செலுத்தலாம். ஒரு கூட்டாளியின் பற்றாக்குறையை (அக்கூட்டாளியின் சொந்தச் சொத்துக்கள் அவருடைய சொந்த பொறுப்பினை காட்டிலும், குறைவாயிருக்கும் பொழுது நிறுவனத்தின் நிலைமை விவரத்திற்கு மாற்ற முடியாது. ஆகவே நிறுவனத்திற்கு மற்றைய கூட்டாளிகளுக்கும் தனித்தனியே நிலைமை விவரங்கள் தயாரிக்கப்பட வேண்டும்.

குறிப்பு

**உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்கள்**

**கோடிட்ட இடத்தை நிரப்புக:**

அ. முதன்மை நகர நொடிப்பு நிலைச் சட்டம் ......... மற்றும் ..................நகரங்களுக்கு பொருந்தும்.

ஆ. நொடிப்பு நிலையில், முதன்னை நகர நொடிப்பு நிலைச் சட்டப்படி சொத்துக்கள் ......... கீழும், மாநில நொடிப்பு நிலை சட்டப்படி சொத்துக்கள ........கீழும் ஒப்படைக்கப்படும்.

இ. பற்றாக்குறையை கணக்கிட .................. தயாரிக்கப்படும்.

ஈ. பற்றாக்குறை காரணத்தை கண்டுபிடிக்க .................. தயாரிக்கப்படும்.

உ. பட்டியல் D ....... கடனீந்தோர்களை உள்ளடக்கும்.

**எடுத்துக்காட்டு : 4**

கூட்டு நிறுவனத்தின் கூட்டாளிகளான பாலனும், இளங்கோவும் நொடிப்பு நிலை மனுவினைச் சமர்பித்தனர். கீழ்கண்ட விவரங்களிலிருந்து கூட்டாளிகளுடைய சொத்துக்களின் நிலைமை விவரம் மற்றும் பற்றாக்குறை ஆகியவற்றைத் தயாரிக்கவும்.

| | பாலன் மற்றும் இளங்கோ அன்கோ | பாலன் | இளங்கோ |
|---|---|---|---|
| பிணையில்லாச் சொத்தின் மீதான அடமானம் | 1500 | — | — |
| வங்கி அதிகப்பற்று | 1,500 | — | — |
| பற்பல கடனீந்தோர்கள் | 6,200 | 750 | 1,450 |
| முன்னுரிமை கடனீந்தோர்கள் | 50 | — | — |
| மூலதனம்—பாலன் | 1,500 | — | — |
| இளங்கோ | 1,000 | — | — |
| உபரி | | 2,500 | 550 |
| | 11,750 | 3,250 | 2,000 |
| பிணையில்லாச் சொத்துக்கள் | 3,000 | | |
| பொறி | 3,250 | | |
| மனைத்துணைப்பொருள்கள் | 200 | 500 | 600 |
| சரக்கிருப்பு | 2,750 | | |
| கடனாளிகள் | 2,500 | | |
| முதலீடுகள் | — | 1,250 | 400 |
| ரொக்கம் | 50 | | |
| கூட்டு வணிகத்தில் மூலதனம் | — | 1,500 | 1,000 |
| | 11,750 | 3,250 | 2,000 |

1. வங்கி அதிகப்பற்றுக்கு பிணையில்லாச் சொத்துக்கள் இரண்டாம் அடமானமாகக் கொடுக்கப்பட்டன. மேலும் இந்த அதிகபற்றுக்கு இளங்கோவின் முதலீடுகளும் பிணையாகக் கொடுக்கப்பட்டு இளங்கோவினால் ஒப்புறுதியளிக்கப்பட்டது.
2. நிறுவனத்தின் சொத்துக்களை விற்கும் போது கிடைக்கும் தொகைகளாவன

| | ரூ. |
|---|---|
| பிணையில்லா சொத்துக்கள் | 2,250 |
| பொறி | 1,500 |
| மனைத்துணைப் பொருள் | 75 |

| | |
|---|---|
| சரக்கிருப்பு | 1,550 |
| கடனாளிகள் | |
| நல்லவை | 1287—50 |
| ஐயக்கடன் (ரூபாய் ஒன்றுக்கு 50 பைசா வீதம்) | 75 |
| வராக்கடன் | 712—50 |

3. கூட்டாளிகளின் சொத்துக்களை விற்கும் போது கிடைக்கும் தொகைகள்

| | |
|---|---|
| பாலன் மனைத்துணைப் பொருள் | 300 |
| முதலீடுகள் | 1,000 |
| இளங்கோ மனைத்துணைப் பொருள் | 400 |
| முதலீடுகள் | 150 |

பாலன் மற்றும் இளங்கோ ஏடுகளில் (பற்றாக்குறைக் கணக்கு பட்டியல் எச்)

| | ரூ. | பை. | | ரூ. | பை. | ரூ. | பை. |
|---|---|---|---|---|---|---|---|
| பொறுப்புகளைக் காட்டிலும் அதிகமான சொத்துக்களை (அதாவது மூலதனம்) | | | வராக்கடன் தீர்வில் ஏற்பட்ட நட்டம் பொறி | 1,750 | 00 | 962 | 50 |
| பாலன் | 1,500 | 00 | மனைத்துணைப் பொருள் | 125 | 00 | | |
| இளங்கோ | 1,000 | 00 | சரக்கிருப்பு | 1,200 | 00 | | |
| இலாபம்: பாலனின் சொத்திலிருந்து கிடைத்த உபரி | 550 | 00 | பிணையில்லாச் சொத்துக்கள் | 750 | 00 | 3,825 | 00 |
| பற்றாக்குறை | 1,787 | 00 | | | | | |
| | 4,787 | 00 | | | | 4,787 | 00 |

பாலன் மற்றும் இளங்கோ ஆகியோரின் நிலைமை விவரம் .... தேதியன்று

| மொத்த பொறுப்புகள் | பொறுப்புகள் | | எதிர்பார்க்கப் படும் பொறுப்பின் அளவு | சொத்துக்களும் ஆஸ்திகளும் | ஏட்டு மதிப்பு | எதிர்பார்க்கப் படும் தொகை |
|---|---|---|---|---|---|---|
| ரூ. | | | ரூ. | | ரூ. | ரூ. |
| 6,200.00 | பிணையில்லாக் கடனீந்தோர்கள் பட்டியல் எ—யின்படி | | 6200.00 | சொத்துக்கள் பட்டியல் இ—ன்படி | 50.00 | 50.00 |
| | | | | ரொக்கம் | 1250.00 | 1500.00 |
| 1500.00 | முழுப்பிணைக் கடனீந்தோர்கள் (பட்டியல்பி—யின்படி) | 1,500.00 | | பொறி | | |
| | | | | மனைத்துணைப் பொருள் | 200.00 | 75.00 |

குறிப்பு

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | (பட்டியல்பி—யின்படி) | 1,500.00 | | சரக்கிருப்பு | 2750.00 | 1550.00 |
| | கழி<br>பிணையங்களின்<br>மதிப்பு | 2,250.00 | | பாலனின்<br>சொத்துக்களிலிருந்து<br>கிடைத்தது ஏட்டுக்கடன்கள்<br>(பட்டியல் எப்—யின்படி) | | 550.00 |
| | எதிர்புறம்<br>மாற்றப்படும் உபரி | | | நல்லவை<br>ஐயக்கடன் | 1287.00 | 1287.00 |
| 1500.00 | பகுதியினை<br>கடனீந்தோர்கள்<br>(பட்டியல்சி—யின்படி) | 750.00 | | வராக்கடன்<br>கிடைக்குமென<br>எதிர்பார்த்தது | 500.00<br>712.00 | |
| | கழி: பிணையங்—<br>களின் மதிப்பு | | 750.00 | | | 250.00 |
| | முன்னுரிமை<br>பட்டியல் ஜி—ன்படி<br>பட்டியல் டி—ன் படி<br>கழி: எதிர்புறத்தில்<br>குறைந்தது | 1,500.00<br>750.00 | | கழி: எதிர்புறத்தில் உள்ள<br>முன்னுரிமை<br>கடனீந்தோர்கள்<br>பற்றாக்குறை பட்டியல் (எச்—ல் விளக்கியவாறு) | | |
| | | 50.00 | | | | 5262.00<br>50.00 |
| | | 50.00 | | | | 5212.50<br>1737.50 |
| 6950.00 | | 6950.00 | | | 8749.50 | 6950.00 |

## பாலனின் ஏடுகளில் நிலைமை விவரம் ...... தேதியன்று

| மொத்த பொறுப்புகள் | பொறுப்புகள் | | எதிர்பார்க்கப் படும் பொறுப்பின் அளவு | சொத்துக்களும் ஆஸ்திகளும் | ஏட்டு மதிப்பு | எதிர்பார்க்கப் படும் தொகை |
|---|---|---|---|---|---|---|
| ரூ. | | | ரூ. | | ரூ. | ரூ. |
| 750.00 | பிணையில்லாக் கடனீந்தோர்கள் (பட்டியல் எ—யின்படி) உபரி (பட்டியல் எச்—ல்) கூறியுள்ளவாறு) | | 750.00<br>550.00 | சொத்துக்கள் பட்டியல் இ—ன் படிமனைத்துணைப் பொருள்<br>முதலீடுகள் | 500.00<br>1250.00 | 300.00<br>1,000.00 |
| 750.00 | | | 1,300.00 | | 1,750.00 | 1,300.00 |

## பற்றாக்குறை (கணக்கு பட்டியல் எச்)

| | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|
| பொறுப்புகளிலும் மிகுந்த சொத்துக்கள் | 2500 | தீர்வில் ஏற்பட்ட நட்டம் | | |
| | | மனைத்துணைப் பொருள் | 200 | |
| | | முதலீடுகள் | 250 | |
| | | நிறுவனத்தில் ஏற்பட்ட மூலதன நட்டம் | 1500 | 1950 |
| | | உபரி | | 550 |
| | 2500 | | | 2500 |

## இளங்கோவின் ஏடுகளில் நிலைமை விவரம் ...... தேதியன்று

| மொத்த பொறுப்புகள் | பொறுப்புகள் | எதிர்பார்க்கப் படும் பொறுப்பின் அளவு | சொத்துக்களும் ஆஸ்திகளும் | ஏட்டு மதிப்பு | எதிர்பார்க்கப் படும் தொகை |
|---|---|---|---|---|---|
| ரூ. | | ரூ. | | ரூ. | ரூ. |
| 1450.00 | பிணையில்லாக் கடனீந்தோர்கள் (பட்டியல்எ—யின்படி) | 1450.00 | சொத்துக்கள் பட்டியல் இ—ன்படி ரொக்கம் மனைத்துணைப் பொருள் | 600.00 | 400.00 |
| 750.00 | பகுதிப்பிணைக் கடனீந்தோர்கள் (பட்டியல் சி—யின் படி) ரூ. 187.50 பிணையங்களின் மதிப்பு ரூ. 150.00 | 37.50 | பற்றாக்குறை (பட்டியல் எச்) | | 1,087.50 |
| 2200 | | 1487.50 | | 600.00 | 1487.50 |

$ வங்கி அதிகப்பற்று ரூ. 1500 இதில் ரூ. 750 பிணையில்லாச் சொத்தில் மீதியிருந்த அடமானத்திலிருந்து கிடைத்தது. ஆகவே மீதித் தொகை ரூ. 750 ஆகும். வங்கி பெறக்கூடிய தொகை

$$\frac{5212.50}{6.950.00} x 750$$

= ரூ. 562.50 ஆகும். இது நிறுவனத்தில் சொத்துகளிலிருந்து கிடைத்தது. மீதமுள்ள ரூ. 187.50 (750—562.50) வை இளங்கோ அளித்த பிணையங்களிலிருந்து பெற வேண்டும்.

## இளங்கோவின் ஏடுகளின் பற்றாக்குறை கணக்கு (பட்டியல்)

| | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|
| பொறுப்புகளிலும் மிகுந்த சொத்துக்கள் | 550.00 | தீர்வில் ஏற்பட்டநட்டம் மனைத்துணைப் பொருள் | 200.00 | |
| பற்றாக்குறை | 1087.00 | முதலீடுகள் | 250.00 | |
| | | வங்கிக்குச் செலுத்தியது | 187.50 | |
| | | நிறுவனத்தில் ஏற்பட்ட மூலதன நட்டம் | 1000.00 | 1637.50 |
| | 1637.50 | | | 1,637.50 |

குறிப்பு

**சரியா / தவறா**

1. பற்றாக்குறை காரணத்தை அறிய நிலைமை இருப்பு பட்டியல் தயாரிக்கப்படும்.

2. அடமான சொத்தை விற்றதில் கிடைத்த உபரித் தொகையை அடமான கடனீந்தோர் வைத்துக் கொள்ளலாம்.

3. பகுதி அடமான கடனீந்தோர், தங்கள் தீர்க்கப்படாத கடன் தொகைக்காக முன்னுரிமை கடனீந்தோருடன் சேர்த்து கொள்ளலாம்.

4. தன்னுடைய சீதனச் சொத்திலிருந்து மனைவி கடன் கொடுத்திருந்தால், அவர் அடமானமில்லா கடனீந் தோராக கருதப்படுவார்.

5. வாடகை கொடுபட வேண்டியது, முதன்மைநகர மற்றும் மாநில நொடிப்பு சட்டங்கள் இரண்டிலும் முன்னுரிமை கடனாக கருதப்படும்.

6. முன்னுரிமை கடனீந்தோரும் அடமானமில்லா கடனீந் தோர்களே.

## 5.5. அருஞ்சொற்கள்:

**முன்னுரிமை கடனீந்தோர்கள் :**

சில அடமானமில்லா கடனீந்தோர்கள் சட்டவிதிகள் படி, பிற கடனீந்தோர்களுக்கு முன்பாக பணம் பெற உரிமை உடையவர்கள்.

**பகுதி கடனீந்தோர் :**

இவர்களுடைய கடன் முழுவதும், அடமானச் சொத்துக்களால் தீர்க்கப்படாமல், பகுதிகடன்களுக்கு மட்டும் அடமானச் சொத்தின் மதிப்பு இருக்கும்.

**பற்றாக்குறை கணக்கு :**

பற்றாக்குறைக்கான காரணம் மற்றும் நியாயம் தெரிந்திட தயாரிக்கப்படுவது.

**முழுஅடமான கடனீந்தோர் :**

இவர்களது கடன்தொகை முழுவதும் அடமானச் சொத்துக்களின் மதிப்பால் கவரப்படும்.

## 5.6. தொகுத்தறிவோம்

இன்று இந்தியாவில் நொடிப்புநிலை சம்மந்தமாக முதன்மை நகரத்திற்கு என்றும், பிற மாநிலங்களுக்கு என்றும் இரண்டு சட்டங்கள் உள்ளன. ஒருவர் அல்லது ஒரு நிறுவனம் நொடிப்பு நிலையடைந்தால், முதலில் பற்றாக்குறை தொகையை கணக்கிட வேண்டும். இது சொத்துமதிப்பைவிட அதிகப்படியாக உள்ள பொறுப்பை குறிக்கும். பின்பு இந்த பற்றாக்குறையை நியாயப்படுத்தவும், காரணத்தை கண்டறியும் பொருட்டும் பற்றாக்குறை கணக்கு தயாரிக்கப்படும். கடன்கள், அடமான கடன், பகுதி அடமான கடன் மற்றும் முன்னுரிமை கடன் என நான்கு வகைப்படும். சொத்துக்களும் அடமான சொத்துக்கள், அடமானம் வைக்கப்படாத சொத்துக்கள் என இருவகையாக பிரிக்கப்படுகிறது. நொடிப்பு நிலைக்கு பிறகு ஒருவர் எதிர்காலத்தில் சட்டபூர்வமாக நல்லமுறையில் வேறு தொழில் துவங்குவதற்கு இந்த நொடிப்புநிலைச் சட்டம்

உதவுகின்றது. மேலும் நொடிப்பு நிலை நடவடிக்கையின் போது எந்தவித பாரபட்சமும் நடைபெறாவண்ணமும் இது தடுக்கின்றது.

## 5.7. உங்கள் முன்னேற்றத்தை சரிபார்க்கும் வினாக்களின் விடைகள்

**கோடிட்ட இடத்தை நிரப்புக:**

அ. பம்பாய், டில்லி, சென்னை

ஆ. சொத்தாட்சி அலுவலர், நொடித்தவர் சொத்தாட்சியர்

இ. இருப்புப்பட்டியல்

ஈ. பற்றாக்குறை கணக்கு

உ. முன்னுரிமை

**சரியா / தவறா :**

(1) தவறு (2) தவறு (3) தவறு (4) சரி(5) தவறு (6) சரி

## 5.8. மாதிரி வினாக்கள்

1. இருப்புநிலைபட்டியல் மற்றும் பற்றாக்குறை கணக்கு – வேறுபடுத்துக.

2. சிறுகுறிப்பு எழுதுக.

அ) முன்னுரிமை கடனீந்தோர்

ஆ) நொடிப்புநிலைச் சட்டங்கள்

3. பம்பாயைச் சேர்ந்த குருமூர்த்தி என்பவரது சொத்துக்கள் மதிப்பு 30.6.2004 அன்று ரூ.28,000ம் பொறுப்புகள் ரூ.22,000ம் ஆகும். அவர் ரூ.15,000 பற்றாக்குறை எனக் கூறி நொடிப்பு நிலைக்கு விண்ணப்பிக்கின்றார். பின்பு கீழ் உள்ள பொறுப்புகள் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படவில்லை என கண்டு கொள்கிறார்.

1.1.2004ல், முதல் மீது வட்டி ஆண்டு 6% வீதம், ரூ.5,000க்கு மாற்றுச்சீட்டு தள்ளுபடி செய்த வகையில் எதிர்பார்க்கப்படும் பொறுப்பு ரூ.1,250. கொடுபடா கூலி ரூ.300, வாடகை ரூ.100 மற்றும் வாடகை வரி ரூ.150 ஆகும். நொடிப்புநிலைச் சட்டபடி நொடிப்புநிலைக் கணக்குகள் தயாரிக்கவும்.

(விடை : பற்றாக்குறை ரூ.23,250; பற்றாக்குறை கணக்கு மொத்தக் கூட்டல் — 22,800)

(4) மதன்லால் என்பவர் 31.12.2004 அன்று தான் திவாலானதாக உணர்கிறார். அவருடைய நிலைமை:

கடனாளிகள் — நல்லவை ரூ.5,000; ஐயக்கடன் ரூ.30,000; (வசூலிக்க கூடியது ரூ.25,000); வராக்கடன் ரூ.15,000.

1000 பங்குகள் A&கம்பெனியில் (எதிர்பார்க்கும் விற்பனை மதிப்பு ரூ.15,000) ரூ.25,000

B கம்பெனியில் பங்குகள் (எதிர்பார்ப்பது ரூ.75,000) ரூ.91,500

பந்தயம் கட்டியதில் நட்டம ரூ.2,000

பற்பல கடனீந்தோர்கள் ரூ.85,600

B கம்பெனி பங்குகள் மீது ரூ.25,000 வரை இரண்டாவது அடமானக்கடன் ரூ.30,000

B கம்பெனி பங்குகள் மீது முதல் அடமான கடன் ரூ.40,000

செலுத்தற்குரிய மாற்றுச்சீட்டு ரூ.4,000

வாடகை வரி கடன்கள் (ரூ.4,600 முன்னுரிமை) ரூ.5,000

தளவாடம் (விற்பனை மதிப்பு ரூ.3,000) ரூ.15,000

ரொக்கம் ரூ.550

சரக்கிருப்பு (விற்பனை மதிப்பு ரூ.30,450) ரூ.3,3950

மாற்றுச்சீட்டு (விற்பனை மதிப்பு ரூ.7,000) ரூ.9,000

மதன்லால் 1.1.2002 அன்று ரூ.70,000 மூலதனத்துடன் தொழிலை துவங்கினார். முதல் கணக்கு வருடங்களில் ரூ.8,900 மற்றும் 10,000 லாபம் ஈட்டினார். மூன்றாம் வருடம் நட்டம் ரூ.5,000. எல்லா வருடமும் ரூ.3500 முதல் மறு வட்டி எழுதியுள்ளார். இதுவரை மொத்தம் ரூ.3,000 எடுப்பு செய்துள்ளார். இருப்புநிலைப்பட்டியல் மற்றும் பற்றாக்குறை கணக்கு தயாரிக்கவும்.

(விடை: பற்றாக்குறை ரூ.3,600)

